


திராவிடப் பல்கலைக்கழகம்

# ஆய்வுக்களம்

முதுகலை மாணாக்கர்களின் ஆய்வேடு (April 2025) - தொகுப்பு








ந சுப்பு ரெட்டியார்100

*Centenary Committee Publications*

# அணிந்துரைகள்

தொகுப்பாளர்
ந இரவிச்சந்திரன்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

பேராசிரியர் ந சுப்பு ரெட்டியார் அவர்களின் அனைத்து நூல்களும் பலஅறிஞர் பெருமக்களின் அணிந்துரைகளைப் பெற்றுள்ளன. அனைத்து அணிந்துரைகளும், அன்னாரது நூல்களின் திறம், உரம், ஆழம், வீச்சு, ஆராய்ச்சித் திறன், நுண்ணிய இலக்கியத் திறனாய்வு மற்றும் பல சிறப்பியல்புகளை கோடிட்டு குறியிட்டு பாராட்டுகின்றன; பறைசாற்றுகின்றன.

ந சுப்பு ரெட்டியார் 100
Centenary Committee Publications

ISBN: 978-81-939502-8-9




eBOOK ~ மின் நூல்

**திராவிடப் பல்கலைக்கழகம்**

# ஆய்வுக்களம்

**முதுகலை மாணாக்கர்களின் ஆய்வேடு (April 2025) -<::> தொகுப்பு**

**<u>தொகுப்பு:</u>**
முனைவர் பூ.சு.கணேஷ் மூர்த்தி
உதவிப்பேராசிரியர்
தமிழ்மொழி மற்றும் மொழிபெயர்ப்புத்துறை
திராவிடப் பல்கலைக்கழகம்
சீனிவாசவனம்
குப்பம் - 517 426
ஆந்திர மாநிலம்




**ந சுப்பு ரெட்டியார்100**

*Centenary Committee Publications*

**திராவிடப் பல்கலைக்கழகம்**
**ஆய்வுக்களம்**
முதுகலை மாணாக்கர்களின் ஆய்வேடு (April 2025) - தொகுப்பு



**மே 2025**

**Published by:**

**ந சுப்பு ரெட்டியார் 100**
*Centenary Committee Publications*
**Na Subbu Reddiar 100 Educational Trust**
**AD-13, 5th Street, Anna Nagar West, Chennai – 600 040**

978-81-984404-0-2




Wrapper Design: **Centenary Committee**
Printed at: DJ Prints, Chennai – 600 095

# பதிப்புரை

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார் அவர்கள் எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று, ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர். திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர். பல பல்கலைக்கழகங்களில் சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி, நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர். பல ஆய்வாளர்களை உருவாக்கியவர். வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர். **136 [135 +1]** நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015 – 2016) 108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும் மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

பேராசிரியரின் நூற்றாண்டில் (2015 – 2016) நூற்றாண்டுக்குழு தமிழகமெங்கும் நடத்திய 108 நிகழ்வுகள் அகில இந்திய சாதனையாக அங்கீகரிக்கப் பெற்றுள்ளன. நூற்றாண்டில் பேராசிரியரின் தமிழ்த்திறத்தையும், அறிவுநுட்பத்தையும் வெளிக்கொணரும் பொருட்டு பன்னிரெண்டு நூட்கள் வெளியிட்டப்பெற்றன.

அவரது 120 நூல்கள், இந்திய அரசு நல்கிய **ISBN** எண்களுடன், மின் நூல்களாக மாற்றுப்பெற்று https://archive.org/details/@centenary1916nsr2016 என்ற இணைதளத்தில் அனைவரும் பதிவிறக்கம் செய்யும் வகையில் அமைக்கப்பெற்றுள்ளன.

பேராசிரியரின் படைப்பான "*கவிஞர் வாலியின் இராமாநுஜ காவியம் – ஒரு மதிப்பீடு*" எனும் நூலை பேராசிரியரின் நூற்றாண்டிற்குப் பின்பும் (102வது) , இராமாநுஜரின் ஆயிரமாண்டிற்குப் பின்பும் (1002வது) நூற்றாண்டுக்குழு 2018ல் வெளியிட்டது.

பேராசிரியரின் நூட்களை அடித்தளமாக்கொண்டு சுமார் 35 முதுகலைப்பட்ட மாணாக்கர்கள், ஆய்வியல் நிறைஞர் மாணாக்கர்கள் மற்றும் முனைவர் பட்ட ஆய்வாளர்கள் பல்வேறு பல்கலைக் கழகங்களில் (சென்னைப் பல்கலைக்கழகம், மதுரை காமராஜ் பல்கலைக்கழகம், பாரதிதாசன் பல்கலைக்கழகம், மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம், அழகப்பா பல்கலைக்கழகம், திராவிடப் பல்கலைக்கழகம் மற்றும் தமிழ்நாடு ஆசிரியர் கல்வியியல் பல்கலைக்கழகம்) ஆய்வு மேற்கொண்டு சமர்ப்பித்த ஆய்வேடுகள் பின்னர் நூல்களாக வெளியிடப்பெற்றன.

நான்கு முனைவர் பட்ட ஆய்வாளர்கள் ஆய்வு மேற்கொண்டு, சென்னை பல்கலைக் கழகம், மதுரை காமராஜ் பல்கலைக் கழகம் மற்றும் பாரதியார் பல்கலைக் கழகம் ஆகியவற்றில் ஆய்வேடு சமர்ப்பித்து முனைவர் பட்டம் பெற்றுள்ளனர். இருபத்து இரண்டு முதுகலை பட்ட மாணாக்கர்கள் ஆய்வேடு சமர்ப்பித்து முதுகலை பட்டம் பெற்றுள்ளனர். பதினான்கு ஆய்வியல் நிறைஞர் மாணாக்கர்கள் ஆய்வேடு சமர்ப்பித்து ஆய்வியல் நிறைஞர் பட்டம் பெற்றுள்ளனர்.

சாகித்திய அகாதெமி “இந்திய இலக்கிய சிற்பிகள்” என்னும் வரிசையில் பேராசிரியரின் வாழ்க்கையினை நூல் வடிவில் கொண்டுவர முடிவுசெய்து, அந்நூலை 2024ல் வெளியிட்டது.

தமிழ்த்துறை, திராவிடப் பல்கலைக்கழகம் பரிந்துரைத்த இரண்டு முதுகலைப்பட்ட மாணாக்கர்கட்கு **ந சுப்பு ரெட்டியார் 100 கல்வி அறக்கட்டளை “NSR100 Kamatchi Ammal Fellowship”** வழங்கியது. அதன்கீழ், கீழ்க்கண்ட நூல்களை ஆய்வுக்குரிய மையக்கருத்தாக தேர்ந்தெடுத்து திறனாய்வு செய்த முதுகலைப்பட்ட மாணாக்கர்கட்கு உதவித்தொகையும், நூலைத் தேர்ந்தெடுக்க ஆலோசனையும், தேர்ந்தெடுக்கப் பெற்ற நூலும் வழங்கப்பெற்றன.

## திறனாய்வு செய்த மாணாக்கர்கள்:

ப விஜயலட்சுமி (Reg.No. 11700123001)
கோ அரவிந்த் (Reg.No. 11700123006)

## ஆய்வேட்டின் தலைப்புகள்:

**01) பன்முக நோக்கில் பேராசிரியர் ந சுப்புரெட்டியார் நூல்களின் அணிந்துரைகள்**
**02) கி ராவின் கரிசல் உலகப் பண்பாட்டுப் பதிவுகள்**

## தெரிவு செய்யப்பெற்ற நூல்கள்:

01) **பேராசியரின் அணிந்துரைகள்**
https://archive.org/details/forewords_202001

02a) **கி ராவின் கரிசல் உலகம்**
https://archive.org/details/ki-raa-karisal-ulagam-do-tamil-mgr
02b) **கரிசல் களம்**
https://archive.org/details/ki-raa-karisal-kalam-du-tamil

**திராவிடப் பல்கலைக்கழகம்**
**ஆய்வுக்களம்**
முதுகலை மாணாக்கர்களின் ஆய்வேடு (April 2025) - தொகுப்பு

எனும் நூலாக வெளியிடப் பெறுகின்றது. நூலின் இரு படிகள் ஒவ்வொரு மாணாக்கர்கட்கும், 4 படிகள் திராவிடப் பல்கலைக்கழகத்திற்கும் வழங்கப்பெறுகின்றன.

# பொருளடக்கம்

## தமிழ்மொழி மற்றும் மொழிபெயர்ப்புத்துறை
(திராவிடப் பல்கலைக்கழகம்)
**முதுகலை பட்ட மாணாக்கர்களின் (2023 – 2025) ஆய்வேடு**

Compilation of Dissertations submitted by the Recipients of **'NSR100 Kamatchi Ammal Fellowship'** provided by **Na Subbu Reddiar 100 Educational Trust** in the Department of Tamil Language & Translational Studies of Dravidian University, Kuppam, Andhra Pradesh.

# பன்முக நோக்கில் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் நூல்களின் அணிந்துரைகள்

**Panmuga Nokkil Perasiriyar Na. Subbureddiyar Noolgalin Aninthuraigal**

திராவிடப் பல்கலைக்கழக முதுகலைப் பட்டத்தின் ஒரு பகுதியாக அளிக்கப் பெறும் ஆய்வேடு

Dissertation submitted to Dravidian University in partial fulfillment for the award of **M.A.Degree**


ஆய்வாளர்

**ப.விஜயலட்சுமி**

Submitted By

**P. VIJAYALAKSHMI**

Reg. No: **11700123001**

நெறியாளர்

**முனைவர் பூ.சு.கணேஷ் மூர்த்தி**, எம்.ஏ., பி.எச்.டி., பிடிஎஃப்

உதவிப் பேராசிரியர்

Under the guidance of

**Dr. P. S. GANESH MOORTHY,** M.A., Ph.D., PDF

Assistant Professor**.**






**தமிழ்மொழி மற்றும் மொழிபெயர்ப்பியல் துறை.**

**திராவிடப் பல்கலைக்கழகம்.**

**குப்பம் - 517 426,**

**ஆந்திரப்பிரதேசம்.**

Department of Tamil Language and Translation Studies, Dravidian University, Kuppam.


**ஏப்ரல் (April) - 2025**

இரண்டாம் பதிப்பு

Selective Collection

“ ”

# அணிந்துரைகள்

பேராசிரியர் ந சுப்பு ரெட்டியார் அவர்களின் அனைத்து நூல்களுக்கும் பல அறிஞர் பெருமக்கள் - பல்கலைக் கழகத் துணைவேந்தர்கள், நீதியரசர்கள், தமிழ்ச் சான்றோர், ஆளுநர்கள், அமைச்சர் பெருமக்கள், கல்வித்துறை சான்றோர்கள், மற்றும் பிற பல, பிரபல பேரறிஞர்கள் - அணிந்துரை வழங்கிச் சிறப்பித்துள்ளனர்.

அனைத்து அணிந்துரைகளும், அன்னாரது நூல்களின் திறம், உரம், ஆழம், வீச்சு, ஆராய்ச்சித் திறன், நுண்ணிய இலக்கியத் திறனாய்வு மற்றும் பல சிறப்பியல்புகளை கோடிட்டு குறியிட்டு பாராட்டுகின்றன; பறைசாற்றுகின்றன. மேலும் இவ்வணிந்துரைகள், அன்னாரது நூல்களின் தனிச் சிறப்புகளை - இனிமை, எளிமை, தெளிவு - தெள்ளதின் காட்டி படிப்போரை அக மகிழ்விக்கின்றன.

தொகுப்பாளர்
**நீ இரவிச்சந்திரன்**



“Persons attempting to find a motive in this narrative will be prosecuted; persons attempting to find a moral in it will be banished; persons attempting to find a plot in it will be shot.”

< **Mark Twain,** *The Adventures of Huckleberry*



1916 2016

ந சுப்பு ரெட்டியார் 100

Centenary Committee Publication

# அணிந்துரைகள்

தொகுப்பாளர்
நீ இரவிச்சந்திரன்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

பேராசிரியர் ந சுப்பு ரெட்டியார் அவர்களின் அனைத்து நூல்களும் பலஅறிஞர் பெருமக்களின் அணிந்துரைகளைப் பெற்றுள்ளன. அனைத்து அணிந்துரைகளும், அன்னாரது நூல்களின் திறம், உரம், ஆழம், வீச்சு, ஆராய்ச்சித் திறன், நுண்ணிய இலக்கியத் திறனாய்வு மற்றும் பல சிறப்பியல்புகளை கோடிட்டு குறியிட்டு பாராட்டுகின்றன; பறைசாற்றுகின்றன.

**ந சுப்பு ரெட்டியார் 100**
*Centenary Committee Publications*

ISBN: 978-81-939502-8-9

eBOOK ~ மின் நூல்



## நன்றியுரை

திராவிடப் பல்கலைக்கழகத்தில் முதுகலைப்பட்ட ஆய்வினை மேற்கொள்ள அனுமதி அளித்த தமிழ்மொழி மற்றும் மொழிபெயர்ப்பியல் துறைக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். முதுகலைப் பட்டம் பெறுவதற்காக "**பன்முக நோக்கில் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் நூல்களின் அணிந்துரைகள்**" என்ற தலைப்பில் ஆய்வு செய்வதற்கு வாய்ப்பளித்த தமிழ்மொழி மற்றும் மொழிபெயர்ப்பியல் துறைக்கும் துறைத்தலைவர் **பேராசிரியர் த.விஷ்ணுகுமாரன்** அவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுத் தொடர்பான கருத்துகளை வழங்கி என்னை வழி நடத்திய எனது நெறியாளர் உதவிப்பேராசிரியர் **முனைவர் பூ.சு.கணேஷ்மூர்த்தி** அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும் தமிழ்த்துறையைச் சேர்ந்த இணைப்பேராசிரியர் **முனைவர் கு.பத்மநாபன்** அவர்களுக்கும் உதவிப்பேராசிரியர்களான **முனைவர் க.மாரியப்பன் மற்றும் முனைவர் வ.கலையரசி** அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வு மேற்கொள்ளத் தேவையான நூல்களை வழங்கிய திராவிடப் பல்கலைக்கழக நூலகத்தாருக்கும் பேராசியர் ந.சுப்புரெட்டியாரின் அணிந்துரைகளை உள்ளடக்கிய நூலினை

வழங்கிய ந.சுப்புரெட்டியார் 100 அறக்கட்டளை நிறுவனர் பேராசியர் சு.இராமலிங்கம் அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழ்த்துறையைச் சேர்ந்த முனைவர்பட்ட ஆய்வாளர்களுக்கும் முதுகலை மாணவர்களுக்கும் எனது நன்றியை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

என்னைக் கல்விப் பாதையில் முன்னேற்றமடையச் செய்த எனது பெற்றோர் திரு.செ.பழனியப்பன் திருமதி.ப.சாந்தி அவர்களுக்கும் எனது சகோதரர் திரு.ப.திருமுருகன் அவர்களுக்கும் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**ப.விஜயலட்சுமி**

# பொருளடக்கம்

# சுருக்கக்குறியீடு

1. ப - பக்கம்
2. ப.எ - பக்க எண்
3. மேலது - மேலே குறிப்பிடப்பட்டது
4. பேரா - பேராசிரியர்
5. தி.த.இ - திருவேங்கடமும் தமிழ் இலக்கியம்
6. அ.ப - அர்த்த பஞ்சகம்
7. ந.ச - நவவித சம்பந்தம்
8. த.அ.செ - தமிழில் அறிவியல் செல்வம்
9. பெரி.திரு - பெரியாழ்வார் திருமொழி
10. கரு.புரா - கருட புராணம்
11. மு.தி - முதல் திருவந்தாதி
12. இ.தி - இரண்டாம் திருவந்தாதி
13. மூ.தி - மூன்றாம் திருவந்தாதி
14. தி.ப - திருப்பல்லாண்டு
15. கு.பா.ஒ - குயில் பாட்டு ஒரு மதிப்பீடு
16. த.பெ.சி - தந்தை பெரியார் சிந்தனைகள்
17. மூ.தே - மூவர் தேவாரம்
18. நா.திரு - நாச்சியார் திருமொழி

# முன்னுரை

தமிழ் மொழிக்குத் தொண்டாற்றிய அறிஞர்களுள் ஒருவர் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். அவர் தமது வாழ்நாளில் தமிழ் இலக்கியத்திற்கு ஆற்றிய சேவை அளப்பெரியது. பிற துறைகள் சார்ந்த நூல்களை ஆராய்ந்து அவற்றின் தனிச்சிறப்புகளைத் தமிழ் மொழிக்கு கொண்டு சேர்த்து தமிழன்னைக்குச் சிறப்பு சேர்க்கும் வகையில் சிறந்த பல படைப்புகளைப் படைத்துள்ளார். அவரது நூல்களுக்கு தமிழ் ஆர்வலர்கள் மற்றும் நாட்டில் உயர் பதவி வகிக்கும் சான்றோர்கள் அணிந்துரைகள் வழங்கியுள்ளனர். இவ்வணிந்துரைகள் வழிப் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் நூல்களிலுள்ள தனித்தன்மைகளை ஆராயும் வண்ணம் இவ்வாய்வானது மேற்கொள்ளப்படுகிறது.

**ஆய்வுத்தலைப்பு** :

"**பன்முக நோக்கில் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் நூல்களின் அணிந்துரைகள்**" என்பதே இவ்வாய்வின் தலைப்பாக அமைந்துள்ளது.

**ஆய்வு நோக்கம்** :

பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் நூல்களுக்கு நாட்டில் உயர் பதவி வகிக்கும் பெருமக்கள் அளித்த அணிந்துரைகளை ஆராய்ந்து அவற்றின் தனித்தன்மைகளை எடுத்துக் கூறுவதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

**ஆய்வு எல்லை**:

பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்களின் நூல்களுக்கு நாட்டில் உயர் பதவி வகிக்கும் துணைவேந்தர்கள், நீதியரசர்கள், பேராசிரியர்கள்,

முதலமைச்சர் மற்றும் கல்வித்துறை அமைச்சர்கள் அளித்த முப்பத்திரண்டு நூல்களில் உள்ள அணிந்துரைகள் ஆய்வு எல்லையாக அமைகிறது.

**ஆய்வுச் சான்றாதாரங்கள்** :

பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் எழுதிய முப்பத்திரண்டு நூல்களும் முதன்மை சான்றாதாரங்களாக அமைந்துள்ளன. மேலும் அவரது சுயசரிதை நூல்களான நினைவுக்குமிழிகளும் ஆய்வுத் தொடர்பான பிற நூல்களும் துணைமைச் சான்றாதாரங்களாக அமைந்துள்ளன.

**ஆய்வேட்டின் அமைப்பும் பகுப்பும்** :

முன்னுரை முடிவுரை நீங்கலாக இவ்வாய்வேடு நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவையாவன,

**இயல் - 1** துணை வேந்தர்கள் வழங்கிய அணிந்துரைகள்

**இயல் - 2** நீதியரசர்கள் வழங்கிய அணிந்துரைகள்

**இயல் - 3** பேராசிரியர்கள் வழங்கிய அணிந்துரைகள்

**இயல் - 4** முதலமைச்சர் மற்றும் கல்வித்துறை அமைச்சர்கள் வழங்கிய அணிந்துரைகள்.

**முடிவுரை** :

அனைத்து இயல்களில் இருந்தும் பெறப்பட்ட ஆய்வு முடிவுகள் தொகுக்கப்பெற்று முடிவுரையாகத் தரப்பட்டுள்ளது. அதனைத் தொடர்ந்து துணைநூற்பட்டியலும் இணைக்கப்பட்டுள்ளது.

## இயல்-1

## துணைவேந்தர்கள் வழங்கிய அணிந்துரைகள்

**முன்னுரை** :

பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் நூல்களுக்கு அணிந்துரைகள் வழங்கிய துணைவேந்தர்களின் சிறப்புகள் குறித்தும் அவர்களது பார்வையில் பேராசிரியர் எழுதிய நூல்களின் தனித்தன்மைகள் குறித்தும் இவ்வியலில் ஆராயப்படுகிறது

.

சென்னை பல்கலைக்கழகத் துணைவேந்தராகப் பணியாற்றிய நெ.து.சுந்தரவடிவேலு 'திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும்' என்னும் நூலுக்கு வழங்கிய அணிந்துரையும் இராஷ்டிரிய சமஸ்கிருத வித்யா பீடத்தில் துணைவேந்தராகப் பணியாற்றிய இராம.மகாதேவன் 'அர்த்தபஞ்சகம்' என்னும் நூலுக்கு வழங்கிய அணிந்துரையும் இராஷ்டிரியா சமஸ்கிருத வித்தியா பீடத்தில் துணைவேந்தராகப் பணியாற்றிய என்.எஸ். ராமாநுஜதாத்தாச்சாரிய சுவாமிகள் 'நவவிதசம்பந்தம்' என்னும் நூலுக்கு வழங்கிய அணிந்துரையும் சென்னை மற்றும் பாரதியார் பல்கலைக்கழகங்களில் துணைவேந்தராகப் பணியாற்றிய முனைவர் ச.இன்னாசிமுத்து 'தமிழில் அறிவியல் செல்வம்' என்னும் நூலுக்கு வழங்கிய அணிந்துரையையும் இவ்வியலில் காணலாம்.

# 1. திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும்

தாமரைச்செல்வர் என்றழைக்கப்படும் நெ.து.சுந்தரவடிவேலு சென்னை பல்கலைக்கழகத் துணைவேந்தராகவும் எழுத்தாளராகவும் பேராசிரியராகவும் பணியாற்றியுள்ளார். இவர் 1961-ஆம் ஆண்டு **பத்மஸ்ரீ விருது**, **கல்வியாளர் விருது** போன்ற விருதுகளைப் பெற்றுள்ளார். இவரின் நினைவாக நெய்யாடு பக்கத்தில் உள்ள அரசு உயர்நிலைப் பள்ளிக்கு நெ.து.சுந்தரவடிவேலு உயர்நிலைப்பள்ளி எனப் பெயர் மாற்றம் செய்துள்ளனர். அவர் வழங்கிய அணிந்துரையைக் காணலாம்.

இந்தியாவில் தொடங்கப்பட்ட முதல் மூன்று பல்கலைக்கழகங்களில் சென்னை பல்கலைக்கழகமும் ஒன்று. அது தொடங்கப்பட்டு நூற்றுப்பதினெட்டு ஆண்டுகள் ஆகின்றது. அதன் நீண்ட வரலாற்றில் பெற்ற அறக்கட்டளைகள் பல. அவற்றுள் ஒன்று சொல்லின் செல்வர் பேராசிரியர் ரா.பி சேதுப்பிள்ளை வெள்ளி விழா அறக்கட்டளை. அக்கட்டளையின் சார்பில் பல நல்லறிஞர்கள் தொடர் சொற்பொழிவுகள் ஆற்றியுள்ளனர். அதே மரபினையொட்டி திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழக தமிழ்ப்பேராசிரியர், தமிழ்துறைத் தலைவர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் 1973-1974ஆம் ஆண்டிற்கான மூன்று சொற்பொழிவுகள் ஆற்றியதை அறியலாம். பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் முறையாகத் தமிழைக் கற்றுத் தேறிய அறிஞர். ஆழ்ந்தப் புலமையும் கட்டுரைத் திறனும் சொல்லாற்றலும் மிக்கவர்[1].

'திருவேங்கடமும் தமிழிலக்கியமும்' என்னும் தலைப்பில் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் ஆற்றியச் சொற்பொழிவுகள் நம்மைச் சங்க காலத்திற்கும் இடைக்காலத்திற்கும் பிற்காலத்திற்கும் கொண்டு செல்லும் தன்மையில் அமைந்துள்ளது. விரிந்த தமிழ் இலக்கியத்தில்

பல்வேறு இடங்களை அறிமுகப்படுத்தும் இச்சொற்பொழிவுகள் சமயம் சார்ந்த மக்களுக்கு பயன்பெறும் வகையில் இருப்பதை அறிய முடிகிறது. எனவே திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும் என்னும் நூலுக்கு துணைவேந்தர் நெ.து.சுந்தரவடிவேலு அவர்கள் வழங்கியுள்ள அணிந்துரை குறிப்பிடத்தக்கது[2].

## 2. அர்த்த பஞ்சகம்

அர்த்த பஞ்சகம் நூலுக்கு அணிந்துரை வழங்கிய பேராசிரியர் இராம.மகாதேவன் இராஷ்டிரிய சமஸ்கிருத வித்யா பீடம் திருப்பதியில் துணைவேந்தராகப் பணியாற்றியவர்.

ஊன், உறக்கம், அச்சம், இனப்பெருக்கம் இவை மனிதர்களுக்கும் விலங்கினங்களுக்கும் பொதுவானவை. தர்மம் என்பது மனிதர்களுக்கு மட்டுமே உரித்தானதாகும். அது அல்லாதவர்கள் மிருகங்கள். பெண் எடுக்கப் போகையில் கூட,

**"தர்மத்தின் பொருட்டு பிரஜா பாலனத்திற்காகத்**
**தங்கள் பெண்ணை தர வேண்டும்"**

என்று கேட்பது சாஸ்திர மரபு. இரண்டு கால் மிருகமான மனிதன் தன்னுடைய மிருகத்தனத்தை விட்டு ஈகை முதலிய நற்குணங்கள் பெற்று பிறர் நலம் கருதி வாழ்ந்து, தேவனாக உயர்ந்து நிற்கிறான். ஒரு சில மனிதர்கள் தம் நலத்தையே சரிவரத் தெரிந்து கொள்ளாத போது பிறர் நலத்தை எப்படி கருதமுடியும்? பதினெண் புராணங்களில் **சிவன், விஷ்ணு, சூரியன்** என கடவுள்களைப் பற்றி வருணிக்கப் பெற்றிருக்கிறது[3]. அவற்றில் ஒன்றான கருட புராணத்தில் இறந்த

மனிதனுடைய ஆவி எங்கெங்கு செல்கிறது? அவனுடைய புண்ணிய பாவங்களுக்கு ஏற்ப அது என்னென்ன கதியை அடைகிறது? என்பது குறித்து விவரிக்கப்பட்டுள்ளது. இவற்றையெல்லாம் நீக்க மனிதன் பகுத்தறிவு உள்ளவனாக, விவேகம் உள்ளவனாகத் தன்னையும் மற்றவர்களையும் வாழ்வித்து உயரும் வகையில் கடைத்தேற ஆறு வழிகள் உள்ளன. அவை **"ஷண் மதங்கள்"** என்று **சங்கராச்சாரிய சுவாமிகள்** குறிப்பிடும் வழிபடு கடவுள் அறுவர்.

அவை முறையே,

1. **கணபதி**
2. **சூரியன்**
3. **சக்தி**
4. **சிவன்**
5. **குமரன்**
6. **விஷ்ணு**

விஷ்ணுவைப் பரமாண தெய்வமாகக் கருதி வழிபடும் வைணவ சமயத்தில்தான் விரிவாக உரைக்கப்படும் '**அர்த்த பஞ்சகம்**' வருணிக்கப்படுகிறது. அந்த சம்பிரதாயங்களையும் தத்துவங்களையும் நன்கு அறிந்து வழிபட்டால் இறைவன் அருளாகிய முக்தி எளிதில் கிடைக்கும் என்று ஒரு வரலாறு உள்ளது. அந்தந்த தத்துவங்களைச் சரிவர நன்குப் புரிந்து கொண்டு அந்த வகையில் செயல்பட்டால் பலன் கைக்கூடும் என்பது உண்மை. இந்நூலில் கூறப்படும் **"அர்த்தபஞ்சக ஞானம்"** என்பது சம்சாரியான சேதநன் தத்துவஞானம் பிறந்து உய்யும்போது தோன்றியது.

1. **ஈஸ்வரனது இயல்பு**
2. **ஆன்மாவின் இயல்பு**
3. **ஆன்மா அடையும் பயன்**
4. **பயனை அடைவதற்குரிய வழிகள்**
5. **பயனை அடைய விடாமல் தடுக்கும் இடையூறுகள்**.

இவற்றை பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் இந்நூலில் மிக விரிவாக ஆழ்வார்களின் பக்தி பாசுரங்களிலிருந்து தெளிவான மேற்கோள்களுடன் விளக்கியுள்ளதை அறியலாம்[4]. திங்கட்கிழமை அன்று அமாவாசை வந்தால் அன்று **அரச மரத்துக்கு விசேஷ பூஜை நடைபெறும்**. அப்பூஜையில் **திண்பண்டங்கள், பழங்கள், கண்ணாடிகள்** முதலியப் பொருட்களை வைத்து 108 முறை அரசமரத்தைச் சுற்றி வந்து பின்னர் அப்பொருள்களை பூஜையில் படைப்பர். பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்களின் 108 அரச பிரதட்சணம் பன்னெடுங்காலம் தலைத்தோங்கவும் அதனால் வாசகர் உள்ளமும் உலகமும் பயன்பெறுமாறு அர்த்த பஞ்சகம் என்னும் இந்நூலை எழுதியுள்ளார்.

**“நலம் தரும் சொல்லை நான்கண்டு கொண்டேன்**
**நாராயணா என்னும் நாமம்”**[5.]

இப்பாடலுடன் இந்நூலுக்கு துணைவேந்தர் இராம.மகாதேவன் அவர்கள் அணிந்துரை வழங்கியுள்ளதை காணமுடிகின்றது.

## 3. நவவித சம்பந்தம்

பேராசிரியர் என்.எஸ்.இராமானுஜ தாத்தாசாரிய சுவாமிகள் இராஷ்டிரிய சமஸ்கிருத வித்தியா பீடத்தில் துணைவேந்தராகப் பணியாற்றியுள்ளார். அவர் வழங்கிய அணிந்துரையைக் காணலாம்.

வேதத்தையும் வேதமாகிய உபநிடதங்களையும் ஆதாரமாகக் கொண்டு தோன்றிய மதங்களுள் **ஸ்ரீ வைஷ்ணவ** மதம் ஒன்றில்தான் உலகத்தை எம்பெருமான் படைத்துக்காப்பார் என்பதை ஸ்ரீ ஆண்டாள் திருப்பாவைப் பாசுரம் வழி அறியலாம்.

**“உன்றன்னை பிறவிப் பெருந்தனை புண்ணியம் யாமுடையோம் உன்றன்னோடு றவில் நமக்கின் ஒழிக்க ஒழியாது”**[6].

இது கல்நெஞ்சையும் கரைக்க வல்லது. ‘**உன்றன்னோடுறவு நமக்கொழிக்க ஒழியாது**’ இதில் ‘**உறவேல்**’ என்றது மிகவலியது. சேஷ-சேஷி பாவம் ஸ்வஸ்வாமி பாவம் இவை மிகவும் முக்கியமானது. பக்தி ப்ரபக்தி இவைகள் பெரும் பேற்றுக்குக் காரணங்களாக இருப்பது அறியற்பாலதாகும். மஹா மந்திரத்திலிருந்து ஒன்பது வகையான உறவுகள் தோன்றுகின்றனவென்று பூர்வாச்சாரியர்கள் வழி அறியமுடிகிறது. திருமந்திரமாகிற தாலி தனது கழுத்தில் ஏறியது ஓர் உறவு அல்ல. அந்த உறவினை நாம் சிந்தனையில் பதிய வைத்துக் கொள்வதற்காக நம் முன்னோர்கள்

**“பிதா சரஷக சேஷீ பர்த்தா ஜஞேயோ ரமாபதி**
**ஸ்வாம் பாசத்தாரே மயாத்மா சபோத்தாச ஆத்யம நூதிரு”**

என்று ஸ்லோகமியற்றியுள்ளதை அறியலாம். முந்துற முன்னம் மூன்று உறவுகள். திருமந்திரத்தில் முதல் பதம் ப்ரணவம் **அ**, **உ**, **ம** என்று மூன்று பதம் கொண்டது. '**அகர முதல எழுத்தெல்லாம்**' என்று சொல்லும் திருவள்ளுவரின் குறளிலும் '**அகோராவை ஸ்ர்வா வாக்**' என்று சொல்லும்போது **அ**கரமே எல்லா எழுத்திற்கும் முதன்மையானது என்று கூறியுள்ளார். அடுத்துள்ள **உ**கரமானது அவதாரணப் பொருளாய் தாயான எம்பெருமானுக்கே சேஷப்பட்டது என்று காட்டுதலால் '**கொண்டானையல்லா லறியாக்குல மகள்போல**' என்கிற படியே பதி - பத்னீ பாவமாகிய உறவு தோன்றுகிறது. அடுத்துள்ள **ம**கரமானது '**மகஜ்ஞானே**' என்ற தாதுவிலிருந்து தோன்றுகிறது[7].

**"ஒண் தாமரையான் கேள்வன்**
**ஒருவனையே நோக்குமுணர்வு"**

எட்டாவது உறவு சரீர ஆத்மபாவம். ஒன்பதாவது உறவு போக்த்ரு போக்யபாவம். ஸ்ரீ வைஷ்ணவர்கள் அவசியம் தெரிந்து கொள்ள வேண்டிய ஒன்பது உறவுகளை பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் ஆராய்ச்சி முறையிலும் விரிவாகவும் விளக்க '**நவவித சம்பந்தம்**' என்ற நூலை இயற்றியுள்ளார். இந்நூலில் பத்து அவதாரங்கள் உள்ளன. வைணவத்தைப் பற்றி பல உயர்ந்த நூல்களை இயற்றி வெளியிட்டு புகழ் பெற்றவர் பேராசிரியர். இவருடைய ஆழ்ந்த அறிவின் திறனையும் ஆழ்வார்களின் அருளிச்செயல்கள் எல்லாவற்றையும் நுட்பமாக ஆராய்ந்து அனுபவித்துள்ளமையையும் ஒவ்வொரு வரியிலும் காணலாம்.

பகவத் விஷயம் எனப்படும் ஈடு முதலிய செய்திகளை இந்நூலில் விளக்கியுள்ளார். இறைவன் அருளால் ந.சுப்புரெட்டியார் அவர்கள்

பல்லாண்டு வாழ்ந்து எல்லோரும் பயன்பெறும்படி ஒப்பற்ற நூல்களை இயற்றியுள்ளார். அவரின் நவவித சம்பந்தம் என்னும் நூலுக்கு துணைவேந்தர் என்.எஸ்.இராமாநுஜ தாத்தாசாரிய சுவாமிகள் அணிந்துரை வழங்கியுள்ளமைக் குறிப்பிடத்தக்கதாகும்[8].

## 4. தமிழில் அறிவியல் செல்வம்

அருட்தந்தை என்றழைக்கப்படும் முனைவர் ச.இன்னாசிமுத்து சென்னை மற்றும் பாரதியார் பல்கலைக்கழகங்களில் முன்னாள் துணைவேந்தராகவும் உயிரியல் விஞ்ஞானியாகவும் பாளையங்கோட்டை தூய சவேரியார் கல்லூரி ஆய்வு நிறுவனத்தின் இயக்குனராகவும் பணியாற்றியவர். தமிழக அரசின் மிக உயரிய விருதுகளில் ஒன்றான டாக்டர் "**அப்துல்கலாம் விருதை**" பெற்றுள்ளார். இவர் வழங்கிய அணிந்துரையைக் காணலாம்.

அறக்கட்டளை நிறுவும் அன்பர்கள் தம் குறிக்கோள்களில் ஒன்றை நிறைவேற்ற வேண்டும் என்ற கருத்துக்கு ஒரு நிரந்தர வடிவம் அமைத்து காலம் உள்ள வரையில் அதனை நடைமுறைப்படுத்த வேண்டும் என்ற குறிக்கோளை அடிப்படையாகக் கொண்டது அறக்கட்டளை. டாக்டர் எஸ்.சாமிமுத்து என்ற தமிழன்பர் எல்லா முன்னேற்றத்திற்கும் அடிப்படையாக உள்ள அறிவியல் உணர்வு மக்களிடம் ஏற்பட வேண்டும் என எண்ணியதை அறியலாம். தமிழில் அறிவியல் வளர்ச்சி எப்படி ஏற்பட வேண்டும் என்பதை பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் ஆண்டுதோறும் டாக்டர் எஸ்.சாமிமுத்து அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் என்ற ஓர் அறக்கட்டளையை நிறுவி அந்த

அறக்கட்டளையில் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் 1988 -க்கு உரிய திட்டத்தில் இரு தலைப்புகளில் ஆற்றிய சொற்பொழிவுகள் ஆற்றியதை கீழ்காணும் தலைப்புகளில் வருமாறு.

1. **இயற்பியல் நோக்கிலும்**
2. **உயிரியல் நோக்கிலும்**

என்னும் தலைப்பில் அமைந்த இரு சொற்பொழிவுகளைத் தொகுத்து 'தமிழில் அறிவியல் செல்வம்' என்ற நூலாக அமைந்துள்ளது. பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் தன் வாழ்நாளில் நிகழ்த்திய பதினான்குச் சொற்பொழிவுகளும் நூல் வடிவம் பெற்றுள்ளன. அறக்கட்டளைப் பொலிவுகளுக்கு ஒரு நிரந்தர வடிவம் தந்து கொண்டிருக்கும் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அனைவரின் பாராட்டுதலுக்கும் உரியவராக விளங்கினார்.

"**இயற்பியல் நோக்கில்**" என்ற தலைப்பில் நடைபெற்ற முதற் சொற்பொழிவு

1. **சூரியன்**
2. **அணுவாற்றல்**
3. **விண்வெளிப் பயணம்**

இந்த மூன்று தலைப்புகளில் செய்திகள் விளக்கப்பட்டுள்ளது. அவை முறையே, சூரியனைப் பற்றி கூறும் போது '**ஆதவனே ஆற்றல் மூலம்**' என்று எடுத்துக்காட்டியுள்ளார். அணுவாற்றல் பற்றிக் கூறும்போது கம்பராமாயணப் பாடல் ஒன்றினைத் துணையாகக் கொண்டு செய்திகள் தொடங்குகின்றன. ஹிரோஷிமா, நாகசாகி ஆகிய ஜப்பான் நகரங்களில் வீழ்த்தப்பெற்ற யுரேனியம், புளுட்டோனியம்

அணுகுண்டு இவற்றால் ஏற்பட்ட சேதங்களை முன்வைத்து அணுவாற்றலின் அற்புதங்களை சுட்டிக்காட்டுகிறார்.

அவை முறையே,

1. **அணுவின் நுட்பம்**
2. **அணு வகைகள் பெயரிடும் முறை**
3. **உட்கருவின் பிணைப்பாற்றல்**
4. **அணுக்கருவின் ஐசோடோப்புகள்**
5. **மருத்துவத்துறை**
6. **உழவுத்துறை**

உயிர்வகைத் தாவரங்களின் உற்பத்தி போன்றவற்றை விளக்கியுள்ளார். விண்வெளிப் பயணத்தை விளக்கத் தொடங்கும் முன் அண்டை உலகுகளின் இருப்பைப் பற்றி விளக்கி இருப்பதை அறியமுடிகிறது.

**"உயிரியல் நோக்கில்"** என்ற இரண்டாம் சொற்பொழிவு

1. **மானிடப் பிறப்பியல்**
2. **கால்வழி இயல்**

என்ற இரு தலைப்புகளில் உள்ளன. பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் இனப்பெருக்க மண்டலத்தில் தொடங்கிக் கருவுறுதல் செயல்பாடுகள் வரை தெளிவாக விளக்கியுள்ளார். மருத்துவ உலகில் ஒரு காவியமாக உள்ள மானிடப் பிறப்பியலில் முக்கிய பகுதிகள் கீழ்வருமாறு,

1. **கருப்பகாலம்**
2. **கருப்பகாலச் சின்னங்கள்**
3. **கருச்சிதைவு**
4. **குறைமாத பிரசவம்**
5. **நச்சு வாந்தி**
6. **கருவுறுதலில் பல கோளாறுகள்**

போன்றவற்றை எடுத்துக்காட்டியுள்ளார். மருத்துவ மாணவர்களுக்கு பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் முயற்சி மிகவும் பாராட்டப்பெற வேண்டியதாகும். மரபு வழி இறங்காப் பண்புகள் ஆகியவற்றிற்கு நிறக் கோள்களில் உள்ள ஜீன்கள் காரணம் என்பதை விளக்கியுள்ளார். பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அறிவியல், இலக்கியம், சமயம், தத்துவம் போன்று மேலும் பல துறைகள் வளர வேண்டும் என்ற உயரிய குறிக்கோளுடன் எழுதப்பட்ட தமிழில் அறிவியல் செல்வம் என்ற இந்நூலுக்கு துணைவேந்தர் ச.இன்னாசிமுத்து அணிந்துரை வழங்கியுள்ளமை நோக்கத்தக்கதாகும்[10].

**முடிவுரை** :

பேராசிரியர் ந.சுப்புரட்டியாரின் நூல்களுக்கு உயர்பதவி வகிக்கும் துணைவேந்தர்கள் வழங்கிய அணிந்துரைகள் குறித்து முதல் இயலில் கூறப்பட்டுள்ளது.

# அடிக்குறிப்புகள்

1.ந. சுப்புரெட்டியார் , திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும் , ப.எ.5

2. மேலது, ப.எ. 6

3. ந. சுப்புரெட்டியார், அர்த்த பஞ்சகம், ப.எ.14

4. மேலது, ப.எ.17

5. திருமங்கை ஆழ்வார், பெரிய திருமொழி, ப.எ.13

6. சி. பாலசுப்பிரமணியன், திருப்பாவை,ப.எ.101

7. ந. சுப்புரெட்டியார், நவவித சம்பந்தம், ப.எ.21

8. மேலது, ப.எ.24

9. ந. சுப் ரெட்டியார், தமிழில் அறிவியல் செல்வம், ப.எ.2

10. மேலது, ப.எ.4

## இயல்- 2

## நீதியரசர்கள் வழங்கிய அணிந்துரைகள்

**முன்னுரை** :

பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் நூல்களுக்கு அணிந்துரைகள் வழங்கிய நீதியரசர்களின் தனிசிறப்புகள் குறித்தும் அவர்களது பார்வையில் பேராசிரியர் எழுதிய நூல்களின் தனித்தன்மைகள் குறித்தும் இவ்வியலில் ஆராயப்படுகிறது.

புதுதில்லி உச்சநீதிமன்ற நீதிபதியாகப் பணியாற்றிய நீதியரசர் பா.ச.கைலாசம் 'பாண்டிநாட்டுத் திருப்பதிகள்' என்னும் நூலுக்கு வழங்கிய அணிந்துரையும் இந்தியாவில் உள்ள புதுடெல்லி உச்சநீதிமன்றம் மற்றும் தமிழ்நாட்டில் உள்ள சென்னை உச்ச நீதிமன்றத்தில் நீதியரசராகப் பணியாற்றிய சு.ரத்தினவேல் பாண்டியன் 'கம்பனில் மக்கள் குரல்' என்னும் நூலுக்கு வழங்கிய அணிந்துரையும் சென்னை உயர்நீதிமன்றத்தில் நீதியரசராயகப் பணியாற்றிய பு.ரா.கோகுலகிருஷ்ணன் 'சோழநாட்டுத் திருப்பதிகள்- 2' என்னும் நூலுக்கு வழங்கிய அணிந்துரையும் சென்னை உயர்நீதிமன்றத்தில் நீதியரசராகப் பணியாற்றிய இரா. காந்தி 'இலக்கிய வகையின் வளர்ச்சியும் இக்கால இலக்கியங்களும்' என்னும் நூலுக்கு வழங்கிய அணிந்துரையும் சென்னை உயர்நீதிமன்றத்தில் நீதியரசராகப் பணியாற்றிய பு.ரா கோகுலகிருஷ்ணன் 'சைவமும் தமிழும்' என்ற நூலுக்கு வழங்கிய அணிந்துரையும் சென்னை உயர்நீதிமன்றத்தின் நீதியரசராகப் பணியாற்றிய என்.கிருஷ்ணசாமிரெட்டி 'அறிவியல் நோக்கில்

இலக்கியம், சமயம், தத்துவம்' என்ற நூலுக்கு வழங்கிய அணிந்துரையையும் இவ்வியலில் விளக்கப்பட்டபள்ளது.

## 5. பாண்டிநாட்டுத் திருப்பதிகள்

நீதியரசர் பா.ச.கைலாசம் அவர்கள் உச்சநீதிமன்ற நீதியரசராகப் புதுடெல்லியில் பணியாற்றியுள்ளார். அவர் வழங்கிய அணிந்துரையைக் காணலாம்.

தென்பாண்டி நாட்டின் பதினெட்டு திவ்ய தேசங்களை தரிசித்ததோடு அவ்அனுபவங்களை ஒன்று சேர்த்து நூலாகவும் வெளியிட்டவர் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். இவரின் பக்திப் பயணம் **திருக்கோட்டியூரில் தொடங்கி திருக்குறுங்குடியில்** முடிந்தது. திருப்பதிகளை தரிசிக்கிற போது '**மறந்தும் புறந்தொழா மாந்தராய்**' மாறிவிடுகிறோம் என்று கூறியுள்ளார்.

**"தேவகாரியம் செய்து சேதம் பயிற்று வாழ்வார்கள்"** இதன் மூலம் திருக்கோட்டியூரில் எட்டெழுத்து உபதேசம் கிடைக்கிறது. '**புகழ் ஒன்று எல்லாம் அடியேன் உன் அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேன்**' இதன் மூலம் சரணாகதி தத்துவம் தொடர்கிறது. **'சோராத காதல் பெருஞ்சுழிப்பால் தொல்லை மாலை ஒன்றும் பாராது**' இதன் மூலம் பல்லாண்டு பாடும் பான்மை உருவாகிறது. தான் அறப்பெய்யும் காளமேகத்தைத் திருமாலின் சோலை மலையிலே '**அறு கால் வரி வண்டுகள் ஆயிரம் நாமம் சொல்லிச் சிறுகாலையிலே பாடும்**' என்று சிறப்பித்துக் கூறியுள்ளதை அறியமுடிகிறது[1]. மாயனை - மன்னு வடமதுரை மைந்தனை - தூய பெருநீர் யமுனைத் துறைவனை

வாயினால் பாடி மனதினால் சிந்தித்து அறிவு ஒன்றும் அல்லாத ஆயர் குலத்துப் பெண்களின் நிலையை ஆண்டாளின் மூலம் திருத்தண்காலூர் சென்று திருமாலை தரிசிக்கின்றதை அறியலாம்.

இதுவோ திருநகரி ஈதோ பொருநை? பரம பதத்து எல்லை வேதம் பகிர்ந்திட்ட மெய்ப்பொருளின் உட்பொருளை ஓதும் சடகோபர் ஊர் என்று அழைக்கப்படும் ஆழ்வார் திருநகர். நம்மாழ்வாரை தெரிந்து கொண்டு தனது குருவாக ஏற்றுக்கொண்ட மதுரகவி பிறந்த மண்ணான திருக்கோளூரில் வைத்தமா நதியைக் கண்டு பேராசிரியர் மகிழ்ந்ததை இந்நூல்வழி அறியமுடிகிறது. கீதையின் 18 அத்தியாயங்கள் 18 யோகங்களை சொல்வது போல பேராசிரியரின் 18 கட்டுரைகளும் பக்தி திருப்பதிகளின் பெருமையை விளக்குகின்றன. **திருமாலின் பெருமையை ஐந்து நிலைகள்** கூறுகின்றன அவை முறையே,

1. **பரமபதம்**
2. **வியூகம்**
3. **விபவம்**
4. **அந்தர்யாமித்துவம்**
5. **அர்ச்சை**

சிவபெருமானின் ஐந்து நிலைகளை **பக்தி**, **பிரபத்தி வழிகள்**, **பிராரத்தம்**, **சஞ்சிதம்**, **ஆகாயம்** ஆகிய வினைகளின் தொகுதியை வைணவ சித்தாந்தம் எடுத்துக்காட்டுகிறது[2]. வைணவ நூல்களை எவ்வளவு ஆழமாக படித்திருக்கிறார் என்பதை அவரது நூலின் வழி அறியமுடிகிறது. இந்நூலுக்கு நீதியரசர் பா.ச.கைலாசம் அவர்கள் அணிந்துரை வழங்கியுள்ளதை அறியலாம்.

## 6. கம்பனில் மக்கள் குரல்

இந்தியாவிலுள்ள புதுதில்லி உச்சநீதி மன்றத்திலும் தமிழ்நாட்டில் உள்ள சென்னை உச்சநீதிமன்றத்திலும் நீதியரசராக சு.ரத்தனவேல் பாண்டியன் பணியாற்றியுள்ளார். ஓய்வு பெற்ற பிறகு தேசிய பிற்படுத்தப்பட்டோர் ஆணையத்தின் தலைவராக நியமிக்கப்பட்டார். 2016 ஆம் ஆண்டு இவருக்கு நீதியரசர் '**வி.ஆர். கிருஷ்ண ஐயர் விருது**' வழங்கப்பட்டது .இவர் வழங்கிய அணிந்துரையைக் காணலாம்.

'**விருத்தமெனும் ஒண்பாவிற்கு உயர் கம்பன்**' என்று புலவர்களால் போற்றப்படுபவர் கம்பர். நடையினின்றுயர் நாயகன் கதையை ஈழத்தமிழில் நாடறிய செய்ததோடு இராமபிரானை மக்கள் மனதில் எழுந்தருளச் செய்தவர். காரைக்குடி '**கம்பன் அடிபொடி**' அமரர் சா.கணேசன் அவர்களால் பொது மக்களுக்கு அறிமுகமானார் கம்பர்.

**1. ஆனந்த விகடன் - பி. ஸ்ரீ - கம்ப சரித்திர கட்டுரைகள்**
**2.ரசிகமணி டி.கே.சி - காவியம் பற்றிய பேச்சும் எழுத்தும்- கம்பராமாயண பதிப்பு**

போன்றவை மக்களிடம் ஆர்வத்தை வளர்த்தது. முன்னாள் தலைமை நீதிபதி திரு. மு.மு. இஸ்மாயில் கம்பன் காவியத்தை மக்கள் அறிந்துகொள்ள பல பணிகள் செய்துள்ளார். பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் எழுதிய பதினொன்று கட்டுரைகளின் தொகுப்பே இந்நூல். அவை கீழ் வருமாறு[3] .

**1.கம்பனில் மக்கள் குரல்:**

புறநானூற்றுக் காலம் முதல் கோனாட்சி முறை மாறி 'கம்பன் குடியாட்சி' முறை வந்தது தொடர்பாக எழுதப்பட்டுள்ள இக்கட்டுரையில் நான்கு அரசர்களை பற்றி கூறியுள்ளார்.

**2. காவியத்தம்பி:**

இளையப் பெருமாளைப் பற்றியது இக்கட்டுரை. 'தம்பியுடையான் பகைக்கு அஞ்சான்' என்ற உண்மையைக் கூறுகிறது.

**3. அறங்கடங்காதவர் செயல்:**

இந்தக் கட்டுரை ஆணவத்தின் திருவிளையாடல் அடங்கியேத் தீரும் என்று கூறுகிறது.

**4. கம்பனின் குழந்தை இன்பம்:**

இக்கட்டுரையில் கம்பன் குழந்தை இன்பத்தை பற்றி ஏன் பாடவில்லை எனக்கேள்வி எழுப்பி விடைக்கூறுகிறார்.

**5. மலைக்காட்சி:**

குறிஞ்சி நிலக்காட்சியை இக்கட்டுரை காட்டுகிறது. இராமனின் திருமணத்திற்குப் பின்னர் அமைந்த காடுறை வாழ்க்கையின் தேனிலவு பகுதி மற்றும் பல்வேறு துன்பங்களை இக்கட்டுரை வழி அறிய முடிகிறது.

**6. சிறை வைத்த காதல்:**

சீதையின் உருவத்தை இராவணன் சிறை வைத்ததையும் 100 பாடல்களுக்குப் பிறகு சிறை மீட்டதையும் நுண்மான் நுழைபுலத்தை பேராசிரியர் இக்கட்டுரையில் கூறியுள்ளார்.

**7. கவிநாயகன்:**

கம்பனையும் அநுமனையும் சுட்டிக்காட்டுகின்றது இக்கட்டுரை. தமிழர்களின் மரபுக்கும் நாகரிகத்திற்க்கும் ஏற்றவாறு இராமக்காதை அமைத்த பெருமைக்குரியவர் கம்பர்.

**8. கம்பன் காட்டும் மேழிச் செல்வம்:**

இக்கட்டுரையில் உணவு பற்றாக்குறைக்குரிய காரணங்கள், வன மகோத்ஸவம், ஏர்முனை விழா போன்ற விழாக்களை கொண்டாடுவதால் பயன் விளைவதில்லை என்று கூறுகிறார்.

**9. கம்பனின் உருக்காட்சிகள்:**

இக்கட்டுரையின் மூலம் பல்துறை அறிஞரான பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் ஆங்கிலத் திறனாய்வு முறையில் கம்பரை நுகர்வதற்கு வழி காட்டுவதை அறியலாம்.

இவரை '**நடமாடும் கலைக்களஞ்சியம்**' என்று கூறுவது பெரும் போற்றுதலுக்குறியது[4]. 56 நூல்களை படைத்துள்ள பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் தமிழ்ப்பணியை வாழ்த்தி இந்நூலுக்கு உச்சநீதிமன்ற நீதிபதி சு.ரத்தினவேல் பாண்டியன் அவர்கள் அணிந்துரை வழங்கியுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

## 7. சோழ நாட்டு திருப்பதிகள்- 2

தலைமை நீதியரசர் பு.ரா.கோகுலகிருஷ்ணன் சென்னை உயர்நீதிமன்றத்தில் நீதியரசராகப் பணியாற்றியுள்ளார். அவர் வழங்கிய அணிந்துரையைக் காணலாம்.

உழைப்பால் உயர்ந்து, உள்ளதால் சிறந்து செந்தமிழைச் சுந்தரத்தெலுங்கு நிலவும் நாட்டில் பரப்பி பெருமைக்கண்டவர் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். அறிவியல் மட்டுமல்லாமல் தமிழிலும் குறிப்பாக வைணவ சமயத்தில் அதிக ஈடுபாடு கொண்டவர். சைவ நெறியையும் பௌத்த நெறியையும் சமண நெறையையும் வைணவ நெறையையும் தமிழில் போற்றி மகிழ்ந்துள்ளார் என்பதை இவரது எழுத்துக்கள் வழி அறியமுடிகிறது.

தெளியாத மறை நிலங்கள் தெளிய ஓதிய பெருமை வைணவப் பாசுரங்களுக்கு மிக உண்டு **"வேதம் அனைத்திற்கும் வித்தாகும் சோதைத்தமிழை"** வில்லிபுத்தூராரின் கோதையின் மூலம் திருப்பாவையின் வழி அறியமுடிகிறது. **"திராவிட சிசு"** என்று ஆதிசங்கரரால் அழைக்கப்பட்ட சம்பந்தர் திருமங்கையாழ்வாரின் 'இரு நில மூவடிமண் வேண்டி' என்ற ஒரு திருமொழியைக் கேட்டவுடன் வேலாயுதத்தை இவரது திருமுன் காணிக்கையாகக் சமர்ப்பித்தார் என்ற நிகழ்ச்சியை இந்நூலில் பேராசிரியர் எடுத்துக்காட்டியுள்ளதைக் காணலாம்[5].

இறைவனுடைய அபய முத்திரை குற்றம் புரிந்தவர்களையும் திருத்தும் தன்மை வாய்ந்தது என்று கூறியுள்ளார். அந்த அபயமுத்திரையை விளக்கி, **'உங்கள் குற்றங்களை நினைத்து நீங்கள் அஞ்ச வேண்டா. என்னை வந்தடையுங்கள். நான் உங்களை ஏற்றுக் கொள்வேன்'** அன்பைக் காட்டும் வாத்சலயத்தின் விளக்கம் என்று எழுதியதை அறியலாம். இதே கருத்தை திருநாவுக்கரசர்,

“**பிழைத்தோர் பிழைப்பு அறியவல்ல அடி**” என்று இறைவனுடைய திருவடிகளைப் புகழ்ந்து பாடியதை அறியலாம். தலைச்சங்கோடு என்ற திருப்பதியை பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் உதாரணத்தோடும் தகுந்த ஆதாரங்களோடும் விளக்கி அது முன்னாளில் ஒரு காடாக இருந்ததாகவும் காவிரிப்பூம்பட்டினத்தில் இருந்து சிறந்த சங்குகள் விற்பனை செய்யப்பட்டதாகவும் அதனால் அந்த இடம் ‘தலைச்சங்கம்’ என்று பெயர் பெற்று பின்னர் தலைச்சங்காடு என்று மருவியதை தம் நூலில் விரிவாக விளக்கியதை அறியமுடிகிறது[6].

பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அறிவுப் பெட்டகமாகத் திகழ்ந்து படைப்பு பணியையும் ஆராய்ச்சித் திறனையும் ஒருசேரப்பெற்றிருந்ததை அறியலாம். அவரது தெய்வீகத் தமிழ் தொண்டு வளர வேண்டும் என்று வாழ்த்தி சோழநாட்டுத் திருப்பதிகள்-2 என்ற நூலுக்கு நீதியரசர் பு.ரா.கோகுலகிருஷ்ணன் அவர்கள் அணிந்துரை வழங்கியுள்ளார்.

## 8.இலக்கிய வகையின் வளர்ச்சியும் இக்கால இலக்கியங்களும்

இரா.காந்தி மூத்த வழக்கறிஞராக சென்னை உயர்நீதிமன்றத்தில் பணியாற்றியுள்ளார். அவர் வழங்கிய அணிந்துரையைக் காணலாம்.

ஓர் அறக்கட்டளைச் சொற்பொழிவு எப்படி இருக்க வேண்டும் என்பதற்கு எடுத்துக்காட்டாக சென்னை பல்கலைக்கழகமும் தமிழ் இலக்கியத் துறையும் சேர்ந்து நடத்திய பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் கல்வி அறக்கட்டளை சொற்பொழிவுகள் நூலாக வடிவம் பெற்றுள்ளது. பேராசிரியர் எழுதியுள்ள நூல்களின் எண்ணிக்கையும் அவரின்

கட்டுரைகளும் உரைகளும் அதிகமாக உள்ளதை அறியமுடிகிறது. 'இலக்கிய வகையின் வளர்ச்சியும் இக்கால இலக்கியங்களும்' என்ற அற்புதமான சொற்பொழிவை நூலாக வடித்துள்ளார்.

**இலக்கியங்கள் பற்றி கூறும் நூல்கள் மற்றும் செய்திகள்:**

- **2500 ஆண்டுகளுக்கு முன் பிறமொழி தாக்குறைவு**
- **இலக்கண நூல் தொல்காப்பியத்தில் இலக்கியம் பற்றியும் மூவேந்தர்கள் பற்றியும் உள்ளது.**

வடமொழிச் சொற்கள் தமிழில் கலந்துள்ளதை ஆதிசங்கரரின் அத்வைதக் கொள்கையும் இராமாநுஜருடைய விசிட்டாத்வைதக் கொள்கையும் பெருகியபோது வடமொழி கற்றவர்களின் தொகையும் பெருகியது என்று பேராசிரியர் பதிவுசெய்துள்ளார். வடமொழியை '**தேவபாஷை**' என்றும் '**நீசபாஷை**' என்றும் கூறியவர்களை சுட்டிக்காட்டியதை அறியலாம்[7]. வெண்பாவின் விளக்கத்தையும் நெடுவெண்பாவின் விளக்கத்தையும் சிறப்பாக எடுத்துரைத்துள்ளார். வஞ்சிப்பா பற்றி எழுதியிருப்பது அவரின் ஆராய்ச்சித் திறனை வெளிக்காட்டுகிறது.

1. **திருப்பாவை**
2. **திருவெம்பாவை**
3. **தேவாரம்**
4. **திருவாசகம்**

போன்ற பக்தி நூல்களில் இருந்து மேற்கோள் காட்டியுள்ளார். யாப்பு எப்படி ஒலிநயத்திற்கு துணை புரிகிறது என்பதை கீழ்வரும் நூல்களில் உள்ள பாடல்கள் மூலம் அறியலாம்.

- **பாரதியாரின் - "பிள்ளைக் கனியமுதே கண்ணம்மா"**
- **பாரதிதாசனின் - "பெண் குழந்தை தாலாட்டு"**

போன்ற கவிதைகள் உணர்ச்சியுடன் இருக்க வேண்டும் என்பதற்கு கும்மி பாடல்கள் மற்றும் கி.பி ஏழாம் மற்றும் ஒன்பதாம் நூற்றாண்டுகளில் பக்தி பாடல்கள் பாடிய ஆழ்வார்கள் நாயன்மார்களின் நாட்டுப் பாடல்களின் கூறுகளை ஆராய்ந்து எழுதியுள்ளார். இந்நூலில் **ரூசோ**, **டெஸ்டலாஸ்ஸி**, **ஃபிராபெஸ்**, **மாண்டிசோரி** போன்ற அறிஞர்களை பாராட்டியுள்ளார்[8]. அவரின் நூற்றுக்கணக்கான நூல்களுக்கிடையில் இந்நூல் சிறப்பான இடத்தை பெற்றதைப் பாராட்டி இந்நூலுக்கு நீதியரசர் இரா.காந்தி அவர்கள் அணிந்துரை வழங்கியுள்ளது நோக்கத்தக்கதாகும்.

## 9. சைவமும் தமிழும்

தலைமை நீதியரசர் பு.ரா.கோகுலகிருஷ்ணன் சென்னை உயர்நீதிமன்றத்தில் நீதியரசராகப் பணியாற்றியுள்ளார். அவர் வழங்கிய அணிந்துரையைக் காணலாம்.

தமிழ் அன்னைக்குப் புனைந்துள்ள மணிமகுடத்தில் பதிந்த மற்றொரு வைரக்கல் "சைவமும் தமிழும்" என்னும் இந்நூல். தொல்காப்பியம் முதல் கவிமணி தேசிய விநாயகம் பிள்ளை வரை கண்ணுதற் பெருங்கடவுள் பற்றிய குறிப்புகளை விளக்கியுள்ளனர். தொல்காப்பியம் பத்துப்பாட்டு மட்டுமின்றி எட்டுத்தொகையிலும் கி.பி.இரண்டாம் நூற்றாண்டிலேயே முக்கண்ணனான சிவபெருமானின் குறிப்புகளை காண்கிறோம். பத்துப்பாட்டில் முதலாவதாக உள்ள

திருமுருகாற்றுப்படையில் 317 அடிகள் உள்ளன. மலையின் வருணனை உள்ள அகநானூறு செய்யுள் ஒன்றில் சிவனும் திருமாலும் பற்றி குறிப்பிட்டுள்ளதை அறியமுடிகிறது.

**"பெருவரு கடுந்திறல் இரும்பெறுமந் தெய்வத்து**
**உருவுடன் இயைந்த தோற்றம் போல**
**அந்திவானமொடு கடலணி கொளா அவந்த மாலை"**

இதேபோல் எட்டுத்தொகை நூல்களான புறநானூறு, கலித்தொகை போன்றவற்றிலும் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களிலும் சிவனைப் பற்றிய குறிப்புகள் உள்ளதைக் கூறியுள்ளார். சீவகசிந்தாமணி என்னும் காப்பியத்தில்,

**"போகம் ஈன்ற புண்ணியன்**
**எய்த கனையே போல்"**
**"கடிமதில் மூன்றும் எய்த**
**கடவுளிற் கனன்று சொன்னான்"**
**"திங்கள் சேர் முடியினானும்**
**செவ்வியும் போன்று"**

போன்ற அடிகள் சிவனைக் குறிப்பதாக அமைந்துள்ளது. சங்க காலத்தில் மட்டுமல்லாமல் அதை தாண்டியும் நீதிநூல் காலத்திலும் பக்தி இலக்கிய காலங்களிலும் கம்பராமாயண காவியத்தில் சிவனைப் பற்றிய பல குறிப்புகள் உள்ளதை அறியலாம். இந்நூலில் ராமனின் தோற்றத்தை அவன் போர்க்களத்தில் நின்ற போது கம்பர்,

**“தீ மொய்த்த அனைய செங்கணன்**
**அரக்கரை முழுதும் சிந்திப்**
**பூ மொய்த்த கர்த்த ராகி**
**விண்ணவர் போற்றி நின்றான்**
**பேய் மொய்த்து நரிகள் ஈண்டிப்**
**பெரும் பிணம் பிறங்கித் தோன்றும்**
**ஈமத்துள் தனியன் நின்ற**
**கறைமிடத்து இறைவன் ஒத்தான்”**

என்று கூறி யாவரையும் அழித்து இராமன் போர்க்களத்தில் நின்றது ஊழின் முடிவில் சிவபெருமானைப் போன்றவன் என்று குறிப்பிட்டதை அறியலாம். இதனைப் போன்ற தமிழ் நூல்கள் பலவற்றில் பண்டைக்காலந் தொட்டே சைவம் பேசப்பட்டதை பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் கூறியுள்ளார். 27 பேர் திருமுறைகளை எழுதியுள்ளனர். இதில் 18,000 பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

தேவார சுவாமிகள் செய்த,

**1.கந்தர் சஷ்டி கவசம்**

**2.பாம்பன் குமரகுருதாசசுவாமிகள்**

**3.பலதரப்பட்ட உலாக்கள்**

**4.பிள்ளைத்தமிழ் நூல்கள்**

போன்ற நூல்களில் சைவத்தின் பெருமையைக் காணமுடிகிறது. அவர் சித்தர்களை பற்றி கூறும்போது வடநாட்டில் ஒன்பது பேர் கொண்ட நவநாதர் சித்தர்கள் தமிழ்நாட்டில் ஆரம்பத்தில் 18 சித்தர்கள் பிறகு 50-க்கும் மேற்பட்ட சித்தர்கள் வாழ்ந்தனர். அவர்களுள் கோயில் வழிபாட்டை கடிந்த ஒருவர் பாடியுள்ளார்.

**'கோயிலாவது ஏதடா? குளமாவது ஏதடா?**

**கோயிலும் மனதிலே குளங்களும் மனதுள்ளே'**

என்று பாடியுள்ளார். காருண்யமுள்ள பெரியார் படைத்த காவியங்கள் இந்நூலில் ஏராளமாக எழுதிக் கொண்டதற்கு காரணம் சிவமும் தமிழும் இரண்டற கலந்த ஒன்று என்பதுதான்[11]. பேராசிரியர் பல்வேறு நூல்களின் தரவுகளை எடுத்துக்கூறி சைவமும் தமிழும் எவ்வாறு உள்ளது என்பதை இலக்கியம் மூலம் தெரிவித்தார். எனவே சைவமும் தமிழும் என்ற நூலுக்கு நீதிபதி பு.ரா.கோகுலகிருஷ்ணன் அவர்கள் அணிந்துரை வழங்கியுள்ளதை அறியமுடிகிறது.

## 10. அறிவியல் நோக்கில் இலக்கியம், சமயம், தத்துவம்

என்.கிருஷ்ணசாமிரெட்டி இந்திய வழக்கறிஞராகவும் சென்னை உயர்நீதிமன்றத்தின் நீதியரசராகவும் பணியாற்றியுள்ளார். அவர் வழங்கிய அணிந்துரையைக் காணலாம்.

பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் பல துறைகளில் பல நூல்கள் எழுதி பல பரிசுகளும் பட்டங்களும் விருதுகளும் பெற்றிருக்கிறார். இவர் ஆடம்பர வாழ்க்கையை அறவே ஒதுக்கி எளிமை வாழ்வு வாழ்ந்தவர்.

**"எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்**

**நுண்பொருள் காண்பது அறிவு" (குறள்- 424)**[12.]

என்ற வள்ளுவரின் கூற்றுப்படி பேராசிரியர் மறைபொருளையும் எளிமையாக புரிந்து கொள்வதில் வல்லவர். இவரின் தமிழ்ப்பணியில் அறிவியல் வாடை - ஒளி வெகுவாக இருக்கும் என்பதை அறியலாம். பேராசிரியர் நிமிஷகவி திரு.கே. சுப்பையநாயுடு அறக்கட்டளையின்

ஆதரவில் அறிவியல் நோக்கில் தமிழ் இலக்கியம் சமயம் தத்துவம் என்ற பொருளில் 1996-1997 ஆம் ஆண்டு சென்னை பல்கலைக்கழகத்தில் ஆற்றிய இரண்டு சொற்பொழிவுகள் நூலாக வந்தது நோக்கதக்கதாகும்[13].

**அறிவியலின் தோற்றமும் வளர்ச்சியும்:**

இத்தலைப்பில் ஆதிமனிதனின் தனது படிப்படியான காட்டு வாழ்க்கை மற்றும் சமுதாய வாழ்க்கையின் அடிப்படைத் தேவையை உணவு, உடை, உறையுள், பாதுகாப்பு, வேளாண்மை போன்றவற்றின் மூலம் நிறை செய்தான் என்பதையும்,

1. **உயிரியல்**
2. **மருத்துவம்**
3. **கணிதம்**
4. **வானியல்**
5. **போக்குவரத்து**

மூலம் படிப்படியாக வளர்ந்ததைப் பற்றியும் எடுத்துக்காட்டியதை அறியமுடிகிறது. "சமயங்களின் தோற்றமும் வளர்ச்சியும்" என்னும் தலைப்பில் பல்வேறு சமயங்களை குறிப்பிட்டுள்ளார். வைதிகச் சமயங்களாகிய வைணவம், சைவம் பற்றியும் புறச் சமயங்களான சார்வாகம், சமணம், பௌத்தம் போன்றவற்றைப் பற்றியும் தெளிவாகவும் விரிவாகவும் விளக்கியுள்ளார். வைதீகச் சமயங்களில் இறைவன் படைப்பிற்கு இறைவனையே நிமித்த காரணமாக கொள்வதையும் புற சமயங்களில் அணுக்களிலிருந்து உலகம் தோன்றியது என்பதையும் வலியுறுத்தியிருப்பதை அறியமுடிகிறது.

**அறிவியல் நோக்கில் சமயம் தத்துவம்:**

இத்தலைப்பில் அண்டங்களின் அமைப்பையும் அணுவின் அமைப்பையும் ஒப்பிட்டு 'ஆதவனே ஆற்றல் மூலம்' என்பதையும் இதற்கு அறிகுறியாக தான் பொங்கல் திருநாளை உழவர்கள் '**தமிழர் திருநாளாக**' கொண்டாடுகிறார்கள் என்பதையும் விளக்கமாகக் கூறியதை அறியலாம். அணுவாற்றலே சக்தி தத்துவமாய் உருவெடுத்தது என்னும் அறிவியல் யுகத்தில் தோன்றிய பாரதியார் அறிவியல் அடிப்படையில் பாடியுள்ள தன் பாடல்களை படைத்துள்ளார் என்பதையும் பெருமையுடன் சுட்டியுள்ளார்.

இப்பனுவலை உலகத் தத்துவ மேதை டாக்டர் டி.எம்.பி. மகாதேவன் அவர்களுக்கு அன்பு படைப்பாக இருப்பது மேலும் இந்நூலுக்கு பெருமை சேர்க்கிறது[14]. பேராசிரியரின் அறிவியல் திறனை பாராட்டி இந்நூலுக்கு நீதியரசர் என்.கிருஷ்ணசாமிரெட்டி அணிந்துரை வழங்கியுள்ளார்.

**முடிவுரை:**

பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் நூல்களுக்கு நீதியரசர்கள் வழங்கிய அணிந்துரைகள் விரிவாகவும் தெளிவாகவும் இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளது.

## அடிக்குறிப்புகள்

1. ந. சுப்புரெட்டியார், பாண்டி நாட்டுத் திருப்பதிகள், ப.எ,8

2. மேலது, ப.எ,10

3. ந. சுப்புரெட்டியார், கம்பனில் மக்கள் குரல், ப.எ,4

4. மேலது, ப.எ, 7

5. ந. சுப்புரெட்டியார், சோழநாட்டு திருப்பதிகள் - 2 ,ப.எ,6

6. மேலது, ப.எ,8

7.ந.சுப்புரெட்டியார், இலக்கிய வகையின் வளர்ச்சியும் இக்கால இலக்கியங்களும், ப.எ,5

8. மேலது, ப.எ,7

9. ந. சுப்புரெட்டியார், சைவமும் தமிழும், ப.எ,7

10. மேலது, ப.எ,8

11. மேலது, ப.எ,11

12. புலியூர்க்கேசிகன், திருக்குறள் புதிய உரை, ப.எ,93

13.ந. சுப்புரெட்டியார், அறிவியல் நோக்கில் இலக்கியம் சமயம் தத்துவம, ப.எ,1

14. மேலது, ப.எ,2

# இயல் - 3

## பேராசிரியர்கள் வழங்கிய அணிந்துரைகள்

**முன்னுரை** :

பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்களின் நூல்களுக்கு அணிந்துரைகள் வழங்கிய பேராசிரியர்களின் தனிச்சிறப்புகள் குறித்தும் அவர்களது பார்வையில் பேராசிரியர் எழுதிய நூல்களின் தனித்தன்மைகள் குறித்தும் இவ்வியலில் ஆராயப்படுகிறது.

சென்னை பச்சையப்பன் கல்லூரி மற்றும் சென்னை பல்கலைக்கழகம் ஆகியவற்றில் தமிழ்த்துறை தலைவராகப் பணியாற்றிய பேராசிரியர் மு.வரதராசன் 'தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை' என்னும் நூலுக்கு வழங்கிய அணிந்துரையும் சென்னையில் உள்ள மாநிலக் கல்லூரியில் பேராசிரியராகப் பணியாற்றிய இரா.கு. நாகு 'குயில்பாட்டு ஒரு மதிப்பீடு' என்னும் நூலுக்கு வழங்கிய அணிந்துரையும் காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழகம் மற்றும் தமிழ்பல்கலைக்கழகம் தஞ்சாவூர் ஆகியவற்றில் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியாற்றிய பேராசிரியர் இரா.சாரங்கபாணி 'ஞானசம்பந்தர்' என்னும் நூலுக்கு வழங்கிய அணிந்துரையும் புதுவைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியாற்றிய பேராசிரியர் க.ப.அறவாணன் 'பாட்டுத்திறன்' என்னும் நூலுக்கு வழங்கிய அணிந்துரையும் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழியல்துறைத் தலைவராகப் பணியாற்றிய பேராசிரியர்

ஆறு.அழகப்பன் ‘கலியன் குரல்’ என்னும் நூலுக்கு வழங்கிய அணிந்துரையும் அண்ணாமலை பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையில் பேராசிரியராகப் பணியாற்றிய பேராசிரியர் ச.மெய்யப்பன் ‘நினைவுக்குமிழிகள்-3’ என்னும் நூலுக்கு வழங்கிய அணிந்துரையும் திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறை பேராசிரியராகப் பணியாற்றியபேராசிரியர் தானியேல் தேவசங்கீதம் ‘நினைவுக்குமிழிகள்4’ என்ற நூலுக்கு வழங்கிய அணிந்துரையும் திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறை தலைவராகப் பணியாற்றிய பேராசிரியர் பொன்.செளரிராசன் ‘மாணிக்கவாசகர்’ என்னும் நூலுக்கு வழங்கிய அணிந்துரையும் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியாற்றிய பேராசிரியர் தி.வைத்தமாநிதி ‘சடகோபன் செந்தமிழ்’ என்னும் நூலுக்கு வழங்கிய அணிந்துரையும் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் பொருளாதாரத் துறைத் தலைவராக பணியாற்றிய பேராசிரியர் அ.வி.ரங்காச்சாரி ‘பரகாலன் பைந்தமிழ்’ என்னும் நூலுக்கு வழங்கிய அணிந்துரையும் சென்னை பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறை பேராசிரியராகப் பணியாற்றிய பேராசிரியர் அ.அ.மணவாளன் ‘வாய்மொழியும் வாசகமும்’ என்னும் நூலுக்கு வழங்கிய அணிந்துரையும் சென்னை பல்கலைக்கழகத்தில் இந்திய இசைத்துறை பேராசிரியராகப் பணியாற்றிய டாக்டர். பிரமீளா. குருமூர்த்தி ‘மூவர் தேவாரம் புதிய பார்வை’ என்னும் நூலுக்கு வழங்கிய அணிந்துரையும் தமிழ் பல்கலைக்கழகத்தில் பேராசிரியராகப் பணியாற்றிய பேராசிரியர் க.பாஸ்கரன் ‘வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள்’ என்னும் நூலுக்கு வழங்கிய அணிந்துரையும் பேராசிரியர் இரா. தாண்டவன் ‘தந்தை பெரியார் சிந்தனைகள்’ என்னும் நூலுக்கு வழங்கிய அணிந்துரையும்

பேராசிரியர் பெ.கிருஷ்ணன் 'சைவ சித்தாந்தம் ஓர் அறிமுகம்' என்னும் நூலுக்கு வழங்கிய அணிந்துரையும் பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் தமிழியல் துறைத் தலைவராகப் பணியாற்றிய பேராசிரியர் இராதா.செல்லப்பன் 'கவிமணியின் தமிழ் பணி ஒரு மதிப்பீடு' என்னும் நூலுக்கு வழங்கிய அணிந்துரையும் சென்னை பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறை பேராசிரியராக பணியாற்றிய பேராசிரியர் வ.ஜெயதேவன் 'கவிஞர் வாலியின் பாண்டவர் பூமி ஒரு மதிப்பீடு' என்னும் நூலுக்கு வழங்கிய அணிந்துரையையும் இவ்வியலில் காணலாம்.

## 11. தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை

பேராசிரியர் மு.வரதராசன் இருபதாம் நூற்றாண்டின் புகழ்பெற்ற தமிழ் கவிஞர்களுள் ஒருவர். இவர் எழுதிய தமிழ் இலக்கிய வரலாறு என்ற நூலுக்கு "**சாகித்திய அகாதெமி விருது**" வழங்கப்பட்டுள்ளது. இவர் சென்னை பச்சையப்பன் கல்லூரி, சென்னை பல்கலைக்கழகம் ஆகியவற்றில் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியாற்றியுள்ளார். 1972ல் அமெரிக்காவின் ஊஸ்டர் கல்லூரி இவருக்கு "**இலக்கியப் பேரறிஞர் பட்டம்**" வழங்கிப் பெருமைப்படுத்தியுள்ளது. இவர் வழங்கிய அணிந்துரையைக் காணலாம்.

தொல்காப்பியம் தமிழ் மொழியின் பண்பாட்டையும் தமிழ் இலக்கியத்தின் தொன்மையையும் நாகரிகச் சிறப்பையும் விளக்கும் பழம்பெரும் நூலாகும். இது இலக்கண நூலே ஆயினும் எழுத்திற்கும் சொல்லிற்கும் மட்டும் இலக்கணம் உரைப்பதோடு நில்லாமல், தமிழர் வாழ்க்கையை ஒட்டி அமைந்த இலக்கியத்திற்கும் இலக்கணம் கூறும் நூலாக இருப்பதை அறிய முடிகிறது. அதனால்தான் தொல்காப்பியப்

பொருளதிகாரம் இலக்கிய வரலாற்று அறிஞர்களுக்கும் திறனாய்வாளர்களுக்கும் ஒருங்கே பயன்படுவதாக உள்ளது. இவ்வாறு சிறப்புடைய இந்நூலை ஆராய்ந்து 'தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை' என்ற தலைப்பில் நூலாக எழுதியுள்ளார். பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் தமிழ் மட்டுமல்லாமல் அறிவியலிலும் பட்டம் பெற்ற அறிஞர் என்பதையும் அறியலாம். அறிவியலோடு நின்று விடாமல் தொடர்ந்து உளவியல் முதலான பல துறைகளிலும் பல நூல்களைக் கற்று தமிழில் பல நூல்களை இயற்றியுள்ளார்.

தொல்காப்பியப் பொருளதிகாரத்தை ஆராயும் போது பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்களுக்கு உளவியல், உயிரியல் முதலிய அறிவியல் துறைகளில் மிக அதிக ஈடுபாடு இருந்துள்ளது என்பதை இந்நூலின் மூலமாக அறியலாம். தொல்காப்பியர் கூறும் அகப்பொருள் புறப்பொருள் பற்றிய இலக்கணங்களை வெவ்வேறு புதிய தலைப்புகளில் இவர் விளக்கம் பெற செய்துள்ளார். தமிழர்கள் காதலை மிகமிக தூய்மையானதாக வைத்துப் போற்றினர் என்பதை பல இடங்களில் கூறியதோடு பழங்கால அகப்பொருள் மரபுகளையும் விளக்கியுள்ளதை அறியமுடிகிறது[1].

1. **உள்ளுறை**
2. **உவமம்**
3. **இறைச்சி பொருள்**
4. **மெய்ப்பாடுகள்** [2]

போன்றவற்றைப் பற்றி விளக்கமாகக் கூறியுள்ளார். தொல்காப்பியரின் செய்யுளியலை இலக்கியத் திறனாய்வு முறையைக் கொண்டு ஆராய்ந்துள்ளார். வெட்சி முதலிய புறத்திணைகளுக்கும்

குறிஞ்சி முதலிய அகத்திணைகளுக்கும் உள்ள இயைபுகளைப் பற்றிய விளக்கம் உடன்பட கூடியதாக இல்லை என்றும் ஏனைய விளக்கங்கள் முறையுடன் அமைந்துள்ளது என்றும் கூறியுள்ளார். இந்நூலுக்கு பேராசிரியர் மு.வரதராசனார் அணிந்துரை வழங்கியுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

## 12. குயில் பாட்டு ஒரு மதிப்பீடு

பேராசிரியர் இரா.கு.நாகு சென்னையில் உள்ள மாநில கல்லூரியில் பணியாற்றியுள்ளார். அவர் வழங்கிய அணிந்துரையைக் காணலாம்.

இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற கவிஞராகக் கருதப்படுபவர் மகாகவி பாரதியார். இவர் தன்னுடைய பாட்டுத் திறத்தால் இவ்வுலகத்தை பாலித்திடச் செய்தார். நாட்டுப்பற்றையும் மொழிப்பற்றையும் மானுடத்தையும் மனிதாபிமானத்தையும் அகிலத்துவத்தையும் கொண்ட இவரின் பாடல்களை தமிழ் உலகிற்கு வழங்கினார். இவரின் எல்லா நூல்களும் சிறந்தவை தான் ஆனால் அவற்றுள் குறிப்பிட்டு கூறத்தக்க மூன்றினை அறியலாம்.

அவை முறையே,

1. **பாஞ்சாலி சபதம்**
2. **கண்ணன் பாட்டு**
3. **குயில் பாட்டு**

இந்த மூன்றனுள் குயில் பாட்டிற்கு தனித்த இடம் உண்டு.

**“குயில் பாட்டிலே காதல் கொப்பளிக்குதடா**

**செயல் மறந்தேனடா லாகிரி சிரசில் கொண்டதடா”**[3]

என்று கவிமணி கூறியதை அறியலாம். கவித்துவம் நிறைந்த அக்குயில் பாட்டின் அழகில் தன்நெஞ்சை பறிகொடுத்த அறிஞர்களில் பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரும் ஒருவர். இவர் பாரதியின் நூற்றாண்டு விழா நினைவாக சில நூல்களை எழுதி வெளியிட்டுள்ளார் என்பதனை அறிய முடிகிறது. அதில் குயில் பாட்டு பற்றிய இந்நூலில் எட்டு இயல்கள் உள்ளன. வைணவர்களுக்கு உகப்பானது எட்டு. ஆழ்வார் பாசுரங்களில் ஆழங்கால் பட்ட பேராசிரியர் ந.சுப்புரட்டியார் அவர்களுக்கு எட்டு உகப்பானதில் வியப்பில்லை. குயில்பாட்டு ஒரு மதிப்பீடு என்று முடியும் இறுதி இயலில் பேராசிரியர் திறனாய்வு நோக்கில் குயில் பாட்டை அணுகி உள்ளார் என்பதை அறியமுடிகிறது.

இந்நூல் நயமான பகுதிகளை விளக்கிக் கூற வந்த இடங்களில் உவமைகளை ஆண்டிருப்பது பாராட்டுக்குரிய ஒன்றாகும். அதைக் குறித்து எழுதும் இடத்தில் அவருக்கே உரிய தன்மையில் காற்றழுத்தமானியில் பாதரசம் ஏறுவது போல் ஏறிக்கொண்டே போகிறது என்றும் மற்றொரு இடத்தில் இயற்கைக்கும் கவிஞனுக்கும் உள்ள இணக்கமான உறவை குறிப்பிட்டு விளக்கும்போது உறங்கும் நிலையில் தாய் குழந்தையை அணைவதைப் போல என்றும் கூறியுள்ளது அறியற்பாலதாகும்.

பழந்தமிழ் இலக்கியத்திலிருந்து புதுத்தமிழ் இலக்கியம் வரை பேராசிரியர் படித்தறிந்தவர் என்பதை இந்நூல் காட்டுகிறது. குயில் பாட்டில் எடுத்தாளப்பட்டிருக்கும் காதல் நெறிகள் பெரிதும் மரபு சார்ந்தவையே என்று அவர் சான்றுகளை எடுத்துக் கூறியுள்ளார். பாட்டின் உள்ளுறை என்ற ஏழாவது இயலில் பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் ஆய்வு நெறித் தெளிவாகத் தெரிகிறது. பாரதி என்ற மகாகவி பிறந்ததால்

தமிழ்நாடு பெருமைப்பெற்றதை அறியமுடிகிறது[4]. ஞானத்தமிழை கட்டுரையாக வடித்துதழுவிய பேராசிரியரின் தமிழ் பணி சிறக்க இரா.கு.நாகு அவர்கள் இந்நூலுக்கு அணிந்துரை வழங்கியுள்ளார்.

## 13. ஞானசம்பந்தர்

பேராசிரியர் இரா.சாரங்கபாணி அழகப்பா கல்லூரி காரைக்குடியிலும் தமிழ் பல்கலைக்கழகம் தஞ்சாவூரிலும் தமிழ்த்துறை தலைவராகப் பணியாற்றியுள்ளார். அவர் வழங்கிய அணிந்துரையைக் காணலாம்.

பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் காரைக்குடி அழகப்ப செட்டியார் பயிற்சி கல்லூரியில் தமிழ்த்துறைத் தலைவராக இருந்தபோது பேராசிரியர் இரா. சாரங்கபாணி அவருடன் பழகியதை அறிய முடிகிறது. அவரின் கேண்மையினால்,

**“நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தோறும்**
**பண்புடையாளர் தொடர்பு” [5]. (குறள்-783)**

என்ற வள்ளுவரின் குறள் வழி உணர்ந்ததை அறியலாம். திருமுறை செல்வர் பேராசிரியர் க. வெள்ளைவாரணனார் நல்கிய நாவுக்கரசர் நூலின் சிறப்புப் பாயிர மலரில்,

**“செய்தீர் நட்பால் அன்பரோடு**
**சேர்ந்து பழகும் தெளிஉடையான்**
**மயிர்வில் மனத்தான் மதிநலத்தால்**
**மக்கள் சுற்றம் மகிழ் கூரத்**
**துயர்தீர்ந் துலகம் வாழச்செய்**
**தூயோன் நேயம் மிக்குடையான்” [6].**

என்று பாராட்டியுள்ளார். அறிவியல் துறையிலும் சிறந்து விளங்கிய பேராசிரியர் பல நூல்களை எழுதியுள்ளார். அவை கீழ்வருமாறு

1. **அணுவின் ஆக்கம்**
2. **அம்புலிப் பயணம்**
3. **அறிவியல் விருந்து**
4. **இல்லறநெறி**
5. **வாழையடி வாழை**
6. **இளைஞர் வானொலி**
7. **இளைஞர் தொலைக்காட்சி**

ஆசிரியர் பயிற்சி கல்லூரியில் பணியாற்றியதன் விளைவாக தமிழ் உலகத்திற்கு பல நூல்களை வழங்கியுள்ளதை அறியலாம்.

1. **தமிழ் பயிற்றுமுறை**
2. **கவிதை பயிற்றுமுறை**
3. **அறிவியல் பயிற்றுமுறை**
4. **கல்வி உளவியல் கோட்பாடுகள்**

இவை மட்டுமல்லாமல் திறனாய்வு, இலக்கியம், சமயம், வரலாறு முதலிய பல துறைகளிலும் எண்ணற்ற நூல்களைப் படைத்துள்ளார் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். இவருக்கு தவத்திரு குன்றக்குடி அடிகளார் **“அருங்கலைக்கோன்”** என்ற பட்டமளித்து சிறப்பித்தார். வினையே ஆடவர்க்கு உயிரே என்னும் பெருநெறி பிடித்தொழுகும் பேராசிரியர் எழுதிக் கொண்டே இருக்கும் இயல்பினர் என்று பாடலில் எடுத்துக்காட்டி உள்ளதை அறியலாம்.

**“உண்ணா நாள்பசி யாவதொன் றில்லை**

**ஒவா நேநமோ நாராயணா**

**எண்ணா நாளும் இருக்கெசு சாம**

**வேத நாண்மலர் கொண்டுன பாதம்**

**நண்ணா நாள் அவை தத்துறு மாகில்**

**அன்றெ னக்கவை பட்டினி நாளே”**

என்று பெரியாழ்வார் எழுதிய திருமொழியின் மூலம் காணமுடிகிறது. பக்தி பனுவல்களான தேவார திருவாசகங்கள் நாலாயிரத்திவ்யபிரபந்தம் ஆகியவற்றில் ஆழங்கால் பட்டு ‘யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்’ என்னும் பெருநோக்கோடு திருத்தலப் பயண நூல்களையும் ஞானசம்பந்தர் என்னும் அரிய நூலையும் எழுதியுள்ளார் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார்.

**“வல்லார் பிறப்பறுப்பர் வண்மைநலங் கல்வி**

**நல்லா தரவின்ப ஞானங்கள் எல்லாம்**

**திருஞான சம்பந்தன் சேவடியே என்னும்**

**ஒருஞான சம்பந்த முற்று”**

என்று ஓதாது ஞானமெல்லாம் உணர்ந்த முத்தமிழ் விரகராய திருஞானசம்பந்தப் பிள்ளையாரை சிவப்பிரகாச சுவாமிகள் ஈடுபாட்டுடன் போற்றியதை அறியமுடிகிறது. ஆளுடைய பிள்ளையார் திருவவதாரம் செய்தார். யார் அளித்த பாளடிசில் உண்டாய் என வெகுண்டு வினவிய தந்தையாரிடம் பிள்ளையார் **தோடுடைச் செவியன்** எனத் தொடங்கும் பதிகப் பாடலை பாடினார். ஈசனின் இன்னருளால் முத்துச் சிவிகை, கொடை சின்னம் ஆகியவை கிடைக்கப்பெற்றார். ஞானசம்பந்தரின்

வாழ்க்கை வரலாற்றை 16 இயல்களாக பகுத்துக் கொண்டு பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் விளக்கிக் காட்டுகிறார்.

சோழ நாட்டு திருத்தலப் பயணம் 5, 7, 12 இயல்களிலும் கொங்கு நாட்டுத் தல வழிபாடு ஆறாம் இயலிலும் பாண்டி நாட்டுத் திருத்தல வழிபாடு 11 ஆம் இயலிலும் நடுநாட்டுத் தல வழிபாடு 13 ஆம் இயலிலும் தொண்டை நாட்டுத் தலப்பயணம் 14-ம் இயலிலும் விரிவாக விளக்கியுள்ளார். அமணரிட்ட தீத்தழல் போய் பையவே சென்று பாண்டியருக்காகவே எனத் திருஞானசம்பந்தர் பணிந்தார். பையவே சென்று எனக் கூறுவதன் மூலம் சேக்கிழார் ஒரு பாடல் வழி,

**"பாண்டிமா தேவியார் தமது பொற்பிற்**

**பயிலுநெடு மங்களநாண் பாதுகாத்தும்**

**ஆண்டகயார் குலச்சிறையார் அன்பினாலும்**

**அரசன்பால் அபராதம் உமதலாலும்**

**மீண்டுசிவ நெறிமடையும் விதியினாலும்**

**வெண்ணிறு வெப்பக்கலப் புகலி வேந்தர்**

**தீண்டியிட பேறுடையன் ஆதலாலும்**

**தீப்பிணியை பையவே செல்க "** [7]

என்பதை அறியலாம். ஞானசம்பந்தர் தேவாரத்தில் வரும் செய்திகளை பிறர் பாடிய பாடல் கொண்டு வலியுறுத்துவது பேராசிரியரின் ஆழ்ந்தகன்ற புலமையினைக் காட்டுகிறது. திருக்கோலக்காவில் புகலிப் பிள்ளையார் பொற்றலம் பெற்ற செய்தியை,

**"நாளும் இன்னிசையால் தமிழ்பரப்பும்**

**ஞானசம்பந் தனுக்கு உலகவர்முன்**

**தாளம்ஈந் தவன்பாடலுக் கிரங்கும் தன்மையாளனை "** [8]

என்னும் நம்பியாரூராரின் பாடலால் வலியுறுத்தியதை அறியலாம். ஞானசம்பந்தர் பாசுரங்களில் கற்பனை வளத்தையும் காண முடிகிறது. சான்றாகத் திருவையாற்றுப் பதிக பாடலைக் காணலாம்.

**“புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி**
**எரிவலின் திட்டையுமே லுந்தி**
**அளமந்த போதாக அஞ்சேலின்**
**றருள் செய்வான் அமரும் கோயில்**
**வலம் வந்த மடவர்கள் நடமாட**
**முழவதிர மலையின் ரஞ்சி**
**சிலமந்தி அலமந்து மரம் ஏறி**
**முகிர் பார்க்கும் திருவையாறே”** [9]

தேவாரப் பாக்களை சுவையுடன் எடுத்துரைக்கும் பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் ஞானசம்பந்தர் என்னும் இந்நூலுக்கு பேராசிரியர் இரா.சாரங்கபாணி அவர்கள் அணிந்துரை வழங்கியுள்ளார்.

## 14. பாட்டுத்திறன்

பேராசிரியர் க.ப.அறவாணன் புதுவைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவராகவும் இந்திய பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றத்தின் செயலாளராகவும் பணியாற்றியவர். **1986 இல் சிறந்த பேராசிரியருக்கான விருதைப் பெற்றுள்ளார்**. 2024 நவம்பரில் அவரது படைப்புகளை தமிழ்நாடு அரசு நாட்டுடைமையாக்கி சிறப்பித்துள்ளது.

உழைப்பாலும் நினைப்பாலும் ஓயாது எழுதி குவித்துக் கொண்டிருக்கும் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் பேராசிரியர் உலகில் கள்ளங்கபடமற்ற குழந்தையாய் திறந்த மனதோடு வாழ்ந்தவர். விரிந்த மனதோடு உதவுகின்றவர். அவர் எழுதிய பாட்டுத்திறன் என்னும் இந்நூலில் கவித்திறனை மட்டும் ஆராயாமல் கவித்திறனுக்கு அடிப்படையாகக் கிடைக்கும் உடலியல், உளவியல், உணர்வியல் ஆகிய அனைத்தையும் ஆராய்கிறது. உள்ளக்கிளர்ச்சி பற்றி வால்சல் ஆகியோர் கொண்ட கொள்கைகளை விளக்கி பழந்தமிழரின் உள்ளக்கிளர்ச்சி பற்றிய கொள்கைகளுடன் பொருத்தி ஆராய்ந்துள்ளார்.

1. **கவிதையின் தத்துவம்**
2. **கற்பனை**
3. **சொல்வளம்**
4. **யாப்பு முறை**
5. **அணிநலன்**
6. **தொடை நயம்**
7. **உண்மை பொருள்**

போன்ற பல்வேறு செய்திகளை பேராசிரியர் திறம்படவும் நிரல் படவும் விளக்கியுள்ளார். இந்நூலின் முற்பகுதி தமிழுக்கு அறிவியல் அணி சேர்க்கிறது. பிற்பகுதிகள் இரண்டும் கவியலுக்கு அணி சேர்க்கிறது. பாட்டுத்திறன் பற்றி பல்வேறு மரபு நூல்கள் தரும் கருத்துக்களையும் புதிய வரவு நூல்கள் கூறும் கருத்துக்களையும் இணைத்துத்தரும் பான்மையாக விளங்குகிறது இந்நூல் சான்றாக,

1. **குறிப்பு பொருள்**
2. **வடமொழி தொனி**
3. **தமிழ் இலக்கிய இலக்கண உள்ளுறை**
4. **இறைச்சி**

ஆகியவற்றுடன் இணைத்து ஆராயப்படுகிறது. அண்மை ஐரோப்பிய திறனாய்வாளர்கள் முனைந்து போற்றும் இமேசரி என்ற படிமம், நாற்றுப்புல படிமம் முதலாயின இலக்கிய மேற்கோள்களுடன் விளக்கப்பட்டுள்ளதை அறியலாம். சுவைகள் என்ற இயல், இரசம் பற்றிய பழைய கோட்பாட்டை புதிய வடிவில் அளிக்கிறது. இன்றைய இதழ்களில் முன்னிடம் எய்தி இருக்கும் புதுக்கவிதையின் வடிவம், உள்ளடக்கம், உத்தி ஆகியன ஆராயப்பட்டுள்ளது[10].

தமிழகத்தில் தமிழ் ஈழ செல்வாக்கின் விளைவாக மார்க்சிய அடிப்படையில் நிகழும் இலக்கிய ஆராய்ச்சி அறிமுகம் இந்நூலில் இடம்பெற்றுள்ளது. தமிழர்கள் நகைச்சுவை உணர்வு குறைந்தவர்கள் என்ற ஒரு கருத்து உண்டு. புதுக்கவிதை நகைச்சுவையை வைத்து எழுதப்பட்டிருக்கும் பாங்கை பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் எடுத்துக்காட்டுகளுடன் விளக்கியதை அறியமுடிகிறது. படிமக்கோட்பாடு குறியீட்டியல் மீமெய்மையியல் நனவோடை ஆகியன தமிழ் இலக்கியத் திறனாய்வு உலகிற்கு புதிய வரவாக உள்ளது. தமிழ் இலக்கிய மாணவர்களுக்கு திறனாய்வைத் தொடக்க நிலையில் அனைத்து பார்வையிலும் அறிமுகப்படுத்தும் நூலாக பாட்டுத்திறன் என்ற இந்நூலுக்கு பேராசிரியர் க.ப.அறவாணன் அணிந்துரை வழங்கியுள்ளார்.

## 15. கலியன் குரல்

பேராசிரியர் ஆறு.அழகப்பன் அவர்கள் மொழிப்புலம் மிக்கவர். அண்ணாமலை பல்கலைக்கழகத்தில் தமிழியல் துறைத் தலைவராகப் பணியாற்றியுள்ளார். அவர் வழங்கிய அணிந்துரையைக் காணலாம்.

அண்ணாமலைப் பல்கலைக்கழகச் சிறப்பு பொழிவுகள் திட்டத்தின்கீழ் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் தமிழியல் துறையில் நிகழ்த்திய மூன்று சொற்பொழிவுகள் கலியன் குரல் என்ற தலைப்பில் நூலாக அமைந்துள்ளது. இவர் அறிவியல் ஆசிரியராக தொடங்கித் தன் பணியினைத் துவங்கி தலைமையாசிரியராகப் பொறுப்பேற்று பின்னர் ஆசிரியர் பயிற்சி கல்லூரியில் பணியாற்றியவர். ஆழ்வார் அருந்தமிழால் ஈர்க்கப்பெற்று திருவேங்கடவன் பல்கலைக்கழகத் தமிழ் துறைத் தலைவராகப் 17 ஆண்டுகள் பணியாற்றினார் என்பதையும் அறியமுடிகிறது.

ஓயாத உழைப்பாலும் எழுத்தாற்றலாலும் இலக்கியம், சமயம், திருத்தலப்பயணம், திறனாய்வு, வரலாறு, அறிவியல், ஆராய்ச்சி பயிற்றுமுறை என்று பல்வேறு துறைகளில் தமிழிலும் ஆங்கிலத்திலும் 85 - க்கும் மேற்பட்ட நூல்களை தமிழுக்கு வழங்கியுள்ளார். இன்று வளர்ந்து வரும் அறிவியல் தமிழுக்கு இவரே ஒரு முன்னோடி. பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் கடந்த 28 ஆண்டுகளாக ஆழ்வார் அருளிச்செய்த செயல்களிலும் வைணவ தத்துவங்களிலும் கொண்ட ஈடுபாட்டின் காரணத்தால் '**கலியன்குரல்**' என்ற பொதுத்தலைப்பில் கலியனின் வாழ்வும் வழியும், அருளிச் செயல்கள் இலக்கிய இன்பம் அருளிச்செயல்கள் தத்துவக் கருத்து என்ற மூன்று ஆராய்ச்சி சொற்பொழிவுகளை நிகழ்த்தியுள்ளார்.

கலியன் என்பது திருமங்கையாழ்வாரின் திருப்பெயர்களில் ஒன்று. இந்நூலில் ஆசிரியர் கலியனின் வாழ்வு பற்றிய உண்மைகளை ஆழ்வார் பாசுரங்களிலிருந்து அகச்சான்றுகளாகத் தந்துள்ளார். கலியனின் அருளிச்செயல்களை எடுத்துரைத்து பக்தி சுவையினையும் கவிதை அனுபவத்தையும் விரித்துக் கூறியுள்ளார். திருமங்கையாழ்வார் **நாலுகவிப் பெருமாள்** என்று சிறப்பு பெற்றவராதலால் அவரின் புலமையினை விளக்கியுள்ளார். அவர் பதிகம் சிலவற்றில் நாட்டுப்புற இலக்கியக் கூறுகள் அமைந்துள்ளதை சுவைபடக் கூறி உள்ளதை அறியலாம்.

திருமங்கையாழ்வார் மங்களாசாசனம் செய்த திருத்தலங்கள் 108 வைணவ திவ்ய தேசங்கள் பொருள் குறிப்பு ஆகியன பின் இணைப்பாகத் தரப் பெற்றுள்ளன[11]. இந்நூல் நல்ல ஆராய்ச்சி நூலாக உள்ளது. இப்பொழிவுகள் நிகழக் காரணமாக இருந்த இந்திய மொழிப் புலக்குழு உறுப்பினர்களுக்கும் ஆட்சிக்குழு உறுப்பினர்களுக்கும் மாண்பமை துணைவேந்தர் பேராசிரியர் இராம.சேதுநாராயணன் அவர்களுக்கும் நன்றியைக் கூறியுள்ளார். இணைப் பேராசிரியர் வே. பழநியப்பன் மற்றும் வெ.இலக்குமணன் ஆகியோருக்கும் நன்றி செலுத்தி இந்நூலுக்கு ஆறு. அழகப்பன் அணிந்துரை வழங்கியுள்ளார்.

## 16. நினைவுக் குமிழிகள்-3

பேராசிரியர் ச.மெய்யப்பன் அண்ணாமலை பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையில் 36 ஆண்டுகளாகத் தமிழ் பேராசிரியராகப் பணியாற்றியுள்ளார். தமிழகத்தில் தமிழுக்கென்று ஏறத்தாழ 40 ஆயிரம்

நூல்களுடன் முதல் தனியார் ஆய்வகம் ஒன்றை சிதம்பரத்தில் அமைத்தார். இவர் எழுதிய **தாகூர் நூல் தமிழக அரசின் முதல் பரிசினை பெற்றது**. இவர் வழங்கிய அணிந்துரையைக் காணலாம்.

தமிழில் பல அறிஞர்கள் தங்களின் வாழ்க்கை வரலாறுகளை எழுதியுள்ளனர். அதில் திரு.வி.க அவர்களின் வாழ்க்கை குறிப்பு, சாமிநாத ஐயரின் வாழ்க்கை வரலாறு, திருச்சி டி.எஸ்.எஸ் ராஜன் அவர்கள் எழுதிய நினைவலைகள் போன்று தமிழில் பல்வகை இலக்கிய வடிவங்கள் பெருகி உள்ளன. தற்புகழ்தல் குற்றம் என்று கருதி தமிழ் பெருமக்களும் தமிழறிஞர்களும் தங்கள் வரலாறுகளை எழுதாமல் விட்டனர். இந்த தலைமுறையில்

1.**கண்ணதாசனின் வனவாசம்**

2.**கலைஞரின் நெஞ்சுக்கு நீதி**

3.**ஜெயகாந்தனின் ஓர் இலக்கியவாதியின் அரசியல் அனுபவங்கள்**[12].

ஆகிய மூன்றும் வாழ்க்கை வரலாற்று இலக்கியத்தின் முன்னோடிகளாகத் திகழ்வதை அறியலாம். கல்வியாளர் நெ.து.சுந்தரவடிவேலு அவர்கள் ஏறத்தாழ மூவாயிரம் பக்கங்களில் எழுதிய நினைவலைகள் குறிப்பிடத்தக்க வாழ்க்கை வரலாறு ஆகும். மேலே குறிப்பிடப்பட்ட வாழ்க்கை வரலாறுகள் அனைத்தும் தமிழ்நாட்டு வரலாற்றில் ஒரு நூற்றாண்டு காலத்தினுடைய நிகழ்ச்சிகளை உணர்வுகளை போக்குகளை அலைகளைப் பதிவு செய்கின்றன. பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் உயர்நிலைப்பள்ளித் தலைமையாசிரியராக வாழ்வைத் தொடங்கி படிப்படியாக தமிழ்த்துறை தலைவராக விளங்கி பின்பு கலைக்களஞ்சிய தலைமை பதிப்பாசிரியராக

உயர்ந்தவர். கல்வி உலகில் சிறந்து விளங்கியவர். இவர் படைத்த நூல்கள் அனைத்தும் அளவாலும் பொருளாலும் பெரியவை. அதிக பக்கங்களைக் கொண்ட நூல்கள் எழுதிப் பழகியப் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் தன் வாழ்க்கை வரலாற்று நிகழ்ச்சிகளில் பெரும்பாலானவற்றை தொகுத்து நினைவுக்குமிழிகள் என்ற தலைப்பில் நூலாக்கியுள்ளார். இந்நூலில் ஆசிரியரின் வாழ்வின் மிகச் சிறப்புடையப் பகுதியான காரைக்குடி வாழ்வை நினைவாக எழுதியுள்ளது கீழ்வருமாறு,

**காரைக்குடி நகரின் சிறப்பு:**

1. கவின்மிகு நகர்
2. கற்றோரைப் போற்றும் நகர்
3. கம்பனுக்கு விழா எடுக்கும் நகர்
4. செல்வர்கள் சிறப்போடு வாழும் நகர்
5. தமிழ் விழாக்களும் திருவிழாக்களும் மலிந்த நகர்
6. சொ. முருகப்பாவும் இராய சொக்கலிங்கமும் கம்பன் அடிபொடி கணேசனும் கண்ணதாசனும் வாழ்ந்த நகர்
7. பல பத்திரிக்கை ஆசிரியர்களை உருவாக்கிய நகர்

நாடெங்கும் நற்பணிகள் பல செய்யும் நகரத்தார்கள் வாழும் நன்னகர் என்று கூறியுள்ளார்[13]. இத்தகு நகரில் வாழ்ந்த காலங்களை எண்ணி நினைவலைகளைப் பதிவு செய்துள்ளார் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். காரைக்குடியின் கதையினை பெருமக்கள் வாழ்வினை கல்வி நிலையங்களின் வளர்ச்சி இணை சான்றோர்களின் சிறப்புகளை அறிஞர்களின் அறிவுரைகளை கவிதையாக தந்துள்ளார்.

பத்துப்பக்கம் கூட எழுத முடியாத பெருமக்கள் வாழும் இந்நாளில் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் பல்லாயிரம் பக்கங்கள் எழுதி சாதனை செய்தவர். திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் இவருடன் இருந்த இவருடைய நண்பரான இராசா அண்மையில் ஆகஸ்ட்மாதம் காணாமல் போன கதையைக் கூட கலையழகுடன் எழுதியுள்ளார். இது பேராசிரியரின் நினைவாற்றலையும் எடுத்துச்சொல்லும் திறமையினையும் எழுத்தாற்றலையும் புலப்படுத்துகிறது. ஒவ்வொரு குமிழியும் ஒருவகையில் நம் உள்ளத்தில் ஒரு அசைவினை உருவாக்குவதை அறியலாம். அவர் காலத்தில் உயர்கல்விப் பணிக்கு பிள்ளையார் சுழி போட்ட சா.கணேசனை பற்றிய நினைவுகளை எழுதியுள்ளார்.

சா.கணேசன் காரைக்குடியில் மிகவும் பிரபலமானவர், காந்தி வழி நின்றவர், நாட்டுப்பற்று மிக்கவர், பலமுறைச் சிறைக்குச் சென்றவர், 40 ஆண்டுகளுக்கு மேல் கம்பன் புகழ்ப்பாடி கன்னித்தமிழ் வளர்த்தவர், காரைக்குடி கம்பன் திருநாள் இவரின் திருத்தொண்டு. கம்பனுக்கு ஒரு மணிமண்டபமும் தமிழன்னைக்கு ஒரு திருக்கோயிலும் கட்டி முடித்தத் திருத்தொண்டர். கம்பன் மேல் அளவற்ற ஈடுபாடு கொண்டு கம்பன் அடிபொடி ஆனவர். பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் எல்லா நூல்களையும் படித்து திருத்தங்களைக் கூறி செம்மைப்படுத்தியவர். ஊரில் நடைபெறும் எல்லாத் திருவிழாக்களிலும் இவரின் பங்கு உண்டு. சுவாமிகள் திருமேனியை வாகனங்களில் ஏற்றி அலங்காரம் செய்வதில் அருகில் இருந்தே ஒவ்வொரு செயலையும் கவனித்து கலையுணர்ச்சியுடன் குறிப்புகளைத் தந்து செம்மைப்படுத்தியவர்.

திரு.சா.கணேசனை பற்றிய மதிப்பீட்டில் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் தரும் உவமைகளும் கருத்துக்களும் இந்நூலுக்கு வலிமை தருகின்றது.

நல்வாழ்வு வாழத்துடிக்கும் இளைஞர்களுக்கு அவரது வார்த்தைகள் கலங்கரை விளக்கம். இது அனைவரும் கட்டாயம் படிக்க வேண்டிய நூல். மூன்று ஆண்டுகளுக்கு முன் நினைவுக்குமிழிகள் குறித்த திட்டத்தைப் பற்றி சா.கணேசனிடம் கூறியள்ளார். பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் நிரம்ப படிப்பவர் நிரம்ப பேசுபவர் நிரம்ப எழுதுபவர் மூளை சுறுசுறுப்பும் உடல் சுறுசுறுப்பும் ஒருங்கே வாய்ந்தவர். அவர் எழுதிய நினைவுக்குமிழிகள் -3 என்னும் நூலுக்கு ச.மெய்யப்பன் அவர்கள் அணிந்துரை வழங்கியுள்ளதை அறியலாம்.

## 17. நினைவுக் மிழிகள் - 4

பேராசிரியர் தானியேல் தேவசங்கீதம் திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையில் பேராசிரியராகப் பணியாற்றியவர். இவர் வழங்கிய அணிந்துரையைக் காணலாம்.

பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் 1960-ல் திருவேங்கடவன் பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் விரிவுரையாளராக சேர்ந்தார். 1977-ல் பேராசிரியர் பதவியில் இருந்து ஓய்வு பெற்றார். திருப்பதியில் வாழ்ந்த பதினேழு ஆண்டுகளில் அவர் வாழ்க்கையில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை நினைவுக்குமிழிகள்-4 என்னும் நூலாக எழுதி உள்ளார். இவர் தமிழ்மொழி வளர்ச்சி பெறுவதை மட்டுமே தன் வாழ்க்கைப் பணியாகக் கொண்டு திருப்பதி மண்ணில் கால் வைத்தார். தம் மனத்தூய்மையால் அன்பு வார்த்தைகளால் மாணவர்கள் உள்ளங்களைக் கவர்ந்தவர்.

உள்ளொன்று வைத்து புறமொன்று பேசும் போக்கு இவரிடம் இல்லாததால் மாணவர்களுக்கு இவரிடம் அளவற்ற நம்பிக்கை உண்டானது.

பல ஆண்டுகளுக்கு முன்பு நடந்த நிகழ்ச்சிகளை மிகத் துல்லியமாக தேதி, மாதம், ஆண்டோடு பேராசிரியர் அவர்கள் இந்நூலில் குறிப்பிட்டுள்ளார். மூன்று மாத காலமாக தேவசங்கீதம் அவர்கள் வகுப்பில் செய்த பணி, அதற்கு பல்கலைக்கழகம் ஊதியம் கொடுக்க மறுத்த நிகழ்ச்சி பின்னர் பேராசிரியர் முயற்சியால் அப்பணிக்குரிய ரூபாய் 1200/- காசோலையைப் பெற்றது இவைகளை எல்லாம் நினைவாற்றலால் பதிவு செய்துள்ளார். இந்நூலில் சித்தரிக்கப் பெரும் ஒவ்வொரு நிகழ்ச்சியும் வேதனை மிகுந்த பேராசிரியர் உள்ளத்தில் எழுந்த குமுறல்கள். அவையே பின்னர் குமிழிகளாக எழுதப்பட்டது. திருப்பதி வாழ்வில் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் சுகப்பட்டதை விட துன்பப்பட்டதுதான் மிகுதி,

**“திருப்பதி வாழ்வில் பூமகளின் கடைக்கண்**
**நோக்கு சரியாக இல்லை ; ஏன்**
**சுத்தமாக இல்லை என்றே சொல்லலாம்”** [14]

என்ற தொடர்கள் அவர் அடிமனதில் உள்ள வேதனை குமுறல்கள். தியாக உணர்வும் உண்மையான தமிழ் பற்றும் எதையும் தாங்கும் இதயமும் பலனை எதிர்பாராது கடமை ஆற்றும் கண்ணியமும் நிறைந்த பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் எத்துன்பங்களையும் பொருட்படுத்தாமல் ‘**என் கடன் பணி செய்து கிடப்பதே**’ என்று தமிழ்ப்பணி செய்து வந்தவர்.

இவர் **திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தின் தமிழ்த்துறையை உருவாக்கிய சிற்பி (The Architect of the Dept of Tamil of Sri Venkateswara University)** என்பது தமிழ் கூறும் நல்லுலகம் நன்கறிந்த உண்மை. இந்த சிற்பியின் வேதனைகள் மற்றும் கனவுகள் இந்நூலிலைப் படிக்கும் போது மெய்சிலிர்க்க வைக்கிறது.

**"உண்ணுஞ் சோறுபருகும் நீர்தின்னும் வெற்றிலை**
**எல்லாம் கண்ணனே"[15].**

என்று எண்ணிய ஆழ்வார் நெறியில் ஆழங்கால் பட்டவர். திருப்பதியில் கால் வைத்த நாள் முதல் தமிழ்த்துறை தோற்றுவிப்பது ஒன்றையே தன் வாழ்நாள் வளமாகக் கொண்டு திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் ஒரு சாதாரண விரிவுரையாளராகச் சேர்ந்து பல எதிர்ப்புகள், அவமானங்கள், நிபந்தனைகள் இவற்றையெல்லாம் சகித்து தமிழ்த்துறையை நிறுவினார். பேராசிரியர் தமிழ்த்துறை உருவாக்கியதோடு நிறுத்திக் கொள்ளவில்லை.

மொழி வழி மாநிலங்கள் பிரிந்த பின் வடவேங்கட பகுதிகளில் தமிழ் கொஞ்சம் கொஞ்சமாக சாவதை பார்த்து இப்பகுதிகளில் எப்படியாவது தமிழ் மக்கள் தமிழ் உணர்வோடு வாழ வேண்டும் என்று எண்ணி **பாக்காலா**, **சித்தூர்**, **திருப்பதி**, **புத்தூர்**, **நகரி**, **குந்தக்கல்** போன்ற இடங்களில் படிப்படியாக தமிழ்ச்சங்கங்களை ஏற்படுத்தி அங்குள்ள தமிழர்களை ஊக்குவித்தார். பலவிடங்களில் சிதறிக்கிடந்த உறுப்பினர்களை ஒன்று சேர்த்தல், தாமே நேரில் சென்று நிர்வாக சபையைக் கூட்டச் செய்தல், தீர்மானங்களை தட்டச்சு செய்து அவற்றைத் தமிழக அரசு, தமிழ் வளர்ச்சி இயக்கம், ஆந்திர அரசு முதலான இடங்களுக்கு அனுப்பல் போன்ற சிறந்த பணிகளை இத்தமிழ்

சங்கங்களில் செய்ததோடு நல்லறிஞர் பலரை அமைத்து சிறந்த பல சொற்பொழிவுகளை ஆற்றி மாற்றம் செய்திருந்ததையும் அறியமுடிகிறது. இவ்வாறே ஆந்திர மண்ணில் வாழும் தமிழ் மக்களின் உள்ளப்புழுக்கத்தை தமிழ் தென்றலால் அகற்றிய பெருமைக்குரியவராகத் திகழ்ந்தவர் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார்.

திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தொடர்ந்து வந்த நான்கு துணை வேந்தர்களிடமும் பணிவோடு அன்போடு பழகி இருந்தாலும் தன்னுடைய உரிமை இவர்களால் பறிபோகும் போது துணிச்சலோடு செயலாற்றினார். '**முறையற்ற முறையில் நடைபெற்ற என் பேட்டி**' இராமகிருஷ்ணன் மருத்துவக் கல்லூரியில் சேர்வது முதலான குமிழிகள் மூலம் இவருடைய துணிவை அறிய முடிகிறது. '**அஞ்சாமை அறிவுக்குத் தாய்**' என்ற பொன்மொழிக்கேற்ப இவருடைய தெளிந்த சிந்தனை சிதறல்களுக்கு அஞ்சாமையே காரணம்.

பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் நினைவுக்குமிழிகள் ஒரு தென் வரலாற்று நிகழ்ச்சிக்கோவை மட்டுமன்றி அஃது ஒரு சிறந்த இலக்கியம். வாழ்க்கை அனுபவங்களை இலக்கியச் சான்றுகளால் விளக்குவதும் இலக்கியம் கூறும் உண்மைகளை, நீதிநெறிகளை, வாழ்க்கைத் தத்துவங்களை தன் சொந்த வாழ்க்கை நிகழ்ச்சிகளால் விளக்கிக் காட்டுவதும் இந்நூலின் சிறப்புகளுள் தலையாயவை என்று கூறியுள்ளார். பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்களுக்கு தன்னம்பிக்கை ஒரு தும்பிக்கை. இத்தும்பிக்கை சோர்ந்து போகும்போதெல்லாம் இவரின் இறை நம்பிக்கை அச்சோர்வை போக்கி புத்துயிர் கொடுத்திருப்பதை அறியலாம்.

சிறந்த கற்பனைகளையும் அனுபவ உண்மைகளையும் நகைச்சுவை உரையாடல்களையும் அப்போது துய்த்த மு.வ அவர்கள் பேராசிரியரை நோக்கி '**நீங்கள் இந்த திறமைகளை எல்லாம் பயன்படுத்தி நாவல்கள் எழுதலாமே**' என்று கூறுவார். ஆனதரங்கம் பிள்ளை நாட்குறிப்பு போல எதிர்கால அறிஞர்களுக்கும் ஆராய்ச்சியாளர்களுக்கும் இவரது வாழ்க்கை வரலாற்று நூல் பயன்படும் வகையில் அமைகிறது. இந்நூலுக்கு பேராசிரியர் தானியேல் தேவசங்கீதம் அவர்கள் அணிந்துரை வழங்கியுள்ளார்.

## 18. மாணிக்கவாசகர்

பேராசிரியர் பொன்.சௌரிராசன் திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியாற்றினார். அவர் வழங்கிய அணிந்துரையைக் காணலாம்.

கவிதை ஓட்டத்தை களிற்றுநடை, பரிநடை என்றெல்லாம் குறிப்பிட்டு வாய்விட்டு படித்து மகிழ்வர். '**ஆடு கொடிப்படை சாடி அறத்தவரே ஆள**' என்னும் கம்பர் தன் பாடல் பரிநடையில் அமைந்துள்ளது என்று மொழிநடையில் பாடி இன்புறுவதை அறியலாம். பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்களது நடை எப்போதுமே கோலஞ்சை துங்க களிற்றின் நடையாக அமைந்ததை காணமுடிகிறது. மாணிக்கவாசகர் நூலின் தொடக்கமும் வளர்ச்சியும் பெருமிதத்தோடும் மிகுந்த அனுபவத்துடனும் அமைந்து விளங்குவதை அறியலாம்.

**மதுரையின் சிறப்பு:**

1. தமிழ்ச் சங்கம்
2. மீனாட்சி சுந்தரேஸ்வரர் கோவில்

3. ஒன்பது கோபுரங்கள் கொண்ட கோவில்
4. சிற்ப வடிவங்கள்
5. கற்றூண்கள்
6. பண்டைய தமிழரின் கலை சிறப்பு
7. நாகரிக முதிர்ச்சி[16]

இவருடைய நடையில் தத்துவம் தாண்டவம் ஆடும் என்றும் அறிவியல் பல அழகு செய்யும் என்பதையும் அறியலாம். '**முக்தி நெறியே அறியாத**' என்னும் மாணிக்கவாசகர் பாடலை பேராசிரியர் நெஞ்சம் அசைபோடுகிறது. முக்திநெறி பக்திநெறி இரண்டும் அவர் சிந்தையில் இடம் பெற்றுள்ளன. முக்திநெறியானது **சரியை**, **கிரியை**, **யோக**, **ஞானங்களால்** முதிர்ந்த அறிவுடைய பெருமக்கள் மட்டுமே அறிந்து கடைபிடித்தற்குரிய அமைப்புடையது. பக்தி நெறியானது மக்கள் அனைவரும் அன்பினால் பின்பற்றுவதற்குரிய எளிமை வாய்ந்த வழி. முக்தி நெறியின் அருமையும் பக்தி நெறியின் எளிமையும் வாசகர் வாக்கில் விளங்கும் வண்ணம் உண்மையை உணர்ந்து தெளிவு செய்யும்போது பேராசிரியரின் நெஞ்சம் ஆழங்கால் பட்டு வைணவ நெறியின் பயன் கற்பவருக்கு நன்கு புலனாகிறது.

மாணிக்கவாசகரின் பிறப்பையும் வளர்ப்பையும் எழுதுகிற ஆசிரியர் திருவாதவூர் சூழலை நெஞ்சில் நிறுத்தி நினைவூட்டுகிறார். உழவுத் தொழிலே மக்களின் வாழ்க்கைத் தொழில். அந்த ஊர் ஏரி மதகின்மீதுள்ள ஒரு சிலை மனித மனங்களைக் கவரும் வண்ணம் இருப்பதாகக் கூறியுள்ளார். அச்சிலை மனித முகமும் சிங்க உடலும் கொண்டது. அதன் சிற்பம் கண்ணை கவரும் பான்மையுடையது.

இது "**புருஷா மிருகம்**" என்ற பெயரால் வழங்கப்படுகிறது. இந்த ஏரி நீரைத் தூய்மையாக்கும் தெய்வம் என்றும் ஊரைக் காக்கும் தெய்வம் என்றும் இதனால் ஆண்டுதோறும் மகாசிவராத்திரியன்று ஒரு திருவிழா நடைபெறுகின்றது என்று கூறுயுள்ளார். பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் பிறவியிலேயே ஓர் ஆராய்ச்சியாளர். திருத்தில்லையில் அருளிச்செய்தல் பகுதியில் இவரின் ஆராய்ச்சி ஆழ்ந்தும் அகன்றும் செல்லுதலை நன்கு அறியமுடிகிறது. இடையிடையே மாணிக்கவாசகப் பெருமானுக்கும் தில்லை கூத்தனுக்கும் மானசீகமான முறையில் நிகழ்ந்த பேச்சினை நேர்முக நடையில் சிறுகதை போக்கில் ஆங்காங்கே கூறியுள்ளார். "**எல்லா பொருளும் இதன் பால் உள**" என திருவள்ளுவரின் திருக்குறளை உலகம் போற்றி உரைக்கும்.

திருவாசகம் நெஞ்சுருக்கும் நீர்மையுடையது, இது உண்மைதான். அதில் பொதிந்துள்ள சைவ சித்தாந்த சிந்தனைகள் அறிந்து கொள்வதற்கு மிக அருமையானவை. மாணிக்கவாசகர் அருள்பொழியும் சித்தாந்தக் கோட்டைக்குள் பயணம் செய்வதையும் காட்டுகிறார்.

**"தென்னாடுடைய சிவனே போற்றி**
**எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி** "[17]

என்று மாணிக்கவாசகர் போற்றும் பழம்பதியாகிய பாண்டி நாட்டில் வைகை ஆற்றங்கரையில் உள்ள திருவாதவூர் என்பது ஒரு சிற்றூர். ஒருவரைப் பற்றி, ஒரு நூலைப்பற்றி, எழுதிவிட்டால் பின்வருபவர் எழுதுவதற்கு வேறொன்றும் இல்லாமல் போய்விடும். இவ்வாறு பல கோணங்களில் நூல்கள் படைக்கும் பாங்கு பேராசிரியருக்கு மட்டுமே அமைந்த எழுத்து நடையாகும். இந்நூலில் அமைந்த பின்னிணைப்புகள்,

1. **பயன்பட்ட நூல்கள்**
2. **பழமொழிகள்**
3. **புராண வரலாறுகள்**
4. **மாணிக்கவாசகர் வழிபட்ட தலங்கள்**

ஆராய்ச்சிக்கும் அகங்குழைந்த பொருள்உணர்வுக்கும் உதவவல்ல இந்த நூல் சைவ அன்பர்களும் தமிழ் ஆய்வாளர்களும் கவிதை ஆர்வலர்களும் படித்து பயன்பெற வேண்டிய ஒப்பற்ற நூலாகும். இத்தகைய நூலுக்கு பொன்.சௌரிராசன் அவர்கள் அணிந்துரை வழங்கியுள்ளார்.

## 19. சடகோபன் செந்தமிழ்

பேராசிரியர் தி.வைத்தமாநிதி அவர்கள் தமிழ்த்துறை பேராசிரியராகப் பணியாற்றியவர். அவர் பேராசிரியரின் சடகோபன் செந்தமிழ் என்ற நூலுக்கு வழங்கிய அணிந்துரையைக் காணலாம்.

சடகோபன் செந்தமிழ் என்னும் நூல் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்களது அடிமனதில் அனுபவமாக பல நாட்கள் படிந்து படிந்து மனம் முழுவதையும் நிறைக்க முயல்கின்ற இலக்கிய ஆக்கம் எழுத்தோவியமாக கிடைத்துள்ளது. சைவ மரபினரான அவர் “**வேதம் தமிழ் செய்த வித்தகர்**” ஆன நம்மாழ்வாரின் பாசுரங்கள் தரும் இறையனுபவத்திலும் ஈரத்தமிழிலும் மனதை பறிகொடுத்ததை அறியமுடிகிறது.

**“வைணவத்தில் இந்த நிலையும் அதைச்**
**சொல்லும் தமிழ்சுவையும் வேறொர் ஒப்பின்றி**
**உயர்வது போது உள்ளதே”[18]**

என்று அவர்கள் நூலின் தொடக்கம் முதல் முடிவுரை வரை இந்த உணர்வு நிலைபெற்று இருக்கிறது.

இதில் நம்மாழ்வாரின் வாழ்க்கை வரலாற்றை நூலின் முதல் இயலாகத் தந்துள்ளார். **டி. எஸ். எலியட் என்ற மேனாட்டு அறிஞர் ‘Myth is the emotional equivalent of philosophy’** என்று குறிப்பிட்டுள்ளார். இதனைத் தொடர்ந்து சடகோபன் செந்தமிழ் 15 இயல்களாக அவரின் நோக்கமான நம்மாழ்வாரையும் அவர் தாயாக விளங்கி ஈன்ற தமிழ் மறையையும் ஒருசேர இணைத்துக் காட்டியுள்ளார். வைணவ நெறி நிற்போர் **‘பிரமாணம்’ ஆதாரம் ‘பிரமேயம்’ சொல்லப்படும் பொருள் ‘பிரமாதர்’ ஆதாரம் கொண்டு பொருளை அளந்தறிபவன்** என்று மூன்றம்ச அடிப்படையில் தன் கொள்கைகளை வகுத்துக் காட்டினார். வைணவ நெறியின் அடிப்படைச் சட்டம், தமிழ் வேதங்களான திவ்யப்பிரதேசங்களே.

**ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி**
**தாழ்வதுமில் குரவர் தாம்வாழி - ஏழ்ப்பாரும்**
**உய்ய அவர்கள் உரைத்தலைகள் தாம்வாழி**
**செய்யமறை தன்னுடனே சேர்ந்து**

இவைப்போன்ற அருளிச்செயல்கள் தோன்றிய காலத்திலிருந்தே தென்புலத்து வைணவ நெறியின் பிரமாணமானது.

1. **பரம்**
2. **வியூகம்**
3. **விபவம்**
4. **அந்தர் யாமித்துவம்**
5. **அர்ச்சை**

இவை ஐந்து நிலைகளையும் திவ்ய பிரதேசங்கள் பேசுகின்றன. பிரமாணம், பிரமேயம் பிரமாதா என்ற மூன்றம்சம் கொண்ட வைணவ சமயநெறிக் கொள்கையை அப்படியே இலக்கியத்தோடு சமய பக்தி வழியில் கண்டு உறவாக்கி சடகோபன் செந்தமிழ் என்ற இந்நூலில் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் விளக்கியுள்ளதை அறியமுடிகிறது. இந்த விளக்கம் கம்பரின் '**சடகோபரந்தாதி**' என்ற நூலில் ஒரு பாசுரத்தில் கூறிய பாடலை காணலாம்.

**"அந்தமி லாமறை யாயிரத்**
**தாழ்ந்த அரும்பொருளைச்**
**செந்தமி ழாகத் திருத்தில**
**னேல்நிலத் தேவர்களும்**
**தத்தம் விழாவும் அழகும்என்**
**னாம் தமி ழர்கவியின்**
**கூர்வந்த பண்ணவனே"** [19].

திருக்குருகூர் பண்ணவன், புனிதன், சடகோபன், வேதங்களின் அருமையான சாரத்தை மிகச்செவ்விய தமிழ் பிரபந்தமாக சீர் செய்தவர் என்றெல்லாம் புகழப்படுபவர் நம்மாழ்வார். அருளிச்செயல்கள் அகப்பொருள் தத்துவம் தோழி, தாய், மகள் பாசுரங்கள் என்ற தலைப்புகளில் ஆறு முதல் பத்தாவது முடிய ஐந்து இயல்களில்

வைணவ நெறியின் பிரமாணம் என்ற அம்சத்தை விளக்குகிறார். பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் கருப்பொருளைப் பருப்பொருளாகக் காட்டுவது போல வியாக்கியானங்களின் துணையோடு அருமையாக விளக்கிக் கூறியுள்ளார். இந்த இயலில் பகவத் பக்தியாகின்ற பகவத் காமமே பரம புருஷார்த்தம் என்று ஆழ்வார்களின் பாசுரங்கள் மெய்ப்படுவதை எடுத்துக் கூறியுள்ளார்.

**சொல்லார் தமிழ் ஒருமூன்றும் கருதிகள்**
**நான்கும் எல்லை**
**இல்லா அறநெறியாகவும்**
**தெளிந்த**

என்று அறுதியிட்டார் திருவரங்க அமுதனார்.

**“சேமனல் விடும் பொருளும்**
**தருமமும், சீரியநல்**
**காமமும் என்று இவை நான்கு என்பர்**
**நான்கினும் கண்ணுக்கே**
**ஆம் அது காமம்”**

என்று நிலைநாட்டினார். பேராசிரியரின் நூலில் ஆறாவது இயலிலிருந்து விளக்கங்கள் வளர்ந்து கொண்டே வந்ததை அறியலாம். 12-வது இயலில் இறையனுபவம் நம்மாழ்வார் பிரபந்தங்கள் அனைத்தின் சாரத்தைப் பிழிந்து ஆழ்வாரின் பிரபத்தியையும் இன்பத்துன்பங்கள் மனம் மற்றும் உடல் நிலைகளில் பரிமாற்றமாவதின் தன்மையையும் உயிரின்கண் உண்டாகும் துன்பம் எது என்றும் விளக்கியுள்ளார். 13, 14, 15 வது இயல்களில் கனமும் முழு வளர்ச்சி பெற்றுள்ளது. அவை அர்த்த பஞ்சகம், தத்துவத் திரயம், மந்திரங்கள் ஆகிய மூன்று இயல்கள்

உள்ளன. இறைநிலை, உயிர்நிலை, தக்கநெறி, தடையான ஊழ்வினை, வாழ்வினை ஆகிய வீடுபேறு இவற்றை அர்த்த பஞ்சகம் என்று வைணவ நெறி பேசியதை அறியமுடிகிறது. திருவாய்மொழி பாசுரங்களின் அடிகளைக் கொண்டே இவை அனைத்தையும் சுட்டிக்காட்டுகிறார் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார்.

**“தேனும் பாலும் கன்னலும்**

**அமுதும் ஆகித் தித்திப்ப**

**யானும் எம்பி ரானையே**

**ஏத்தினேன் யான் உய்வானே ”**

என்று ஆழ்வார் திருநகரியில் பிறந்து வளர்ந்த அவர் போன்ற ஒரு தமிழனுக்கு சடகோபன் செந்தமிழ் இனிப்பினை நுகர்வது போன்று இந்நூலுக்கு தி.வைத்தமாநிதி அவர்கள் அணிந்துரை வழங்கியுள்ளார்.

## 20. பரகாலன் பைந்தமிழ்

பேராசிரியர் ஏ.வி.ரங்காச்சாரி அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் பொருளாதாரத்துறைத் தலைவராகப் பணியாற்றினார் இவர் வழங்கிய அணிந்துரையைக் காணலாம்.

**“தேனுடை கமலத் திருவினுக்கு அரசாகிய”** தேவாதி தேவனை தொழுவதை விட பெரிய இன்பம் இல்லை என்று எடுத்தியம்பும் வகையில் சொல் மாலை முடித்த ஆழ்வார்கள் பன்னிருவர். இவர்களுள் காலத்தால் முந்தியவர் திருமங்கையாழ்வார். அர்ச்சா திருமேனியில் உள்ள ஊற்றத்தை இவ்வாழ்வார் பாசுரங்கள் உண்டாக்குவது போல மற்றைய ஆழ்வார்களின் பாசுரங்களும் உண்டாக்கும்.

**ஆசு**, **விஸ்தாரம்**, **மதுரம்**, **சித்ரம்** என்ற நான்கு வகை கவிதைகளை பாடுவதன் மூலம் நாலுகவி பெருமாளாகத் திகழ்ந்த இவ்வாழ்வார் தமிழ் காவியத்தின் கரை கண்டவராகப் போற்றப்படுகின்றனர். கலிக்கன்றி ஒலி செய்த இன்பப் பாடலாம் பெரிய திருமொழியின் ரசத்தை உண்டு தன்னுள்ளம் தடித்து அதனால் வலிமிக்க சீயம் இராமானுஜன் என்று அழைக்கப்பட்டவர் அமுதனார். நூல்துறை முற்றும் ஓதிய ஸ்ரீ பராசரபட்டர் தன்னைத் **திருநெடுந்தாண்டகம் கற்றோம்** என்று பெருமை கொள்வதை அறியலாம். கலியன் உரைக்கொண்ட கருத்துடையோர். எம்பெருமானுடைய அச்சாவதாரத்தில் உள்ள ஊற்றத்தாலே இவர் தன்னை தேஹாத்மவாதியாகக் கூறிக்கொண்டார்.

**“ஆத்மாவை வெய்யிலிலே இட்டு சரீரத்தை நிழலிலே வைத்தவர்”**

என்றும் பெரியோர் இவர் பெருமையை பேசுவர். ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்த திவ்ய தேசங்கள் 108-ல் எண்பத்திஆறு திவ்யதேசங்களை நேரில் சென்று பாடிய பெருமை திருமங்கையாழ்வார்கே உரியது. ஆழ்வாரின் திருத்தலப் பயணங்களையும் ஆழ்வார் பாடல்களின் அருமை பெருமைகளையும் நயங்களையும் பரகாலன் பைந்தமிழ் என்னும் இப்புதிய நூலைப் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் தமிழ் நல்லுலகிற்கு தந்துள்ளதை அறியமுடிகிறது.

முதல் இயலில் திருமங்கை மன்னனின் பிறப்பு, வளர்ப்பு, திருமணம் போன்றவற்றையும் திருமங்கை மன்னன் திருமங்கையாழ்வாராக மாறிய காரணங்களையும் விளக்கியுள்ளார்.

இரண்டாவது இயலில் ஆழ்வார் வயலாலி மணவாளனிடமிருந்து உபதேசம் பெற்ற திருமந்திரத்தின் வைபவத்தையும் ஆழ்வார்க்கு உபதேசித்த வரலாறு போன்றவற்றையும் எட்டெழுத்தாகிய திருமந்திரம் ஸர்வாதிகாரம் என்று விளக்கி திருக்கண்ணபுரத்து எம்பெருமானிடம் தான் கற்ற திருமந்திரப்பொருள் சிறப்பு **பாகவத சேஷத்வமே** என்பதை,

**"மற்றும்ஓர் தெய்வம் உளதென்று இருப்பாரோடு**
**உற்றிலேன் உற்றதும் உன்னடியார்க் கடிமை**
**மற்றெல்லாம் பேசிலும் நின்திரு வெட்டெழுத்தும்**
**கற்றநாண் கண்ண புரத்துறை அம்மானே"**[20]

என்று காட்டியுள்ளதை அறியமுடிகிறது. மூன்றாவது இயலில் திருமங்கையாழ்வாரின் வாழ்க்கை பற்றிய விவரங்களை அகச்சான்றுகளைக் கொண்டு ஆலி நாட்டிற்கும் வாட்போரில் பகைவர் உடல் துணிக்கவல்லவர், பெருஞ்செல்வம் உடையவர், புலவர் போற்றும் புலமையும் கவிபாடும் திறமையும் உடையவர், பரம்பரைப் பரம்பரையாக திருமால் அடியவர் என்றெல்லாம் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அழகாக விளக்கியுள்ளார். சீர்காழிப் பதிகத் திருமுகத்து பாசுரத்தில் ஆழ்வார் தன்னை கொற்றவேல் பரகாலனாக சிறப்பித்துக் கூறிக்கொண்டதும் ஆழ்வார் திருவரங்கத்துத் திருப்பணிகள் பல செய்தமையை,

**"மாடமாளிகை சூழ்திரு வீதியும் மன்றுசேர்**
**திருவிக்ரமன் வீதியும்**
**ஆடல்மாறன் அகளங்கன் வீதியும் ஆலிநாடன்**
**அமர்ந்துறை வீதியும்**
**கடல்வாழ் குலசேகரன் வீதியும் குலவிசை**
**மகேந்திரன் வீதியும்**

**தேடரிய தர்மவர்மா வீதியும் தென்னரங்கர்**

**திருவா வரணமே ”**[21]

என்று கோயில் ஒழுகு அறிவிக்கும். நான்கு முதல் எட்டு இயல்கள் வரை திருத்தலப் பயணம் பற்றியவை. வடநாட்டு திருத்தலப் பயணத்தில்,

1. வதறித்திருமலை
2. சாளக்கிராமம்
3. வடமதுரை
4. திருவாய்ப்பாடி
5. பிருந்தாவனம்
6. திருப்பாற்கடல்
7. அயோத்தி
8. நைமி சாரணியம்
9. துவாரகை
10. சிங்கவேல் குன்றம்
11. திருவேங்கடம்

ஆகிய பன்னிரண்டு வடநாட்டுத் திருப்பதிகளின் அமைப்பு ஆழ்வார்கள் காட்டும் இயற்கை சூழ்நிலை புராண வரலாறு போன்றவற்றை தெளிவாகக் கூறியுள்ளார். தொண்டை நாட்டுத் திருத்தலப் பயணத்தில்,

1. திருவள்ளூர்
2. திருநின்றவூர்
3. திருவல்லிக்கேணி
4. திருநீர்மலை
5. திருக்கடல் மல்லை

6. திரு இடஎந்தை

7.திருக்கடிகை

இவை ஏழும் ஒரு இயலிலும் காஞ்சி திருத்தலங்கள் 15 குறித்து தனி ஒரு இயலிலும் விளக்கியுள்ளார். சோழநாட்டுத் திருத்தலப் பயணத்தை '**ஈரிருப்பதாம் சோழம்**' என்ற 40 தளங்களையும் 158 பக்கங்களில் மூன்று பகுதிகளாகப் பிரித்து கூறியதை அறியமுடிகிறது. ஸ்ரீ வைணவ உலகில் பரகாலன் பைந்தமிழ் என்ற பெரிய நூல் வெளிவந்ததில்லை. திருமங்கையாழ்வார் பனுவல்களை 341 பக்கங்களில் திருத்தலப் பயணத்தையும் 218 பக்கங்களில் பரகாலன் பனுவலகளின் தத்துவங்களையும் மிக எளிய முறையில் பேராசிரியர் படைத்த இந்நூலுக்கு ஏ.வி.ரங்காச்சாரி அவர்கள் அணிந்துரை வழங்கியுள்ளார்.

## 21. வாய்மொழியும் வாசகமும்

பேராசிரியர் அ.அ.மணவாளன் சென்னை பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறைப் பேராசிரியராகப் பணியாற்றினார். இவர் இந்திய தமிழ்மொழி அறிஞர். **48** மொழிகளில் எழுதப்பட்ட இராமாயணத்தின் ஒப்பீட்டு ஆய்வான இராமக்காதையும் இராமாயணங்களும் என்ற படைப்புக்காக '**சரஸ்வதி சம்மான் விருது**' **2011 ஆம் ஆண்டு** வழங்கப்பட்டது. அவர் வழங்கிய அணிந்துரையைக் காணலாம்.

பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரை அறியாத தமிழறிஞர்களும் தமிழ் கல்வி நிறுவனங்களும் தமிழ்நாட்டு சமயப் பெரியார்களும் சமயக் கல்வித் தழைக்கப் பாடுபடும் சமய அமைப்புகளும் தமிழ்நாட்டில்

இல்லை என்று கூறினால் அது மிகையன்று. இவர் தமிழ் இலக்கியம், கல்வியியல், அறிவியல், சமயங்கள் என பல்வேறுத் துறைகளிலும் அனுபவமும் பயிற்சியும் புலமையும் பெற்று பல நூல்களைப் படைத்துள்ளார். வாய்மொழியும் வாசகமும் என்னும் இந்நூல் 10 கட்டுரைகளின் தொகுப்பாக எழுதப்பட்டுள்ளன. அவற்றுள் மிக நீண்ட கட்டுரைகளாக நான்கு கட்டுரைகள் விளங்குகின்றன அவை,

1. சமயமும் அறிவியலும்
2. திருமங்கையாழ்வார்
3. வாய்மொழியும் வாசகமும்
4. சரணாகதி நெறி

அடுத்த மூன்று கட்டுரைகள் இடைநிகர்த்த அளவுடையதாக அமைகின்றன.

1. நம்மாழ்வாரின் இறையனுபவம்
2. புலவர்க்கு அறிவுரை
3. கீதை மறைமுயின் சாரம்

அடுத்துள்ள மூன்று கட்டுரைகள் சிறிய அளவில் உள்ளன.

1. திருக்குறள் சமயவியல் சிந்தனைகள்
2. தமிழ் முருகன்
3. நாலாயிரத்திவ்ய பிரபந்தம்[22]

இந்நூலில் முதற்கண் அமைந்துள்ள சமயமும் அறிவியலும் என்னும் கட்டுரை ஒவ்வாதன போலவும் முரண்படுவன போலவும் தோற்றமளிக்கும் இருபெரும் மானுட வாழ்வுத் துறைகள் ஒரே கருத்துடையன என்றும் உலகமும் இறைவனும் உள்பொருள்கள்

இவற்றுள் இறைவனே முதல் காரணம் உலகத் தோற்றமும் ஒடுக்கமும் அவனை முன்னிட்டு நிகழ்கின்றது என்றும் அக்கட்டுரையில் விளக்கியுள்ளார்.

அண்டங்களின் அமைப்பை விஞ்ஞானமும் மெய்ஞானமும் ஒரே தன்மையில் விளக்கும் பாங்கினை மாணிக்கவாசகப்பெருமான், பரஞ்சோதி முனிவர், பாரதியார் போன்றவர்களின் பாடல்களைக் கொண்டும் அறிவியலாளர்களின் கொள்கைகளைக் கொண்டும் விளக்கியுள்ளதை அறியலாம். சமயக் கோட்பாடுகளாகிய சற்காரிய வாதம் விசிட்டாத்துவிதம் என்பதனையும் தமிழர்தம் திருநாளாம் பொங்கல் விழாவின் அடிப்படை தத்துவத்தையும் அறிவியல் உண்மைகளோடு பொருத்தி விளக்கும் கட்டுரை முதன்மையானதாக அமைந்துள்ளது.

இரண்டாவது கட்டுரை திருமங்கையாழ்வார் பற்றியது. அவரை ஆட்கொண்ட வரலாற்றையும் அதனால் ஞானக்கண் திறக்கப்பெற்ற கலியனாழ்வார் மேற்கொண்ட திருத்தலப் பயணங்களையும் அவரால் மங்களாசாசனம் செய்யப்பட்ட அச்சாவதாரங்களையும் விளக்கமாக எடுத்துரைத்துள்ளார். வாய்மொழியும் வாசகமும் என்னும் கட்டுரையில் இறைவன் இறையனுபவம் என்னும் நிலைகளை மணிவாசகப் பெருமானும் நம்மாழ்வாரும் உணர்ந்து துய்த்து உணர்ந்துள்ள திறம் ஒரே தன்மையனவாய் அமைந்துள்ளதை விளக்கியுள்ளார். தமிழ் முருகன் என்னும் கட்டுரை முருகப் பெருமானின் தனிப்பெருஞ் சிறப்புகளை விளக்குகிறது.

ஆழ்வார்களின் அருளிச்செயல்களை அருளாளர் நாதமுனியடிகள் அடைவுபடுத்தி நாலாயிரம் என அழைத்த சீர்மையினை

நாலாயிரத்திவ்விய பிரபந்தம் என்னும் கட்டுரை விளக்குகிறது. ஆறாக்காதல் குருகூர் சடகோபன் எம்பெருமான் மீது கொண்டிருந்த தீராக்காதற் பெருமையினை ஆழ்வார்தன் ஆன்மா அநுபவத்தை நம்மாழ்வாரின் இறைனுபவம் என்னும் கட்டுரை விளக்குகிறது. வாய்மொழியும் வாசகமும் என்னும் இந்நூல் பல உதிரிக் கட்டுரைகளின் தொகுப்பாகத் தோற்றமளிக்கிறது. இறையுண்மை, இறைத்தன்மை, இறையனுபவம் முப்பெரும் உண்மைகளை அருளாளர்களின் திருவாக்கு, ஆச்சாரியர்களின் மெய்யுணர்வு, அறிவியலாளரின் ஆய்வுநோக்கு போன்ற கோணங்களின் வழி விரிவாக ஆராய்ந்துள்ளார். இந்நூலுக்கு பேராசிரியர் அ.அ.மணவாளன் அணிந்துரை வழங்கியுள்ளார்.

## 22. மூவர் தேவாரம் புதிய பார்வை

டாக்டர். பிரமீலா குருமூர்த்தி சென்னை பல்கலைக்கழகத்தில் இந்திய இசைத்துறை பேராசிரியராகப் பணியாற்றியவர். சென்னை ராணி மேரி கல்லூரியில் 1974 இல் சென்னை பல்கலைக்கழகப் பட்டமளிப்பு விழாவில் நடைமுறை இசைக்கான பரிசை வென்று இந்திய இசையில் பட்டம் பெற்றார். இவர் வழங்கிய அணிந்துரையைக் காணலாம்.

பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் பல நூல்களைப் படைத்துள்ள சிறந்த அறிஞர். சென்னை பல்கலைக்கழகத்தில் வாழ்நாள் மதிப்பியல் பேராசிரியராகத் தமிழ் இலக்கியத் துறையிலும் தென்கிழக்காசிய நாடுகளின் மரபுவழி பண்பாட்டு நிறுவனத்தின் மதிப்பியல் இயக்குனராகவும் அருந்தொண்டாற்றியவர். 2002-2003 ஆம் ஆண்டு மறைமலை அடிகள் பெயரில் ஏற்படுத்தப்பட்டுள்ள

அறக்கட்டளைச் சொற்பொழிவுகளை இவர் ஆற்றினார். மூவர் தமிழ் என்ற தலைப்பில் இவர் நிகழ்த்திய சொற்பொழிவுகளை பேராசிரியர் பி. சாம்பமூர்த்தி அவர்களுக்கு அன்பு படைப்பாக சமர்ப்பித்துள்ளது பாராட்டுக்குரியது.

தென்னக இசை வரலாற்றில் தோன்றிய பாடல் வரிசையில் பண் மற்றும் தாளத்துடன் உருவான முதல் இசைப்பாடல்கள் தேவாரங்கள் என்பது என்று பேராசிரியர் பி. சாம்பமூர்த்தி அவர்கள் குறிப்பிட்டுள்ளதை அறியமுடிகிறது. மூவர் தேவாரம் புதிய பார்வை என்ற தலைப்பில் திருமுறை கண்ட சோழனான இராஜராஜசோழன் மற்றும் நம்பியாண்டார் நம்பி ஆகியோரின் திருப்பணி பற்றியும் தேவாரங்களில் முதல் மூன்று நான்கு ஐந்து ஆறு மற்றும் ஏழு என்று சம்மந்தர், அப்பர், சுந்தரர் ஆகியவர்களின் பாடல்களை தொகுத்தமையை சிறப்பாகவும் தெளிவாகவும் எழுதியுள்ளார்.

திருஞானசம்பந்தரின் சிறுவயதில் நடந்த அரிய நிகழ்வுகள், பாடிய பதிகங்கள் போன்றவற்றை விளக்கத்துடன் எழுதியுள்ளார். சைவத்திற்கும் தமிழ் இலக்கியத்திற்கும் ஒப்பற்ற சேவை செய்த சம்பந்தபிரான் ஏழாம் நூற்றாண்டில் சாதி வேற்றுமையை பொருட்படுத்தாது திருநீலகண்ட யாழ்பாணரை சிறந்த முறையில் தன்னுடன் சீடராகப் போற்றிய பாங்கு அக்காலத்தில் சிறந்து விளங்கிய சமூக நாகரிகத்திற்கு சிறந்த எடுத்துக்காட்டாக விளங்கியது. பதினாறு வயது வரை வாழ்ந்த ஞானசம்பந்தரின் வாழ்வு அவரது அரிய ஆற்றல் தோய்ந்த பாடல்கள் பண்ணிற்கும் தாளத்திற்கும் பாடல் நயத்திற்கும் சந்தங்களுக்கும் எடுத்துக்காட்டுகளாய் திகழ்கிறது[23].

இதுபோலவே பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் அப்பர்பிரான் மற்றும் தம்பிரான் தோழர் வாழ்க்கை வரலாற்று நிகழ்வுகளையும் பாடல்களையும் பெரியபுராணச் செய்திகளுடன் சேர்த்து தந்துள்ளார். பண்களை பற்றிய செய்திகளையும் எழுதியுள்ளார். வடமொழி மற்றும் தமிழில் உள்ள இவரது திறனாய்வு வடமொழி யாப்பியத்தின் மரபு என்னும் பகுதியில் சிறப்பாக வெளிப்படுவதை அறியலாம். கட்டளை என்னும் பகுதியில் இவர் தரும் விளக்கங்கள் ஆய்வாளர்களுக்கு பயனுள்ளதாக அமைகிறது. அறக்கட்டளை சொற்பொழிவுகள் சீரிய ஆய்வு கட்டுரைகளாக எழுத்து வடிவம் பெற்று நூலாக வெளிவந்துள்ள இந்நூலுக்கு பிரமிலா குருமூர்த்தி அவர்கள் அணிந்துரை வழங்கியுள்ளார்.

## 23. வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள்

பேராசிரியர் திருக்குறளாளர் க.பாஸ்கரன் அவர்கள் தமிழ் சேவைக்காக தனது சென்னை இல்லத்தை ஒரு நூலகமாக மாற்றியுள்ளார். அவர் வழங்கிய அணிந்துரைக் காணலாம்.

பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் அறிவியல் ஆய்வு, இலக்கியம், உளவியல், கல்வியியல் மற்றும் சமூகம் முதலிய பல்வேறு துறைகளில் 123 நூல்களை இயற்றி வெளியிட்ட பின்பும் 124 ஆவது நூலாக வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள் என்னும் நூலில் ஏழு என்னும் எளிய விழுமிய எண் உருவாகும். இந்நூலின் கருப்பொருளாகிய திருக்குறளுக்கு நெருங்கிய உறவை அறிய முடிகிறது. ஆழியில் மூழ்கி முத்துக்களை கண்டறிவது போல் திருக்குறள் இலக்கியப் பெருங்கடலில் மிக நுண்ணிய கருத்துக்களை அறிந்து அறிவுக்கு விருந்தாக

கருத்துக்கருவூலமாக சிந்தனையை தூண்டும் நூலாக இந்நூல் விளங்குகிறது.

**‘அணுவைத் துளைத்துஏழ் கடலைப் புகட்டிக்**

**குறுகத் தறித்த குறள்’** [24]

என்று ஔவையார் கூறியதன் மூலம் வான்புகழ் ஈட்டிய தமிழகத்தில் தோன்றினாலும் அந்நூல் காலத்தை வென்று இனம், சாதி, சமயம், நாடு மற்றும் மொழி முதலிய பல்வேறு பாகுபாடுகளைக் கடந்து ஞாலம் போற்றும் அறநூலாகப் பொருளியல் பனுவலாக வாழ்க்கைத்துணை நூலாக நீதி இலக்கியமாக விளங்குவதையும் அறியலாம்.

**‘கற்க கசடற கற்பவை கற்றபின்**

**நிற்க அதற்குத் தக’**[25]

என்று திருக்குறள் கூறுகிறது. அகர முதல எழுத்தெல்லாம் என தொடங்கும் முதல் குறட்பாவில் அ என்னும் உயிரில் அரும்பி உயிர்மெய்யில் மலர்ந்து தொடர்ந்து ‘கூடி முயங்க பெறின்’ என்னும் ஈற்றடி அடங்கிய இறுதி 1330 வது குறட்பாவானது இன் என்னும் மெய்யில் முடிவதையும் அறியலாம். வாழ்வியக்கமும் உயிர் உடலில் இணைந்து உயிர் மெய்யாக இயங்கி இறுதியில் உயிர் உடலில் இருந்து விலகி மெய் எனப்படும் உடல் மட்டுமே எஞ்சியதை அறியலாம். ஒப்பற்ற ஒல்காப்புகழ் எய்திய காவியமாக விளங்கும் திருக்குறளுக்கு பல்வேறு உரைகள் உள்ளன.

- **எளிய உரை**
- **தெளிவுரை**
- **கருத்துரை**

பரிமேலழகர் இயற்றிய பழம் உரை மிகவும் சிறப்பு வாய்ந்ததாக உள்ளது. குறளர் திருமால் திருவடியால் உலகையே முழுமையாக அளந்தவர் எனப் பழங்கதை கூறுவதை அறியமுடிகிறது. ஒன்றே முக்கால் அடியில் உலகியல் வாழ்வை அறிந்து அறிவுரைகளை உவமை நயத்துடன் உலகப் பொதுமறையை உருவாக்கிய திருவள்ளுவர் போற்றத்தக்கவராக இன்றும் உள்ளார்.

**“மரத்தை மறந்தது மாமத யானை**

**மரத்தில் மறந்தது மாமத யானை”**

என்று திருமூலர் வழிபாட்டு முறைகள் பெருகிய இக்கால உலகியல் நடைமுறைக்கு முற்றிலும் பொருந்தும். தெய்வமறையாகிய திருக்குறள் உலகில் வாழ்வின் மனிதனை மையமாக அமைத்து அம்மனிதனை தெய்வ நிலைக்கு உயர்த்தியதை அறியலாம்.

**‘வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்**

**தெய்வத்துள் வைக்கப் படும்’** [26]

இவ்வுலகில் அறநெறிகளுக்கு ஏற்ப வாழத்தக்க முறைகளில் வாழ்பவன் தெய்வ நிலையை எய்தியதாக கருதப்படுவான் என உலக பொதுமறை மூலம் அறியமுடிகிறது. 95 ஆவது அதிகாரமாகிய மருந்து என்னும் தலைப்பில் கருப்பொருளாக அறியப்படுகிறது. மழைநீர் மனித வாழ்க்கைக்கும்  பயிர் கூட்டம் வாழவும் வழிவகிக்கிறது அதை வான்சிறப்பு என்னும் அதிகாரமாக படைத்துள்ளார் திருவள்ளுவர்.

**“கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய் மற்றாங்கே**

**எடுப்பதூஉம் எல்லாம் மழை”** [27]

மக்களை வாழ வைக்கப் பெய்வதும் பெய்யாமல் பொய்த்து அவர்களைத் துன்பப்படுத்துவதும் மழையே. இறைமை, மழைப்பொழிவு,

தாய்மை ஆகிய முக்கூறுகளையும் திருக்குறள் மூலம் விளக்கி ஒருமைப்பாட்டைக் கூறினார் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். இல்லாள் என்னும் சொல் வாழ்க்கைத் துணைநலம் என்னும் அதிகாரத்தில் ஒரு குறட்பாவில் மட்டும் குறிப்பிட்டுள்ளார் அவை

**"மனைமாட்சி இல்லாள் கண்இல்லாயின் வாழ்க்கை**
**எனைமாட்சித்து ஆயினும் இல்"**

இல் என்பது எதிர்மறை பொருளில் குறிப்பிட்டதை அறியலாம் இல் என்பதன் பொருள்

- இல்லம்
- இல்லத்தை ஆள்பவள்
- இல்லத்தரசி
- வாழ்க்கைத் துணை
- மனைவி

போன்ற பொருள்களில் வழங்கி வருகின்றன. இல்லான் என்றால் இல்லாதவன் எனப் பொருள்படும். இல்லாளுக்கும் இல்லானுக்கும் இடையே அறியப்படும் வேறுபாட்டை தமிழறிஞர் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் தெளிவாக விளக்கியுள்ளார்.

**"ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும் தன்மகனைச்**
**சான்றோன் எனக்கேட்ட தாய்"**

என்ற இத்திருக்குறளுக்கு பேராசிரியர் தரும் விளக்கம் நெஞ்சத்தினுள் தஞ்சம் புகுவதாக உள்ளது. மகனைச் சான்றோன் ஆக்குதல் தந்தைக்கு கடன் என்றும் மகனை ஒரு படைப்பாளியாகப் பார்க்கையில் தாய் பெற்றப் பொழுதை விட பெருமகிழ்ச்சி அடைவாள் என்று தாய்மை உணர்வைப் பேராசிரியர் புலப்படுத்துகிறார்.

பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் கல்லூரி இளநிலை அறிவியல் பட்ட வகுப்பில் பயிலும் போது வரிசை எண் 306. இம்மூன்று இலக்கங்களையும் கூட்டினால் 9 எனும் என் உருவாகும் 3, 6, 9 ஆகிய மூன்று எண்களும் மூன்றால் வகுபடும். இடைவெளியும் மூன்று. இம்மூன்று எண்களுக்குள் இருக்கும் ஒற்றுமையை அறியமுடிகிறது. திருவள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள் தமிழ்க்கூறும் நல்லுலகத்துக்கு புதுவரவு. நம் போன்ற எளியோருக்கு உரிய நூல். பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் என்றால் சிந்தனை ஊற்று என இந்நூல் மெய்ப்பிக்கிறது. இந்நூலுக்கு திருக்குறளாளர் கா.பாஸ்கரன் அவர்கள் அணிந்துரை வழங்கியுள்ளார்.

## 24. தந்தை பெரியார் சிந்தனைகள்

பேராசிரியர் இரா. தாண்டவன் அவர்கள் வழங்கிய அணிந்துரையைக் காணலாம்.

தமிழ் இலக்கிய வரலாற்றில் முதன்முதலில் பகுத்தறிவுக் கொள்கையைப் பரப்பியப் பெருமைச் சித்தர்களையே சாரும் என்பதை அறியலாம். சென்னை பல்கலைக்கழக அண்ணா பொதுவாழ்வியல் மையத்தில் உருவாக்கப்பட்டுள்ள பேராசிரியர் சி.அ.பெருமாள் அவர்களின் அறக்கட்டளைச் சொற்பொழிவுக்காக 2001-ஆம் ஆண்டு பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரை அணுகிய போது அவர் வெண்தாடி வேந்தர் ஈ.வெ.ராவைப் பற்றிப் பேச முடிவெடுத்து ஆராய்ச்சிப் பாங்கோடு தந்தை பெரியாரைப் பற்றி அறியதொரு ஆய்வை நிகழ்த்தினார். அவர் ஆற்றிய மூன்று சொற்பொழிவுகளைத் தொகுத்து '**தந்தை பெரியார் சிந்தனைகள்**' என்ற நூலை உருவாக்கியுள்ளார்.

திரு.வே.ஆனைமுத்து அவர்கள் ஈ.வெ.ரா சிந்தனைகள் என்ற நூலை எழுதியுள்ளார். பெரியாரின் சிந்தனைகளில் முதலிடம் வகிப்பது கடவுள் மறுப்புக் கொள்கை. பெரியார் என்ற உடனே நம் நினைவுக்கு வருவது கடவுள் மறுப்புக் கொள்கையை உடையவர் என்றுதான் இன்றும் தமிழ் உலகம் எண்ணிக் கொண்டிருக்கிறது. கடவுள் மறுப்புக் கொள்கைக்குப் பின்னணியில் அமைந்த அடிப்படை காரணங்களை மிக விரிவாகத் தெளிவாக விளக்கியுள்ளார் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். மனிதனை இழிவுபடுத்துவதற்கும் பகுத்தறிவற்றத் தன்மைக்கும் கடவுள் நம்பிக்கை காரணமாக அமைவதால் அதை ஒழிக்க வேண்டும் கடவுள் மேல் எங்களுக்கு எவ்வித கோபமும் இல்லை என்ற வரிகளின் மூலம் பெரியாரின் கடவுள் மறுப்புக் கொள்கையின் பின்னணியில் மனித சமுதாயத்தின் உயர்வுதான் அடிப்படையாக அமைந்துள்ளது என்று நிறுவுகிறார் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். சமயம் என்ற நிலையில் பெரியார் அவர்கள்

“**மதமே மனிதனுடைய சுயமரியாதைக்கு விரோதி, மனமே மனிதனுடைய அறிவு வளர்ச்சிக்கு விரோதி மதமே மனித சமூக சமதர்மத்திற்கு விரோதி**”[28].

மக்கள் முன்னேற்றத்தில் மதம் வந்து தடை செய்தால் அது எந்த மதமாக இருந்தாலும் ஒழித்துத்தான் ஆக வேண்டும். உன்னைப் பறையனாய் படைத்தார் அவனை பார்ப்பனனாய் படைத்தார் என்னை சூத்திரனாய் படைத்தார் என்று கடவுள் மேல் பழிப் போடும் கொடுமைகள் ஒழிக்கப்பட வேண்டும் என்றால் கடவுள் ஒழிக்கப்பட வேண்டும் என்று தந்தை பெரியார் சிந்தித்ததைத் தெளிவாக விளக்கியுள்ளார். தந்தை பெரியாரின் இரண்டாவது சொற்பொழிவு சமூகம் என்ன என்பதை

பெரியாரின் வழி விளக்குகிறார் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார். வாழ்நாள் முழுவதும் சமூகப் பணிக்கு தன்னை அர்ப்பணித்துக் கொண்டவர் பெரியார்.

**“நான் ஒரு நாத்திகன் அல்லன் தாராள எண்ணமுடையோன், நான் ஒரு தேசியவாதியும் அல்லன், தேசாபிமானியும் அல்லன், ஆனால் தீவிர சீவாதார எண்ணம் உடையவன். எனக்கு ஜாதி என்பதோ உயர்வு தாழ்வு என்பதோ இல்லை அத்தகைய எண்ணத்தையே நான் எதிர்ப்பேன் ஆதரிப்பவன் அல்லன்”** [29].

என்று பெரியார் கூறும் உள்ளடக்கத்தை இவர் தெளிவாக எடுத்துக்காட்டியுள்ளார். இதுபோன்று நாட்டில் எப்படிப்பட்ட ஆட்சி முறை இருக்கவேண்டும் என்றும் திருமணம் எப்படி அமைய வேண்டும் என்றும் திருமணத்தில் உள்ள சமூக இழிவுக் கொடுமைகளை எப்படி ஒழிக்க வேண்டும் என்றும் மதுவிலக்கு ஆகியன பற்றிய பெரியாரின் சிந்தனைகளை இந்நூலில் மிகத் தெளிவாக விளக்கியுள்ளதை அறியமுடிகிறது. மூன்றாவது சொற்பொழிவில் தமிழ் மொழியின் மீது அவர் கொண்ட பற்றினை அறியலாம். நான் தமிழுக்குத் தொண்டு செய்வது தமிழுக்காக அல்ல தாய்மொழியை பாதுகாத்தல் ஒவ்வொருவருடைய கடமை என்பதாலேயே ஆகும்.

நம் தமிழ்மொழி நமது தாய் மட்டுமல்லாமல் எல்லா வனப்புகளும் கொண்ட சிறந்த மொழி என்ற பெரியாரின் கருத்துகளையும் அவர் இந்தி எதிர்ப்பு போராட்டத்தில் கலந்துகொண்டு சிறைச்சென்றவர் மட்டுமல்லாமல் கட்டாய இந்தியைக் கல்லறைக்கு அனுப்பியவர் போன்ற செய்திகளையும் எழுத்து சீர்திருத்தத்தை தன்னுடைய குடியரசு இதழில் வெளியிட்டு நடைமுறைப்படுத்தியவர் என்பதையும்

இவ்வெழுத்து சீர்திருத்தம் எம்.ஜி.ஆர் காலகட்டத்தில் நடைமுறைபடுத்தப்பட்டது என்பதையும் அறியலாம்.

- தீண்டாமை
- சாதி ஒழிப்பு
- வருணாச்சிரம்மதர்மம்

போன்றவற்றைப் பற்றியும் தெளிவாக விளக்கிய பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் இந்நூலுக்கு பேராசிரியர் இரா. தாண்டவன் அவர்கள் அணிந்துரை வழங்கியுள்ளார்.

## 25. சைவ சித்தாந்தம் ஓர் அறிமுகம்

பேராசிரியர் பெ. கிருஷ்ணன் அவர்கள் பேராசிரியரின் சைவ சித்தாந்தம் ஓர் அறிமுகம் என்னும் நூலுக்கு வழங்கிய அணிந்துரையைக் காணலாம்.

தமிழர் வாழ்வில் சைவமும் தமிழும் இணைந்தே வளர்ந்து வந்துள்ளது என்பதை வரலாறு கூறுவதன் வழி அறியலாம். பழந்தமிழ் நூல்களில் 'சிவன்' என்ற சொல் எடுத்தாளப்படவில்லை. 'செம்மை' என்ற தமிழ்ச்சொல்லை அடிப்படையாகக் கொண்டே 'சிவன்' என்ற சொல் வந்தது என்று ஆய்வாளர்கள்க் கருதுகின்றனர். உயர்ந்த சமண சமய அறநெறிக் கருத்துகளைக் கொண்ட 'பதினெண் கீழ்க்கணக்கு' நூல்கள் களப்பிரர்கள் மற்றும் பல்லவர்களின் ஆட்சிக் காலங்களில் தமிழோடு சைவமும் மிக உன்னத நிலையினை அடைந்ததை அறியலாம்.

தமிழகம் செய்த தவப்பயனால் அவதரித்த தமிழ் ஞானசம்பந்தர் அவர்களால் தமிழில் 'பதிகப் பேருவழி' தோற்றுவிக்கப்பட்டது.

சோழர், பாண்டியர் காலம் சைவ சமய வரலாற்றின் பொற்காலம் என்று அழைக்கப்படுகிறது. 'பன்னிரு திருமுறைகள்' சைவ சமயத்தின் அடிப்படை நூலாக அமைந்துள்ளது. மூவர் முதலிகளையும் மாணிக்கவாசகரையும் சமயத் தலைவர்களாகவும் சிவனை முழுமுதற் பொருளாகவும் மாறா இறையன்பு ஒன்றே வீடு பேற்றிற்கு வழி என்பதும் சாதி, மத வேறுபாடின்றி ஆணும் பெண்ணும் இறையின்பத்தைத் துய்த்து வாழலாம் என்பதும், சமய வாழ்வு இவ்வுலக வாழ்க்கைக்கு எதிரானது அல்ல என்ற கொள்கை சைவர்களால் ஏற்பட்டதையும் அறியலாம். 13-ம் நூற்றாண்டின் முற்பகுதியில் தோன்றிய மெய்க்கண்டார் உருவாக்கிய சிவஞானபோதம் சைவ சமயத்தின் தத்துவக் கொள்கைகளை விளக்கும் முதல் அடிப்படை நூலாகும். சைவ சித்தாந்த சாத்திரங்கள் மொத்தம் பதின்நான்கு. அவை கீழ்வருமாறு,

**"உந்தி, களிறே, உயிர் போதும், சித்தியார் பிந்திருபா, உண்மை, பிரகாசம், வந்த அருள், பண்புவினா, போற்றிகொடி, பாசமிலா நெஞ்சு விடு, உண்மைநெறி, சங்கர்பம் உற்று".**

1. திருஉந்தியார்
2. திருக்களிற்றுப் பாடியார்
3. சிவஞானபோதம்
4. சிவஞான சித்தியார்
5. இருபா இருபஃது
6. உண்மை விளக்கம்
7. சிவப்பிரகாசம்
8. திருவருட்பயன்
9. வினா வெண்பா

10. போற்றி பஃறொடை வெண்பா

11. கொடிக்கவி

12. நெஞ்சுவிடு தூது

13. உண்மை நெறி விளக்கம்

14. சங்கற்ப நிராகரணம்

சிவஞான போதத்திற்கு பல உரைகள் இருப்பினும் சிவஞான முனிவரின் சிவஞானபோத மாப்பாடியும் சிறந்த உரையாக சைவர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேல் வரலாற்றைப் பெற்றுள்ள சைவம் பல்வேறு காலகட்டங்களில் வைதீக சமயம், ஆகமம், அறுவகை தரிசனங்கள், சமணம், பௌத்தம், சாறுவாகம் ஆகியவற்றின் கருத்துக்களைக் கொண்டு தமிழகத்துக்கே உரிய சைவ சித்தாந்தமாக செம்மைப் பெற்று விளங்கி வருகின்றது.

"சைவ சித்தாந்தம் ஓர் அறிமுகம்" என்ற தலைப்பிலமைந்த இந்நூல் தொல்காப்பியம் முதல் மெய்க்கண்ட சாத்திரங்கள் ஈறாக உள்ள பல நூல்களில் காணப்படும் சைவ சித்தாந்த கருத்துக்களைத் தொகுத்து ஆய்வு நோக்கில் எழுதப்பட்ட நூலாகும். சைவ சமய வரலாற்றைத் தெரிவிக்கும் நூல்கள் ஆங்கிலத்திலும் தமிழிலும் பல உள்ளன. அவை சைவ கருத்துக்களுக்கு இணையான வைணவக் கருத்துகளை ஒப்புநோக்கி சமயப் பொறையின் இன்றியமையாமையை வலியுறுத்தியதை அறியலாம். சைவம் வைணவம் ஆகிய இரண்டையும் தன் இரு கண்களாகப் போற்றி வாழ்ந்தவர் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார். சமயம் ,தத்துவம், இலக்கியம், சமூகவியல், அறிவியல் போன்ற துறைகளில் நூற்றுக்கும் மேற்பட்ட நூல்களை எழுதி தமிழக எழுத்துலகில் மிகப் பெரும் சாதனைப் படைத்தவர். அனைத்து

சமயங்களுக்கும் அடிப்படை, சமயங்கடந்த மெய்ப்பொருளேயாகும் என்பதை வலியுறுத்தியும் எழுதியுள்ளார் என்று இந்நூலுக்கு அணிந்துரை வழங்கியுள்ள பேராசிரியர் பெ. கிருஷ்ணன் அவர்கள் கூறியுள்ளார்.

## 26. கவிமணியின் தமிழ்ப்பணி ஒரு மதிப்பீடு

பேராசிரியர் இராதா.செல்லப்பன் பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் தமிழியல்த் றைத் தலைவராகப் பணியாற்றியுள்ளார். இவர் வழங்கிய அணிந்துரையைக் காணலாம்.

கவிமணி பல்வேறு காலகட்டங்களில் எழுதிய பாக்களைத் தொகுத்து பல்வேறு தலைப்புகளில் அதனை வகைப்படுத்தி ஆராய்ந்துள்ளார் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். கவிமணி காட்டும் இயற்கைக் காட்சிகளையும் படிமக்காட்சிகளையும் வரலாற்றுப் போக்கிலும் ஒப்பீட்டு முறையிலும் திறனாய்ந்து அவரது குழந்தைப் பாடல்களை நுணுக்கமாக ஆராய்ந்துள்ளார். ரூசோவின் '**எமிலி**' என்ற நூல்தான் புதிய கல்வி முறைகளுக்கான வித்து என்று கூறுவதோடு பெஸ்டாலாஸ்ஸி, ஃபிராபெல் முதலான தமிழர்களின் கொள்கைகளை எளிமையாக எடுத்துக்கூறுகிறார்.

கவிமணியின் கவிதைகளில் வெளிப்படும் தேசபக்த உணர்வை பாரதியார், பாரதிதாசன் ஆகியோரின் உணர்வுகளோடு ஒப்பிட்டுக் ஆராய்ந்துக் கூறியுள்ளார். கவிமணியைப் பற்றிக் கூறும்போது அவர் வாழ்ந்த சூழ்நிலைக் காரணமாக அவரது பாடல்கள் நாட்டுப்பற்றின் இனிய மணம் கமழ்வதாக அமையவில்லை. ஆனால் நாட்டுப்பற்று கூறியப்பொருள்களை இவர் பாடவே இல்லை என்று கருதவும் முடியாது என்று கருத்துரைக்கிறார் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். கவிஞரின்

கடவுள் கொள்கையை ஆராய்கின்ற பேராசிரியர் தாயுமானசுவாமிகள், குமரகுருபரர் ஆகியோரின் கருத்துக்கள் இவரின் பாடல்களில் காணப்படுகின்றன என்ற கருத்தைத் தெரிவிக்கிறார். கவிஞரின்,

**"கோவில் முழுதும் கண்டேன் - உயர்**

**கோபுரம் ஏறிக் கண்டேன்**

**தேவாதி தேவனையான்- தோழி!**

**தேடியும் கண்டிலேன்"** [30]

என்று தொடங்கி காணாமைக்குரிய காரணத்தையும் அவனைக் காணும் முறையையும் விளக்கி எடுத்துக்காட்டியுள்ளார். கலைமகள் பற்றி கவிமணி பாடியுள்ள பாடல் குமரகுருபரரின் சகலகலாவல்லிப் பாடல்களையும் கம்பரின் சரஸ்வதி அந்தாதி பாடல்களையும் மிஞ்சும் முறையில் அமைந்துள்ளதை அறியமுடிகிறது. கவிமணி வடமொழியை த் தழுவி எழுதிய மீராபாயின் பாடல்களை அன்பொழுகும் அற்புதக் கவிதைகள் என்று கூறுகிறார் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார்.

மீரா முக்தி அடைந்த நிலையை ஆண்டாளின் முக்தி நிலையோடும் திருப்பாணாழ்வார் முக்தி நிலையோடும் ஒப்பிட்டுக் காட்டியுள்ளார். புத்த பெருமாள் வரலாற்றைக் கூறும் ஆசிய ஜோதியைப் பற்றி திறனாய்வு செய்யும் பேராசிரியர் அக்கதைகளில் உணர்ச்சிப் பெருக்கோடு கவிதை நயம் காட்டுகிறார். அனைத்திந்திய கீழ்திசை மாநாட்டில் கலந்துகொள்ள வாரணாசி சென்றபோது புத்த சபைக்குச் சென்றதையும் அச்சமயம் கவிமணியின் ஆசியஜோதி கவிதைகள் அவர் மனதில் உணர்ச்சியை வெளிப்படுத்தியதையும் கூறியுள்ளார்.

கவிமணியின் கவிதையை "**கவிதை திறனாய்விற்கு கவிதையாலேயே திறனாய்ந்த அற்புதத் திறனாய்வு கவிதை இது**" என்று பாராட்டியுள்ளார்.

பாரதியாரையும் பாரதிதாசனையும் அடியொற்றி இவரின் வாழ்த்துப் பாடல்களாகவும் இரங்கற்பாக்களாகவும் போற்றும் வகையிலும் தனது பாடல்களை அமைத்துள்ளார். கவிமணியின் இப்பாடல்களைப் பற்றிய செய்திகள் இடம் பெறும் இவ்வியலுக்கு சுந்தரமூர்த்தி வழியில் நின்று பேராசிரியர் பெயர் சூட்டியுள்ளார்.

1. கவிமணி பல அறிஞர்களைப் போற்றியுள்ளார்.
2. கவிமணியும் எஸ். வையாபுரிபிள்ளையும் நெருங்கிய தோழர்கள்
3. கவிமணி படைப்புகளை பிள்ளையாரிடம் காட்டிய பிறகு அச்சிற்கு அனுப்பியவர்.

சமூகநலச் சிந்தனைகள் என்ற இயலில் கவிமணியின் சமூக நோக்கை வெளிப்படுத்துகிறார் பேராசிரியர் ந. சுப்புரெட்டியார்.

- **சமுதாய ஒற்றுமை**
- **சாதி வேற்றுமை**
- **தீண்டாமைக் கொடுமை**
- **பெண்கள் நிலை**
- **தொழிலாளர் நிலை**
- **பிச்சைக்காரர் நிலை**

என்று பல்வேறு கருத்துக்களின் அடிப்படையில் கவிமணியின் பாடல்களை ஆராய்ந்து சில இடங்களில் பாரதியார் பாடல்கள், பக்தி இலக்கியப் பாடல்கள் போன்றவற்றோடு ஒப்பிட்டுக் காட்டி நயம் பாராட்டியுள்ளார். கவிமணி நிலையாமையைப் பற்றி பாடல்களில்

விளக்கியிருப்பது போல வேறு எங்கும் தமிழ் இலக்கியத்தில் காண முடியாது என்று உறுதியாக கூறியுள்ளார். கவிமணியின் மருமக்கள்வழி மான்மியம் என்ற படைப்பு அங்கதச் சுவை நிறைந்த அருமையான ஒரு படைப்பு என்கிறார். கவிஞரின் மொழிக் கொள்கையை ஆராய்ந்து வட்டார வழக்குச் சொற்களில் காவியத்தை இயல்பாகக் கூறியுள்ளார். எடுத்துக்காட்டாக **ஏகாங்கி**, **கண்டாங்கி**, **குலுக்கை**, **களரி கட்டுதல்**, **மலரனை** முதலிய பல சொற்கள் கல்லாதவர்களுக்கும் விளங்கும் வகையில் கையாண்டுள்ளதை அறியமுடிகிறது. கவிமணியின் கவிதைகளை ஒப்பீட்டு முறையில் நடுநிலையில் நின்று திறனாய்ந்து நல்லதொரு திறனாய்வு நூலை எழுதியப் பேராசிரியர் ந. சுப்புரெட்டியாரின் இந்நூலுக்கு இராதா. செல்லப்பன் அவர்கள் அணிந்துரை வழங்கியுள்ளார்.

## 27. கவிஞர் வாலியின் பாண்டவர் பூமி ஒரு மதிப்பீடு

பேராசிரியர் வ. ஜெயதேவன் சென்னை பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறை பேராசிரியராகவும் தமிழ்துறைத் தலைவராகவும் பணியாற்றியுள்ளார். இவர் வழங்கிய அணிந்துரையைக் காணலாம்.

இந்தியத் திருநாட்டிற்குரிய பெருமைகள் பலவுள்ளன. அவற்றுள் அதன் இதிகாசப் பெருமை மிகவும் சிறப்பாக குறிக்கப்படுகிறது. இராமாயணம், மகாபாரதம் என்னும் இரண்டு இதிகாசங்களின் தாயகமாக இந்தியா திகழ்வதை அறியலாம். முதலில் வடமொழியில் இயற்றப்பட்ட இந்த இதிகாசங்கள் இந்தியாவின் அனைத்து மொழிகளிலும் மரபுகளுக்கு ஏற்பக் கூட்டியும் குறைத்தும் மாற்றியும் படைக்கப்பட்டதை அறியலாம். செய்யுள், உரைநடை என்னும் இருவகை நடையிலும் படைக்கப்பட்டது.

திரைப்படம், வானொலித் தொடர், தொலைக்காட்சித் தொடர் ,மேடை நாடகம், பள்ளி, கல்லூரி மேடைகள், இலக்கிய விழாக்கள், சொற்பொழிவு, கவியரங்கம், பட்டிமன்றம், வழக்காடு மன்றம் ஆய்வு என பல நிலைகளிலும் இதிகாசக் கதைகள் நாடு முழுவதும் பரவி உள்ளதை அறியலாம். கவிஞர் வாலி கம்பராமாயணம், வில்லிபாரதம் ஆகியவற்றைத் தழுவிய முறையே அவதார புருஷன், பாண்டவர் பூமி என்னும் அழகிய பனுவல்களை இனிய தமிழில் படைத்துள்ளார். கவிஞர் வாலியின் அவதார புருஷன் வெளிவந்த உடனே அதனை ஆராய்ந்து பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் 82 -வது அகவையில் "**கவிஞர் வாலியின் அவதார புருஷன் ஒரு மதிப்பீடு"** என்னும் நூலை 1997 இல் வெளியிட்டார். கவிஞர் வாலியின் பாண்டவர் பூமி வெளிவந்த உடனேயே "கவிஞர் வாலியின் பாண்டவர் பூமி ஒரு மதிப்பீடு" என்னும் நூலை 87 ஆவது அகவையில் பேராசிரியர் வெளியிட்டுள்ளார்.

- **இராமக்கதை _ அவதார புருஷன்**
- **பாரதக் கதை _ பாண்டவர் பூமி**

பாண்டவர் பூமியின் ஒரு மதிப்பீடு இந்த நூல் நூன்முகம் நீங்கலாக 12 இயல்களைக் கொண்டுள்ளது. திருமாலின் தசாவதாரங்களுள் கிருஷ்ணாவதாரமே ஆழ்வார்களை மிகவும் ஈர்த்ததாக உள்ளது. வாலி செய்துள்ள வியாதனின் படைப்பு சீர்திருத்தக் கொள்கையை அடிப்படையாகக் கொண்டது என்றும்,

**"பிறப்பால் நானொரு**
**புளிஞன் எனினும்**
**தெய்வானுக் கிரகத்தால் நான்**
**தெளிஞன்"**[31]

என்று தொடங்கிக் கவிஞர் வாலி விளக்கும் கருத்துக்கள் உபநிடதக் கருத்துக்களையும் மிஞ்சுமாறு அமைந்துள்ளது என்று பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் பாராட்டியுள்ளார். வியாசரை அடிப்படையாகக் கொண்டே பாண்டவர் பூமி அமைகிறது என்று முதல் இயல் தெளிவுபடுத்துகிறது. பாண்டவர் பூமியின் வருணனை வனத்தை பாடலின் மூலம் காணலாம்.

**அந்தத்**

**தீர்த்தங்கரையின்**

**திவ்வியத்தை அள்ளி**

**புலவோர்**

**வார்த்தைக் கரையில்**

**வைத்ததுண்டு, அதன்**

**வனப்பும்**

**வசீகரமும்**

**தவசிகளின் நெஞ்சையும்**

**தைத்த துண்டு!**

அடுத்து வரும் இயல் பாண்டவர் பூமி அணிநலன்களை ஆராய்கின்றதை அறியலாம். கவிஞர் வாலியின் உருவகிக்கும் ஆற்றலை பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் எடுத்துக்காட்டியதை கீழ்வருமாறு காணலாம்.

**"அழகு**

**அங்கமெல்லாம்**

**அத்திக்கிடக்கும்**

**அழகபாரத்தில்**

**ஐப்பசி மேகம்**

**கப்பிக்கிடக்கும்**

**விழி விளக்குகள்**

**வெளிச்சத்தை**

**துப்பிக்கிடக்கும்**

**உதட்டுப்பூக்கள்**

**உள்ளிருக்கும் கல்லால்**

**ஒப்பிக்கிடக்கும்"** [32]

இவ்வாறு கவிஞர் வாலியின் உவமிக்கும் ஆற்றலை எடுத்துக்காட்டியுள்ளார். அடுத்த இயல் பாண்டவர் பூமியின் ஒன்பது சுவைகளைக் கூறுகிறது. தொடர்ந்து வரும் இயல்களில் முறையே கிருடிணன் தூது, கவிஞர் வாலியின் கிருட்டிண பக்தி, உண்மைகளும் படிப்பினைகளும் கீதையின் சாரத்தின் சாரம் ஆகியவற்றைப் பற்றி விளக்குகிறார். கவிஞர் வாலியின் புதுக்கவிதையில் அமைந்த பாண்டவர் பூமி பொதுமக்களின் சொத்தாக அமைந்துள்ளதையும் அறிய முடிகிறது. கவிஞர் வாலிக்கு "**தமிழ் வியாசர்**" என்று புகழாரம் சூட்டியவர் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். இவரது பாண்டவர் பூமி என்னும் நூலுக்கு பேராசிரியர் வ. ஜெயதேவன் அவர்கள் அணிந்துரை வழங்கியுள்ளதை காணலாம்.

**முடிவுரை:**

பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் எழுதிய நூலுக்கு பேராசிரியர்கள் மற்றும் துறைத்தலைவர்கள் வழங்கிய அணிந்துரைகள் குறித்து இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளது.

# அடிக் குறிப்புகள்

1.ந. சுப்புரெட்டியார், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப.எ. 7

2.மேலது, ப.எ.8

3.ந. சுப்புரெட்டியார், குயில் பாட்டு ஒரு மதிப்பீடு, ப.எ.5

4.மேலது, ப.எ. 10

5.புலியூர்க்கேசிகன், திருக்குறள் புதிய உரை, ப.எ. 5

6.ந. சுப்புரெட்டியார், ஞானசம்பந்தர், ப.எ.17

7.க. வெள்ளைவாணன், பன்னிரு திருமுறை வரலாறு, ப.எ.93

8.மேலது, ப.எ.231

10.ந. சுப்புரெட்டியார், பாட்டுத்திறன், ப.எ.5

11.ந. சுப்புரெட்டியார், கலியன்குரல், ப.எ.12

12.ந. சுப்புரெட்டியார், நினைவுக்குமிழி-3, ப.எ.8

13.மேலது, ப.எ.169

14.ந. சுப்புரெட்டியார், நினைவுக்குமிழி.4, ப.எ.86

15.மேலது, ப.எ.10

16.ந. சுப்புரெட்டியார், மாணிக்கவாசகர், ப.எ.11

17.தமிழ்பிரியன், திருவாசகம் மூலமும் உரையும், ப.எ.69

18.ந. சுப்புரெட்டியார், சடகோபன் செந்தமிழ் ப.எ 16

19.மேலது, ப.எ, 19

20.ந.சுப்புரெட்டியார், பரகாலன் பைந்தமிழ், ப.எ, 26

21.மேலது, ப.எ, 20

22.ந.சுப்புரெட்டியார், வாய்மொழியும் வாசகமும், ப.எ. 8

23.ந. சுப்புரெட்டியார், மூவர் தேவாரம் புதிய பார்வை, ப.எ.7

24. ந. சுப்புரெட்டியார், வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள், ப.எ.8

25. புலியூர்க்கேசிகன், திருக்குறள் பரிமேலழகர் உரை, ப.எ. 184

26. மேலது, ப.எ. 34

27. மேலது, ப.எ. 17

28. ந. சுப்புரெட்டியார், தந்தை பெரியார் சிந்தனைகள், ப.எ. 9

29. மேலது, ப.எ. 9

30. ந. சுப்புரெட்டியார், கவிமணியின் தமிழ்ப்பணி ஒரு மதிப்பீடு, ப.எ. 2

31.ந. சுப்புரெட்டியார், கவிஞர் வாலியின் பாண்டவர் பூமி ஒரு மதிப்பீடு, ப.எ.9

32. மேலது, ப.எ. 11.

# இயல் - 4

## முதலமைச்சர் மற்றும் கல்வித்துறை அமைச்சர்கள் வழங்கிய அணிந்துரைகள்

**முன்னுரை** :

பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்களின் நூல்களுக்கு அணிந்துரைகள் வழங்கிய முதலமைச்சர் மற்றும் கல்வித்துறை அமைச்சர்களின் தனிச்சிறப்புகள் குறித்தும் அவர்களது பார்வையில் பேராசிரியர் எழுதிய நூல்களின் தனித்தன்மைகள் குறித்தும் இவ்வியலில் ஆராயப்படுகிறது.

தமிழ்நாட்டின் முதலமைச்சராகப் பணியாற்றிய கலைஞர் மு.கருணாநிதி 'பாவேந்தரின் பாட்டுத்திறன்' என்னும் நூலுக்கு வழங்கிய அணிந்துரையும் கல்வித்துறை அமைச்சராகப் பணியாற்றிய செ.அரங்கநாயகம் 'வாழையடி வாழை' என்னும் நூலுக்கு வழங்கிய அணிந்துரையும் திராவிட முன்னேற்றக் கழகத்தின் கல்வித் துறை அமைச்சராகவும் நிதி அமைச்சராகவும் பணியாற்றிய க.அன்பழகன் 'பாண்டியன் பரிசு ஒரு மதிப்பீடு' என்னும் நூலுக்கு வழங்கிய அணிந்துரையும் கல்வியாளர், நிர்வாகி போன்ற பல தொழில்நுட்பக் கல்லூரிகளில் பணியாற்றிய ஜி.ஆர் தாமோதரன் 'கல்வி உளவியல்' என்னும் நூலுக்கு வழங்கிய அணிந்துரையும் சென்னை மாகாணக் கல்வித்துறை அமைச்சராகப் பணியாற்றிய தி.சு. அவிநாசிலிங்கம் 'தமிழ் பயிற்று முறை' என்னும் நூலுக்கு வழங்கிய அணிந்துரையையும் இவ்வியலில் காணலாம்.

## 27. பாவேந்தரின் பாட்டுத்திறன்

கலைஞர் மு.கருணாநிதி அவர்கள் இந்திய அரசியல்வாதிகளுள் முதன்மையானவர். தமிழக முதல்வராக ஐந்து முறை தேர்ந்தெடுக்கப்பட்டு பணியாற்றியுள்ளார். திராவிட இயக்க சிந்தனை மரபில் தனித்துவமான எழுத்துக்களை தமிழ் உலகிற்கு வழங்கியதில் அவருடைய பணி போற்றுதற்குரியது. 75 திரைப்படங்களுக்கு திரைக்கதை வசனம், 15 நாவல்கள், 20 நாடகங்கள், 13 சிறுகதைகள், 210 கவிதைகள் எழுதியுள்ளார். மேலும் **"நண்பனுக்கு" "உடன்பிறப்பே"** என்னும் தலைப்புகளில் தனது இயக்கத் தொண்டர்களுக்கு 7000 த்திற்கும் மேற்பட்ட கடிதங்களையும் எழுதியுள்ளார். தூக்கு மேடை நாடகத்தின் போது **எம்.ஆர்.ராதா இவருக்கு "கலைஞர்"** என்னும் பட்டத்தை வழங்கினார். இவரது அனைத்து நூல்களும் உரிமைத் தொகை ஏதுமின்றி **ஆகஸ்ட் 22, 2024** அன்று நாட்டுடைமையாக்கப்பட்டது. இவர் வழங்கிய அணிந்துரையைக் காணலாம்.

பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் பாவேந்தரின் பாட்டுத்திறன் என்னும் பெயரில் புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் கவிதைகளில் காணப்படும் தனிச்சிறப்புகள் குறித்து விரிவாக எழுதியுள்ளார்.

**"பாட்டுத் திறத்தாலே இவ்வையகத்தை பாலித்திட வேணும்"**

என்று பாடினார் பாரதியார். பாரதியின் தாசன் பாரதிதாசன். இவர் எழுதிய பாடல்கள் ஒவ்வொன்றும் தமிழ்ச் சமுதாயத்தை பாலித்திடும் பாதுகாத்திடும் தன்மையுடையது என்பதை அறிய முடிகிறது. பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் கல்வியியல் வல்லுநர், ஆசிரியர் பயிற்சிக்குரிய

நூல்கள் உட்பட பல்வேறு இலக்கிய நூல்களைப் படைத்துள்ளார். அவர் இந்நூலில் பாரதிதாசன் பாடு பொருளாகக் கொண்டவற்றை பட்டியலிட்டு கூறுவதை கீழ்வருமாறு காணலாம்.

- **கற்பனைத் திறன்**
- **கவிதை வளம்**
- **யாப்புநெறி**
- **உவமைத்திறன்**
- **வர்ணனைத் திறன்**[1].

முதலியவை குறித்து விரிவாக ஆராய்ந்து பாரதிதாசனின் அரிய கருத்துக்களை எடுத்துக் கூறியுள்ளார்.

**"தூவென்று சாதி மதம் கான்று மகிழ்ந்தால்**
**அந்தநொடியே நமது மிடிப றக்கும்**
**அடுத்த நொடி திராவிடரின் கொடிப றக்கும் "** [2]

தமிழரின் ஒற்றுமைக்கு தடையாயுள்ள சாதி மதங்கள் அகற்றப்பட வேண்டும் என்ற பாரதிதாசன் சுட்டிக்காட்டியுள்ளார். தமிழ் மண்ணில் பிறந்து வளர்ந்து இந்த மண்ணின் பயன்களை நுகர்ந்து நல்வாழ்வு பெற்று வாழும் மாந்தரில் பலர் தங்களது குழந்தைகளுக்கு தமிழ்ப் பெயர் சூட்டிட வேண்டும் என்னும் உணர்வின்றி வாழ்கின்றனர் என்று வருந்திய புரட்சிக்கவிஞர் பாரதிதாசன்,

**"தமிழரின் தமிழ்க் குழந்தை தமிழ் பெயர் பெறுதல் வேண்டும்"**[3]

இவ்வாறு பாடி தமிழர்கள் தங்கள் குழந்தைகளுக்கு தமிழ்ப்பெயர் சூட்டிட வேண்டும் என்று ஊட்டிய உணர்வினை இப்போது உள்ள தமிழர்களுக்கும் சுட்டிக்காட்டுகிறார் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார்.

இவ்வாறு பாரதிதாசனின் பாடல்கள் பலவற்றிலும் காணப்படும் சிந்தனை திறன்களைத் தொகுத்துரைக்கும் இந்நூலுக்கு முதல்வர் மு.கருணாநிதி அவர்கள் அணிந்துரை வழங்கியுள்ளார்.

## 29. வாழையடி வாழை

செ.அரங்கநாயகம் அவர்கள் அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் கல்வித்துறை அமைச்சராகப் பணியாற்றியுள்ளார். அவர் வழங்கிய அணிந்துரையைக் காணலாம்.

தமிழில் அறிவியலை பயிற்றுவிக்க முடியுமா? என்பதற்கு முடியும் என்று இயற்பியல் நூல் ஒன்று தமிழில் எழுதியவர் மூதறிஞர் இராஜாஜி. அறிவியலை தமிழில் கற்பிக்க கலைச்சொல்லாக்கம் என்பது தடையாக இருக்காது என்பதற்குக் கடந்த 50 ஆண்டுகாலமாக உயர்நிலைப் பள்ளிகளில் அறிவியல் பாடங்கள் தமிழில் கற்பிக்கப்பட்டு வந்ததைப்போலவே பல நல்ல பாடநூல்கள் தமிழில் இப்போது வெளிவந்துள்ளன.

**“சொல்லும் திறமை தமிழ் மொழிக்கில்லை”**

என்ற வாக்கு பழங்கதையாய் மறைந்துள்ளது என்று கூறியுள்ளனர். ஆர்வமூட்டும் அறிவியல் கலை நூல்கள் தமிழில் தொடர்ந்து அதிகம் தோன்றவில்லை[4]. எல்லா நிலைகளிலும் அதிக அளவில் கற்பிக்கும் ஆசிரியர்களிலிருந்தும் இத்தகைய நூல்களை எழுதி வெளியிட பலர் முன் வருவதில்லை. **பேராசிரியர் ஆர்.கே.விஸ்வநாதன், பேராசிரியை ஈ.த.இராஜேஸ்வரி அம்மையார், திரு.பெ.ந.அப்புசாமி** போன்ற சிலர்

அறிவியல் துறையில் அதிக அளவில் பணியாற்றியுள்ளனர். இவர்களை அடுத்து பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அறிவியலில் பல துறைகளில் 14 நூல்களை எழுதி தமிழ் மொழிக்கு வளம் சேர்த்துள்ளதை அறியமுடிகிறது.

- **அறிஞர் பெட்ரெண்ட் _ ரஸ்ஸல் அணுவின் அரிச்சுவடி**
- **சர் ஜேம்ஸ் _ விளங்கா வியன் உலகம்**

போன்ற நூல்களை போலத் தமிழில் அறிவியல் புனைவு நூல்கள் தோன்ற வேண்டும். வாழையடி வாழை என்ற இந்நூல் மாந்தரின் கால்வழி இயலைப் பற்றியது.'**அணுவியல்**' '**தொலை உலகச்செலவு**' போன்ற பகுதிகள் அண்மைக் காலத்தில் பல சிறந்த பயன்களை இயற்பியலில் செய்துள்ளதைப் போலவே உயிரியலில் கால்வழிப் பகுதி பல வியக்கத்தக்க பயன்களை விளைவித்துள்ளதை அறியலாம். 1983 டிசம்பர் திங்களில் டெல்லி மாநகரில் நடைபெற்ற அனைத்துலக மாநாட்டில் கலந்து கொண்ட 50 நாடுகளைச் சார்ந்த 2500 அறிவியல் அறிஞர்கள் இத்துறையில் புதிதாக கண்டறிந்த பல அரிய சாதனைகளைக் கூறியுள்ளார்.

இந்நூல் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் உயிரியலில் ஜீன்களால் விளையும் பல புதுமைகளை அறிவியல் கல்வி பயிலாதவர்களும் எளிதில் புரிந்து கொள்ளுமாறு தெளிவாக படங்களுடன் விளக்கியுள்ளார். இந்நூலில் பெற்றோர்களிடமிருந்து தன் சேய்களுக்கு மரபு வழியாக செலுத்தப் பெறும் பண்புகள், கடத்தப் பெறாத பண்புகள் இவைஇவை என தெளிவாக விளக்கியுள்ளதை அறியலாம். அறிவியல் துறையில்

மார்க்கனும் மென்டலும் கண்டறிந்த பேருண்மைகள் தெளிவாக குறிப்பிடப்பட்டுள்ளது. அவை முறையே

**1. இரட்டை பிறவிகள்**

**2. இரண்டிற்கும் மேற்பட்ட பிறவிகள்**

**3. கொடிய நோய்கள்**

**4.மரபு வழியாக பெற்றோர்களிடமிருந்து மரபினருக்கு பரவும் முறைகள்**

**5.மெல்லியலார் எனப்படும் மகளிர் உண்மையில் வள்ளியலார் என்ற கருத்து**

**6. செயல் சார்ந்த குறைபாடுகள்**

**7. நோய் மனமுடையோர்**

**8. மந்த மனமுடையோர்**

**9. இரண்டும் கெட்டான்கள்**

**10. குருதி வகைகள்**

**11. குருதி வகைகளின் பொருத்தம்**

போன்ற தலைப்புகளில் அறிந்து கொள்ள வேண்டிய உண்மைகளை விளக்கியுள்ளார[5]. ‘**கொஞ்சம் நில்லுங்கள்**’ என்ற தலைப்பில் படிப்போரை பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் சிந்திக்கத் தூண்டுகிறார். ‘**கால் வழியில் புரட்சி**’ என்ற தலைப்பில் உணவுப் பெருக்கம் தாவரவியலிலும் விலங்கியலிலும் ஒட்டுவகையால் விளைந்த பயன்கள் இந்திய அறிவியலாளர்களால் வெளிநாடுகளில் கண்டறியப் பெற்ற நுணுக்கமான அறிவியல் உண்மைகளை எடுத்துக்காட்டியுள்ளதை அறியலாம். அருந்தமிழ்ப் புலமையோடு அறிவியல் புலமையும்

வாய்க்கப் பெற்ற இந்நூலுக்கு கல்வி அமைச்சர் செ.அரங்கநாயகம் அவர்கள் அணிந்துரை வழங்கியுள்ளது நோக்கத்தக்கதாகும்.

## 30. **பாண்டியன் பரிசு ஒரு மதிப்பீடு**

பேராசிரியர் க.அன்பழகன் திராவிட முன்னேற்றக் கழக அமைச்சரவையில் பல்வேறு காலகட்டங்களில் நிதி, கல்வி, சுகாதார, சமூக நலத்துறை அமைச்சராக பணியாற்றியுள்ளார். அண்ணாமலை பல்கலைக்கழகத்தில் இளங்கலை (சிறப்பு) தமிழ் படிப்பை முடித்த பின் சென்னை பச்சையப்பன் கல்லூரியில் துணை பேராசிரியராகப் பணியாற்றினார். 1948 ஜனவரி 15ஆம் நாள் "**புதுவாழ்வு**" என்னும் மாத இதழைத் தொடங்கி அதன் ஆசிரியராகப் பணியாற்றினார். 20 க்கும் மேற்பட்ட கட்டுரை நூல்கள் எழுதியுள்ளார். இனம், மொழி, பண்பாடு, தமிழர் வாழ்வு குறித்த புதிய பார்வைகளை இவரது நூல்களில் காணலாம். இவர் நூற்றாண்டு விழாவினை முன்னிட்டு சென்னை நீதித்துறை வளாகத்தில் மார்பளவு சிலையும் அவ்வளாகத்திற்கு "**பேராசிரியர் க. அன்பழகன் மாளிகை**" என்றும் தமிழக அரசு பெயர் சூட்டியுள்ளது. இவரது படைப்புகள் அனைத்தும் நாட்டுடைமை ஆக்கப்பட்டுள்ளது. இவர் வழங்கிய அணிந்துரையைக் காணலாம்.

திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவராகப் 17 ஆண்டுகள் பணியாற்றி தமிழுக்கு ஆக்கம் தரும் பல பணிகளை நிறைவேற்றியும் ஆந்திர மாநில மாணவர்களுக்கு நற்றமிழ் இலக்கியம் பயிற்றுவித்து தமிழுக்குத் தொண்டாற்றியவர் தமிழ் செம்மல் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். அவர் சங்கத்தமிழிலும் திருக்குறளிலும்

வைணவ சமய நூல்களிலும் சமய தத்துவ ஆராய்ச்சியிலும் கம்பராமாயணத்திலும் மிகுந்த ஈடுபாடு உடையவர். வைணவம் தொடர்புடைய நூல்களையும் ஆராய்ந்தவர்[6].

இருபதாம் நூற்றாண்டின் தமிழ் எழுச்சிக்கு வழிக்கண்ட தேசியக்கவி பாரதியார் கவிதைகளையும் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் கவிதைகளையும் போற்றியவர். மரபுக் கவிதை மட்டுமின்றி புதுக்கவிதையின் சிறப்பினையும் வரவேற்றவர். சில ஆண்டுகளாகத் தென்கிழக்காசிய நாடுகளின் மரபு வழி பண்பாட்டு நிறுவனத்தின் இயக்குநராகப் பொறுப்பேற்று நற்பணியாற்றி வந்ததை அறிய முடிகிறது. புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் இயற்றியுள்ள பாண்டியன் பரிசு என்னும் குறுங்காவியம் குறித்து ஒரு மதிப்பீடு செய்து இந்நூலை வெளியிட்டுள்ளார். பாண்டியன் பரிசு பல பதிப்புகள் மற்றும் வரலாற்று சாயல் கொண்டதொரு மன்னரின் குடும்பக்கதை.

**பாண்டியன் பரிசு கதை**

மன்னன் மகளொருத்தி எளிய உழைப்பாளிக் குடும்பத்து இளைஞன் ஒருவனின் பண்பு நலனும் வீரமும் கண்டு அவனது தந்தை திருட்டுத் தொழில் உடையவனாக இருந்தவர் என்பதையும் பொருட்படுத்தாது அவனையே மணவாளனாக ஏற்று மணிமகுடத்துக்கும் அவனை உரியவனாக கொண்டாள். மன்னர் குடும்ப வழக்கத்தில் இருந்து விலகிய நிலையில் ஒரு புரட்சிக் கொள்கை இதனால் அரங்கேற்றப்படுகிறது.

புரட்சிக் கவிஞரின் பகுத்தறிவுக் கொள்கை விளக்கம் செய்வதற்கு பூதம் புதையல் காக்கிறது என கற்பிக்கப்பட்டதன் பொய்மை பல நிகழ்ச்சிகளாலும் கதை மாந்தர் வாய்மொழியாலும் விளக்கப்படுவதை

அறிய முடிகிறது. “**புரட்சிக்கவி**” என்னும் தலைப்புடையக் கதையில் தமிழ் கற்பிக்கச் சென்றால் தன் உயிர் பறிக்கப்படும் என்பதால்,

**“அமுதென்று சொல்லுமிந்த தமிழ், என்னாவிட**
**அழுவதற்குக் காரணமாயிருந்த தென்று**
**சமுதாயம் நினைத்திடுமோ? ஐயகோ? என்**
**தாய்மொழிக்குப் பலி வந்தால் சகிப்பதுண்டோ ”[7]**

என்ற அடிகள் புரட்சிக்கவிஞரின் உள்ளக்கிடங்கை வெளிப்படுத்துகிறது. இக்கவிதையின் தலைப்பான புரட்சிக்கவி என்பதே பாரதிதாசனின் சிறப்புப் பெயராக விளங்கியதை அறியமுடிகிறது.

1. **பாண்டியன் பரிசின் தலைமை காவிய மாந்தர்கள்**
2. **துரோகியான எதிர்த்தலைவன்**
3. **துணைக் காவிய மாந்தர்**
4. **காவியநடை**
5. **காவியத்தின் படிமங்கள்**
6. **காவியம் உணர்த்தும் உண்மைகள்**

போன்ற தலைப்புகளில் நூலாசிரியர் புரட்சிக்கவிஞரின் படைப்புகளை விளக்கியுள்ளார். அறம் தாழ்ந்து மறம் தலைதூக்கி நிற்கும் போது நல்லோரைக் காப்பதற்கும் அல்லோரை அழிப்பதற்கும் யுகந்தொறும் என்பது கதை வாக்கியம் என்று பேராசிரியர் கூறியது அவரது உள்ள உணர்வின் வெளிப்பாடு. “**பகவத் கீதையில்**” அறத்திற்கு மாறான கருத்துக்கள் பல இடம்பெற்றிருப்பதை புரட்சிக்கவிஞர் எடுத்துக்காட்டியதை அறிய முடிகிறது[8]. வீழ்ச்சியுற்ற தமிழர்த்தம் நிலையை மாற்றிடும் உள்ளத்தவராதலின் தமிழர்களுக்குப் பெருமை

சேர்க்கும் வகையான இலக்கிய மேற்கோள்களையே புரட்சிக்கவிஞர் போன்றோரின் நூல் மதிப்பீட்டில் நிதி, கல்வி, சுகாதார, சமூக நலத்துறை அமைச்சராகப் பணியாற்றிய க.அன்பழகன் அவர்கள் இந்நூலுக்கு அணிந்துரை வழங்கியுள்ளார்.

## 31. கல்வி உளவியல்

ஜி.ஆர்.தாமோதரன் அவர்கள் கல்வியாளர், நிர்வாகி மற்றும் கோயம்புத்தூரில் உள்ள ஜி.ஆர்.டி அறக்கட்டளையின் நிறுவனர் பி.எஸ் .ஜி தொழில்நுட்பக் கல்லூரி மற்றும் பி.எஸ்.ஜி கலை மற்றும் அறிவியல் கல்லூரியின் முதல்வராகப் பணியாற்றியுள்ளார். அவர் வழங்கிய அணிந்துரையைக் காணலாம்.

கல்வி உளவியல் என்ற இந்நூலின் வாயிலாக பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் தமிழுக்கு சிறந்த தொண்டாற்றியுள்ளதை அறியலாம். இந்நூல் மாணவர்களுக்கும் பாடங்கற்பிக்கும் ஆசிரியர்களுக்கு மட்டுமின்றி குழந்தைகளுக்கும் கல்வி வளர்ச்சியில் மிகவும் பயனளிக்கிறது. இந்நூல் தற்போது தமிழ்நாட்டிற்கு மிகத் தேவையானதாக உள்ளது.

இதுவரை கல்வி உளவியலைப் பற்றி வெளிவந்துள்ள தற்கால அரிய கருத்துக்களை மிகச் செம்மையான முறையில் இந்நூலில் அமைத்து விளக்கியுள்ளார் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார். தற்கால கல்வியியல் கொள்கைக்கும் நம் பழைய இலக்கியங்களில் இருந்து

புலனாகும் பழங்கால கொள்கைகளுக்கும் ஒற்றுமை காணும்படியாக இவரின் உளவியல் நுட்பம் புலனாகிறது.

**“சென்றிடுவீர்எட்டுத்திக்கும்கலைச்செல்வங்கள்**
**யாவும்கொணர்ந்திங்குச் சேர்ப்பீர்”[9].**

என்ற பாரதியாரின் ஆணையை இவர் நிறைவேற்றியதை அறிய முடிகிறது. கல்லூரித் தமிழ் குழுவினர் வெளியிட்டுள்ள உளவியல் தமிழ் கலைச் சொற்களை இவர் தன் நூலில் பெரிதும் பயன்படுத்தியிருப்பது போற்றுதற்குரியச் செயலாகும். இந்நூல் ஆசிரியர் பயிற்சி கல்லூரிகளுக்கும் கலை வளர்ச்சியில் நாட்டமுள்ள பெருமக்களுக்கும் பயன் பெறும் வகையில் பேராசிரியர் ‘கல்வி உளவியல்’ என்ற இந்நூலுக்கு கல்வியாளர் ஜி.ஆர்.தாமோதரன் அவர்கள் அணிந்துரை வழங்கியுள்ளார்.

## 32. தமிழ் பயிற்று முறை

தி.சு.அவினாசிலிங்கம் அவர்கள் சென்னை மாகாண முன்னாள் கல்வித்துறை அமைச்சராகப் பணியாற்றியவர். 1957 ஆம் ஆண்டு அவினாசிலிங்கம் கல்வி அறக்கட்டளையின் மேற்பார்வையில் பெண்களுக்கான கல்லூரியாகத் துவங்கப்பட்டது. இது தன்னாட்சி பெற்ற எட்டு கல்லூரிகளில் ஒன்று. அவினாசிலிங்கம் மனையியல் மற்றும் உயிர்க்கல்விக் கழகம் என பெயர் பெற்றுள்ளது. அவிநாசிலிங்கம் பல்கலைக்கழகம் தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்களுள் மகளிருக்கான பல்கலைக்கழகமாகும். இந்நூலுக்கு அவர் வழங்கிய அணிந்துரையைக் காணலாம்.

ஒரு நாட்டு மக்களின் மேன்மைக்கு அறிகுறியாக இருப்பது அவர்களின் மொழி சிறப்பு. மனப்பண்பும் சீரிய சிந்தனையும் தம் சொந்த மொழியை ஆழ்ந்து பயில்வதால் தான் பெற முடியும். எனவே பன்மொழிப் புலவராகிய பாரதியார் தமிழ் மொழியின் சிறப்பை பாடலின் மூலம் குறிப்பிட்டுள்ளதை அறியலாம்.

**“யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழி போல்**
**இனிதாவது எங்கும் காணோம்”**

ஒவ்வொரு தமிழனும் தமிழிலேயே படித்து எத்தகைய உயர்ந்த ஞானத்தையும் பெற வேண்டும் என்கிறார். தமிழில் வரும் புத்தகங்கள் ஆரம்பத்தில் மொழிபெயர்ப்பாக இருந்தது. ஆனால் மொழிபெயர்ப்பு நூல்கள் முதல்தரமானதாக இருப்பதில்லை என்பதே உண்மை[10]. தமிழை மேம்படுத்த “**கலைக்கதிர்**” போன்ற மாத வெளியீடுகளும் பிற பத்திரிகைகளும் அறிவுத்துறையில் கட்டுரைகளும் விளக்கங்கள் போன்றவற்றை வெளியிடுவதை அறிய முடிகிறது. பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் பாடங்களை தமிழில் சொல்லித் தர வேண்டும் என்பதற்காக பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்களின் இந்நூல் பாராட்டுக்குரியதாக உள்ளது தமிழ்மொழி உலகம் தோன்றிய போதே பிறந்தது என்பதற்கு

**“கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தே வாளொடு**
**முல் தோன்றி மூத்த குடி”**[11].

பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் எழுதி இருக்கும் தமிழ் பயிற்று முறை பெரிய அளவு நூலாக அமைந்திருப்பதையும் அறிய முடிகிறது. ஆங்கில மொழியின் ஞானம் சென்ற தலைமுறையின்

போதனை மொழியாக இருந்தது. இன்னும் ஐந்து ஆண்டுகளில் தமிழும் போதனை மொழியாக படிப்படியாக மாறுவது உறுதி என்று தி.சு.அவினாசிலிங்கம் கூறியுள்ளார். புத்தகங்கள் இல்லை என்று சொல்லுவர். எனவே அதற்கு முன்பாகவே புத்தகங்களை எழுத முன் வந்திருப்பவர் பேராசிரியர் ந.சுப்புரெட்டியார்[12]. இவர் எழுதிய தமிழ் பயிற்று முறை என்னும் நூலுக்கு தி.சு.அவினாசிலிங்கம் அவர்கள் அணிந்துரை வழங்கியுள்ளதைக் காணலாம்.

**முடிவுரை** :

பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் அவர்கள் எழுதிய நூல்களுக்கு முதலமைச்சர் மற்றும் கல்வித்துறை அமைச்சர்கள் வழங்கிய அணிந்துரைகள் விளக்கமாக இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளது.

# அடிக்குறிப்புகள்

1.ந.சுப்புரெட்டியார், பாவேந்தரின் பாட்டுத்திறன் , ப. எ. 5

2.மேலது, ப.எ.44

3.மேலது, ப.எ.55

4.ந.சுப்புரெட்டியார், வாழையடி வாழை , ப.எ. 5

5.மேலது, ப.எ,7

6.ந.சுப்புரெட்டியார் , பாண்டியன் பரிசு ஒரு மதிப்பீடு, ப.எ, 6

7.மேலது , ப.எ. 8

8. மேலது , ப.எ.10

9.ந.சுப்புரெட்டியார், கல்வி உளவியல், ப.எ.7

10.ந.சுப்புரெட்டியார், தமிழ் பயிற்று முறை, ப.எ. 5

11.திருஞானசம்பந்தம், புறப்பொருள் வெண்பாமாலை, ப.எ.46

12. ந. சுப்புரெட்டியார், தமிழ் பயிற்று முறை, ப.எ. 7

# முடிவுரை

பேராசிரியர் ந.சுப்புரெட்டியார் தனது நூல்கள் வழி தமிழ் உலகிற்கு தொண்டாற்றிய பெருமைக்குரியவர். அவரது நூல்களுக்கு துணைவேந்தர்கள் வழங்கிய அணிந்துரைகள் குறித்து முதல் இயலில் விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

தமிழுக்குத் தொண்டாற்றிய பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் நூல்களுக்கு சான்றோர் பெருமக்கள் பலரும் அணிந்துரைகள் வழங்கியுள்ளனர். அவர்களுள் நீதியரசர்கள் வழங்கிய அணிந்துரைகள் குறித்து இரண்டாம் இயலில் கூறப்பட்டுள்ளது.

பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் நூல்களுக்கு பல்கலைக்கழகம் மற்றும் கல்லூரிகளில் பணிபுரிந்த பேராசிரியர்கள் அளித்த அணிந்துரைகள் குறித்து மூன்றாம் இயலில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

தமிழ் சான்றோர்களுள் ஒருவரான பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் நூல்களுக்கு முதலமைச்சர் மற்றும் கல்வித்துறை அமைச்சர்கள் அளித்த அணிந்துரைகள் பற்றி நான்காம் இயலில் குறிப்பிடப்பட்டுள்ளது. இங்ஙனம் இந்நான்கு இயல்களிலும் கல்விப்புலத்தில் முதன்மைப் பங்காற்றிய சான்றோர் பெருமக்கள் பேராசிரியர் ந.சுப்புரெட்டியாரின் மீது கொண்ட அதீத அன்பினாலும் அவரது நூல்களிள் தனிச்சிறப்பினாலும் அவர் எழுதிய நூல்களுக்கு அணிந்துரைகள் வழங்கியுள்ளதை இவ்வாய்வேட்டில் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது.

# துணைநூற்பட்டியல்

## முதன்மைச் சான்றாதாரங்கள்


1. **ந. சுப்புரெட்டியார்** **திருவேங்கடமும் தமிழ்இலக்கியமும்**
வேங்கடம் வெளியீடுகள்
அண்ணா நகர்
சென்னை - 600040
முதற்பதிப்பு-1975

2. **ந. சுப்புரெட்டியார்** **அர்த்த பஞ்சகம்**
வேங்கடம் வெளியீடுகள்
அண்ணா நகர்
சென்னை-600040
முதற்பதிப்பு- 1994

3. **ந. சுப்புரெட்டியார்** **நவவித சம்பந்தம்**
வேங்கடம் வெளியீடுகள்,
அண்ணாநகர்,
சென்னை- 600040,
முதற்பதிப்பு- 1994

4. **ந. சுப்புரெட்டியார்**
**தமிழில் அறிவியல் செல்வம்**
வேங்கடம் வெளியீடுகள்
அண்ணாநகர்
சென்னை- 600040
முதற்பதிப்பு- 2002

5. **ந. சுப்புரெட்டியார்**
**பாண்டி நாட்டுத் திருப்பதிகள்**
வேங்கடம் வெளியீடுகள்
அண்ணா நகர்
சென்னை- 600 040
முதற்பதிப்பு- 1977

6. **ந. சுப்புரெட்டியார்**
**கம்பனில் மக்கள் குரல்**
வானதி பதிப்பகம்
தி. நகர்
சென்னை- 17
முதற்பதிப்பு- 1983

**7. ந. சுப்புரெட்டியார்**

**சோழ நாட்டுத் திருப்பதிகள்-2**

அவ்வை வெளியீடு

அசோக் நகர்

சென்னை- 600 083

முதற்பதிப்பு- 2004

**8.ந.சுப்புரெட்டியார்**

**இலக்கிய வகையின் வளர்ச்சியும் இக்கால இலக்கியங்களும்**

ஐந்திணை பதிப்பகம்

திருவல்லிக்கேணி

சென்னை- 600005

முதற்பதிப்பு- 1997

**9. ந. சுப்புரெட்டியார்**

**சைவமும் தமிழும்**

திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்

டி .டி .கே சாலை

சென்னை- 6000018

முதற்பதிப்பு- 2001

10. **ந.சுப்புரெட்டியார்** **அறிவியல் நோக்கில் இலக்கியம் சமயம் தத்துவம்**
பழனியப்பா பிரதர்ஸ்
கோனார் மாளிகை
சென்னை- 600 014
முதற்பதிப்பு - 2001

11. **ந. சுப்பு ரெட்டியார்** **தொல்காப்பியன் காட்டும் வாழ்க்கை**
பழனியப்பா பிரதர்ஸ்
சென்னை - 600014
முதற்பதிப்பு - 1963

12. **ந. சுப்புரெட்டியார்** **குயில் பாட்டு ஒரு மதிப்பீடு**
பாரி நிலையம்
184 பிராட்வே
சென்னை - 6000001
முதற்பதிப்பு - 1982

13. **ந. சுப்புரெட்டியார்** **ஞானசம்பந்தர்**
பாரி நிலையம்
சென்னை - 600108
முதற்பதிப்பு - 1986

14. **ந. சுப்புரெட்டியார்** **கலியன் குரல்**

அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

அண்ணாமலை நகர்

முதற்பதிப்பு- 1989

15. **ந. சுப்புரெட்டியார்** **நினைவுக்குமிழிகள்-3**

வேங்கடம் வெளியீடுகள்

அண்ணாநகர்

சென்னை - 600040

முதற்பதிப்பு - 1989

16. **ந. சுப்புரெட்டியார்** **நினைவுக்குமிழிகள் - 4**

வேங்கடம் வெளியிடுதல்

அண்ணாநகர்

சென்னை - 600040

முதற்பதிப்பு - 1990

17. **ந. சுப்புரெட்டியார்** **சடகோபன் செந்தமிழ்**

வேங்கடம் வெளியீடுகள்

அண்ணாநகர்

சென்னை - 600040

முதற்பதிப்பு - 1989

18. **ந. சுப்புரெட்டியார்** **பரகாலன் பைந்தமிழ்**
வேங்கடம் வெளியீடுகள்
அண்ணாநகர்
சென்னை - 6000040
முதற்பதிப்பு - 1992

19. **ந. சுப்புரெட்டியார்** **வாய்மொழியும் வாசகமும்**
உமா பதிப்பகம்
சென்னை - 600001
முதற்பதிப்பு - 1993

20. **ந. சுப்புரெட்டியார்** **வள்ளுவரின் வாழ்வியல் சிந்தனைகள்**
அவ்வை வெளியீடு
அசோக் நகர்
சென்னை - 600 083
முதற்பதிப்பு - 2004

21. **ந. சுப்புரெட்டியார்** **தந்தை பெரியார் சிந்தனைகள்**
யாழ் வெளியீடு
மேற்கு அண்ணா நகர்
சென்னை - 40
முதற்பதிப்பு - 2001

**22. ந. சுப்புரெட்டியார்** — **சைவ சித்தாந்தம் ஓர் அறிமுகம்**

திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூல் பதிப்பு கழகம் லிமிடெட்

சென்னை - 600018

முதற்பதிப்பு - 2001

**23. ந. சுப்புரெட்டியார்** — **கவிமணியின் தமிழ்**

**பணி ஒரு மதிப்பீடு**

கலைஞன் பதிப்பகம்

தியாகராய நகர்

சென்னை - 600017

முதற்பதிப்பு - 2002

**24. ந. சுப்புரெட்டியார்** — **கவிஞர் வாலியின் பாண்டவர்**

**பூமி ஒரு மதிப்பீடு**

திருவரசு புத்தக நிலையம்

தியாகராய நகர்

சென்னை - 600 017

முதற்பதிப்பு - 2002

25. **ந. சுப்புரெட்டியார்**

**பாவேந்தரின் பாட்டுத்திறன்**

630 சாரா புக்ஸ் லிமிடெட்

சென்னை - 6000040

முதற்பதிப்பு - 2001

26. **ந. சுப்புரெட்டியார்**

**பாண்டியன் பரிசு ஒரு மதிப்பீடு**

சரா புக்ஸ் லிமிடெட்

மேற்கு அண்ணா

நகர்சென்னை - 600 040

முதற்பதிப்பு - 2002

# துணைமைச் சான்றாதாரங்கள்


1. **சி. பாலசுப்பிரமணியன்** — **திருப்பாவை விளக்கம்**
பாரி நிலையம்
184 பிரகாசம் சாலை
சென்னை - 600108
முதற் பதிப்பு - 1995
.

2. **புலியூர்க்கேசிகன்** — **திருக்குறள் பரிமேலழகர் உரை,**
பூம்புகார் பதிப்பகம்,
சென்னை - 600108.
முதற்பதிப்பு - 1978
.

3. **ந. சுப்புரெட்டியார்** — **நினைவுக்குமிழிகள் - 1**
வேங்கடம் வெளியீடுகள்
அண்ணாநகர்
சென்னை-600040
முதற்பதிப்பு - 1989

4. **தமிழ்பிரியன்** **திருவாசகம் மூலமும் உரையும்**

பப்ளிகேஷன்

சென்னை

முதற் பதிப்பு - 2016

5. **ந. சுப்புரெட்டியார்** **நினைவுக்குமிழிகள்-2**

வேங்கடம்வெளியீடுகள்

அண்ணாநகர்

சென்னை-600040

முதற்பதிப்பு - 1989

6. **பி.ரா.நடராசன்** **வரலாற்று முறையில் மூலமும் உரையும்**

உமா பதிப்பகம்

171 பவளக்காரர் தெரு மண்ணடி,

சென்னை - 600001

முதற்பதிப்பு - 2004.

# அகராதிகள் - கலை களஞ்சியம்


1. கந்தாயா பிள்ளை, ந.சி. — செந்தமிழ் அகராதி
சைவ சித்தாந்தக் கழகம்
சென்னை-1
வெளியீடு 1962

2.கதிரைவேற் பிள்ளை,நா. — தமிழ் மொழி அகராதி
Asia Educational Service
S.T.A New Delhi- 6
வெளியீடு 1962

3. சாந்தி சாதனா — முறைத்தமிழ் பேரகராதி
சாந்தி சாதனா பதிப்பகம்
125 64 செமியர்ஸ் சாலை
சென்னை
வெளியீடு 2001

4. வரதராஜன் மாடபூசி அருளிச்செயல் அருஞ்சொற்ப்பொருள் அகராதி. ஸ்வாமி நம்மாழ்வார் இந்தியஅறக்கட்டளை,சென்னை வெளியீடு 2001

5. வேத்திரக்ஞர் கலை களஞ்சியம் தமிழ் வளர்ச்சி கழகம் , சென்னை-9. தொகுதி 9 வெளியிடு - 1963

6. வாழ்வியல் களஞ்சியம் தமிழ் பல்கலைக் கழக வெளியீடு தஞ்சாவூர் வெளியீடு - 1991.

## DICTIONARIES

Tamil Lexicon - University of Madras
Chennai- 5

William Marris - The Grolier International
Dictionary
Vol.I. Houghton Miffion and Co.
Banbury USA
Published- 1981.

Winslow.M - Tamil English Dictionary
Asian Educational Service
C.21/15 S.T.A. New Delhi.

# கி.ராவின் கரிசல் உலகப் பண்பாட்டுப் பதிவுகள்

Ki.Raavin Karisal Ulakap Panpattup Pathivugal

தமிழ் முதுகலைப் பட்டத்தை நிறைவு செய்வதன் ஒரு பகுதியாகத் திராவிடப் பல்கலைக்கழகத்திற்கு அளிக்கப்பெறும் ஆய்வேடு

Dissertation submitted to Dravidian University in partial fulfillment for the Award of M.A. Degree

Submitted by


ஆய்வாளர்

**கோ. அரவிந்த்**

**G. ARAVIND**

Reg. No : 11700123006

நெறியாளர்

**முனைவர். பூ.சு. கணேஷ் மூர்த்தி, எம்.ஏ., பி.எச்.டி., பி.டி.எப்**

உதவிப் பேராசிரியர்

Under the Guidance of

**Dr. P.S. Ganesh Moorthy, M.A., Ph. D, P.D.F**

Assistant Professor





தமிழ்மொழி மற்றும் மொழிபெயர்ப்பியல் துறை

திராவிடப் பல்கலைக்கழகம், குப்பம், ஆந்திரப் பிரதேசம்

Department of Tamil Language and Translation Studies

Dravidian University, Kuppam, Andhra Pradesh


**ஏப்ரல் ( April ) - 2025**

கரிசல் இலக்கியத் தந்தையின் நூற்றாண்டினைத் தொடர்ந்து



# கி இராவின் கரிசல் உலகம்

100

கோவில்பட்டியில் அமைக்கப்பெற்றுள்ள முழு திருவுருவச்சிலையுடன் கூடிய நினைவரங்கம்



*"கோபல்லபுரத்து மக்கள்"* எனும் புதினத்திற்காக 1991 – ம் ஆண்டு சாகித்திய அகாதெமி விருது பெற்றவர்.

https://www.kirajanarayanan.com/

வணக்கம், இந்திய மற்றும் தமிழிலக்கியத்தின் மாபெரும் கதை சொல்லியான கி.ராஜநாராயணனின் இணையதளத்திற்கு உங்களை வரவேற்கிறோம். இத்தளம், கி.இராவுடைய சிறுகதைகள், கட்டுரைகள், மற்ற படைப்புகள், அவரைப் பற்றி மற்ற எழுத்தாளர்கள் எழுதிய ஆய்வுகள், பதிவுகள், ஆவணப்படம், காணொளிகள், புகைப்படங்கள் என அனைத்தும் அடங்கிய ஒரு கருவூலமாக இலக்கிய வாசகர்களுக்குப் பயன்படும் என நம்புகிறோம். மண்ணிடமும் மனிதனிடமும் அளவற்ற கரிசனத்துடன் உரையாடும் கி.ராவின் படைப்புலகத்துக்கு இந்தத் தளம் ஒரு நுழைவாயிலாக இருக்கும்.



இவர் தொகுத்த *கரிசல் வட்டார வழக்கு அகராதி* என்பது கரிசல் வட்டாரத்தில் சிறப்பாக வழங்கும் தமிழ்ச் சொற்களுக்கான அகராதி ஆகும். இது தமிழில் வட்டார அகராதிகளுக்கு ஒரு முன்னோடி முயற்சியாகக் கருதப்பெறுகின்றது.

## தமிழ்த்துறை




## டாக்டர். எம்.ஜி.ஆர் கல்வி மற்றும் ஆராய்ச்சி நிறுவனம் நிகர்நிலை பல்கலைக்கழகம்




சிறப்பு தர அந்தஸ்து பெற்ற நிகர்நிலை பல்கலைக்கழகம்

An ISO 21001 : 2018 தர சான்றிதழ் பெற்ற நிறுவனம்

மதுரவாயல், சென்னை-600 095, தமிழ்நாடு, இந்தியா.

# கரிசல் களம்




## பன்னாட்டு கருத்தரங்கு

கரிசல் இலக்கியத்தந்தை நினைவாக



https://alchetron.com/Ki-Rajanarayanan

https://sahitya-akademi.gov.in/awards/akademi%20samman_suchi.jsp#TAMIL









# நன்றியுரை

“**கி.ராவின் கரிசல் உலகப் பண்பாட்டுப் பதிவுகள்**” என்னும் தலைப்பில் இவ்வாய்வினை மேற்கொள்வதற்கு இசைவு அளித்த திராவிடப் பல்கலைக்கழகத்தாருக்கும், ஆய்வுப் பணியினை கண்காணித்து செம்மையுற செயல்படுவதற்கு தொடர்ந்து ஊக்கமளித்து வரும் தமிழ்மொழி மற்றும் மொழிபெயர்ப்பியல் துறைத்தலைவர் பேராசிரியர் **த.விஷ்ணுகுமாரன்** அவர்களுக்கும் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்விற்கு நெறியாளராக இருந்து ஆய்வுத் தொடர்பான ஐயங்களை நீக்கி, ஆய்வினை சிறப்பாக முடிக்க உறுதுணையாக இருந்த முனைவர் **பூ.சு.கணேஷ் மூர்த்தி** உதவிப் பேராசிரியர் அவர்களுக்கு மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வினை நன்முறையில் உருவாகும் வகையில் ஆய்வுத் தொடர்பான கருத்துக்களை வழங்கி உதவிய முனைவர் **கு.பத்மநாபன்** இணைப் பேராசிரியர் அவர்களுக்கும், முனைவர் **க.மாரியப்பன்** உதவிப் பேராசிரியர் அவர்களுக்கும், முனைவர் **வ.கலையரசி** உதவிப் பேராசிரியர் அவர்களுக்கும் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ந.சுப்புரெட்டியார் கல்வி அறக்கட்டளை 100 தலைவர் பேராசிரியர் **சு. இராமலிங்கம்** அவர்களுக்கு என் உளம் கனிந்த நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இவ்வாய்வேட்டை உருவாக்கும் பணியில் எனக்கு உதவிய தமிழ்மொழி மற்றும் மொழிபெயர்ப்பியல் துறையின் முனைவர் பட்ட ஆய்வாளர்களுக்கும், என் வகுப்பு தோழர்களாகிய முதுகலை இரண்டாமாண்டு மாணவர்கள் மற்றும் முதுகலை முதலாமாண்டு மாணவர்களுக்கும் என் அன்பு கலந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

**கோ. அரவிந்த்**

ஆய்வாளர்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| 1. | அ | அடிகள் |
| 2. | ஐ.நூறு | ஐங்குறுநூறு |
| 3. | கி.ரா | கி.ராஜநாராயணன் |
| 4. | ப | பக்கம் |
| 5. | பக் | பக்கங்கள் |
| 6. | ப.பாலை | பட்டினப்பாலை |
| 7. | மேலது | மேலே குறிப்பிட்ட நூல் |

# பொருளடக்கம்

# முன்னுரை

சமுதாயத்தின் ஒரு அங்கமாகத் திகழ்கின்ற படைப்பாளியால் படைக்கப்படுகின்ற, ஒரு படைப்பானது அது படைக்கப்படும் காலத்தின் சமூக, அரசியல், பண்பாட்டுப் பதிவுகளை உள்ளடக்கிய சமூகத்தின் கூட்டுப் படைப்புகளாகத் திகழக்கூடியவை. படைப்பு என்பது எந்த பண்பாடு அந்த இலக்கியத்தை படைத்தளித்ததோ அந்த பண்பாட்டின் ஒரு பகுதியாக திகழ்ந்து அக்காலத்திய சமூகப் பண்பாட்டு சூழல்களை பிரதிபலிக்கவும் கூடியவை என்ற செய்தி இலக்கியத்தின் ஆவணத்தன்மையை நமக்கு சுட்டிக்காட்டும். இலக்கியங்களைப் படைத்தளிப்பதற்குப் பின்னணியாக விளங்கும் சமுதாயத்தின் பண்பாட்டினைத் தொடர்ந்து ஆவணப்படுத்தும் செயலை அவ்விலக்கியங்களே செய்து வருகின்றன என்று ஆய்வாளர் ஃபெர்னாண்டோ பொயத்தோஸ் அவர்களின் கருத்துவழி அறியலாம்

ஒரு குறிப்பிட்ட மக்களைப் பற்றி ஒரு வெளிநபரால் படைக்கப்படும் படைப்பு அல்லது ஒரு குறிப்பிட்ட பண்பாட்டைச் சேர்ந்த படைப்பாளி, தன்னுடைய பண்பாட்டைப் பற்றியே படைக்கும் படைப்பு என இரண்டு வகையான படைப்புகள் உள்ளன. இதன் அடிப்படையில் கி. ராஜநாரயணன் தான் சார்ந்திருக்கும் நாயக்கர் இன மக்கள் வாழும் கரிசல்காட்டு பண்பாட்டைத் தனது படைப்புகளில் படைத்த படைப்பாளியாவார். இதனைக் கருத்தில் கொண்டு கி.ராஜநாராயணனின் படைப்புகளைப் பகுத்தாராய்ந்து அம்மக்களின்

சமூக, அரசியல், பண்பாட்டுப் பதிவுகளை இவ்வாய்வேடு வெளிப்படுத்துகிறது.

**ஆய்வுத் தலைப்பு**

**“கி.ராவின் கரிசல் உலகப் பண்பாட்டு பதிவுகள்”** என்பது இவ்வாய்வேட்டின் தலைப்பாகும்.

**ஆய்வு நோக்கம்**

கி.ராஜநாராயணனின் படைப்புகளைப் பகுத்தாராய்ந்து கரிசல் காட்டு மக்களின் சமூக, அரசியல், பண்பாட்டுப் பதிவுகளை வெளிப்படுத்தும் விதமாக இவ்வாய்வு அமைகின்றது.

**ஆய்வு கருதுகோள்**

கி.ராஜநாராயணன் படைப்புகளில் கரிசல்காட்டு மக்களின் சமூக, அரசியல், பாண்பாட்டுப் பதிவுகள் காணப்படுகின்றன என்பது இவ்வாய்வின் கருதுகோளாக அமைகின்றது.

**ஆய்வு எல்லை**

கி.ராவின் கரிசல் உலகம் என்ற புத்தகமும் கி.ராஜநாராயணனின் கிடை, கோபல்ல கிராமம், கோபல்லபுரத்து மக்கள், அந்தமான் நாயக்கர் ஆகிய நான்கு புதினங்களும் இவ்வாய்வின் எல்லைகளாக அமைகின்றன.

**ஆய்வுத் தரவுகள்**

இவ்வாய்வுக்கான தரவுகள் முதன்மை மற்றும் துணைமை ஆதாரங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. கி.ராவின் கரிசல் உலகம்

முதன்மை தரவாகவும் கிடை, கோபல்லபுர கிராமம், கோபல்லபுர மக்கள், அந்தமான் நாயக்கர் முதலான படைப்புகளும் இவற்றோடு தொடர்புடைய கட்டுரைகளும் துணைமை ஆதாரங்களாக எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன.

**ஆய்வு அணுகுமுறை**

நாயக்கர் மற்றும் கரிசல்காட்டு மக்களின் சமூக, அரசியல், பண்பாட்டுப் பதிவுகளை ஆராய இலக்கிய மானிடவியல் மற்றும் இனவரைவியல் அணுகுமுறையும் அவற்றை விவரிக்குமிடத்து விளக்கமுறை அணுகுமுறையும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**இயல் பகுப்பு**

"**கி.ராவின் கரிசல் உலகப் பண்பாட்டுப் பதிவுகள்**" என்ற தலைப்பில் அமைந்த இவ்வாய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளன. அவை முறையே,

| | |
|---|---|
| **இயல் ஒன்று** | கி.ராவின் வாழ்வும் பணியும் |
| **இயல் இரண்டு** | கி.ராவின் புதினங்கள் காட்டும் கம்மவார் நாயக்கர் வரலாறும் பண்பாட்டுப் பதிவுகளும் |
| **இயல் மூன்று** | கி.ராவின் புதினங்கள் காட்டும் வாய்மொழிப் பண்பாட்டுப் பதிவுகள் |
| **இயல் நான்கு** | கி.ராவின் புதினங்கள் காட்டும் சமுதாயச் சித்தரிப்புகள் |

**இயல் 1**

கி.ராவின் வாழ்வும் பணியும் என்பது ஆய்வேட்டின் முதல் இயல் ஆகும். இதில் கி.ராஜநாரயணன் அவர்களின் வாழ்க்கை, இலக்கியப் பங்களிப்பு, வட்டார வழக்கு மொழிக்கு இலக்கிய அந்தஸ்து கொடுத்தது, அவர்தம் படைப்புகள், அவற்றின் சிறப்புகள், அவர் பெற்ற ஏற்புகள் ஆகியவை குறித்து விளக்கப்பட்டுள்ளன.

**இயல் 2**

கி.ராவின் புதினங்கள் காட்டும் கம்மவார் நாயக்கர் வரலாறும் பண்பாட்டுப் பதிவுகளும் என்பது ஆய்வேட்டில் அமைந்துள்ள இரண்டாவது இயல் ஆகும். இவ்வியலில் கி.ராவால் பதிவுசெய்யப்பட்டுள்ள நாயக்கர் வரலாறும், அவர்களது பண்பாடும் தொகுத்தாரயப்படுட்டுள்ளது.

**இயல் - 3**

கி.ராவின் புதினங்கள் காட்டும் வாய்மொழிப் பண்பாட்டுப் பதிவுகள் என்பது ஆய்வேட்டின் மூன்றாவது இயலாக அமைந்துள்ளது. இவ்வியலில் கி.ராவின் புதினங்களில் உள்ள வாய்மொழிப் பாடல்கள், கதைகள், சொலவடைகள் காட்டும் பண்பாட்டுச் செய்திகள் குறித்து ஆராயப்பட்டுள்ளது.

**இயல் - 4**

கி.ராவின் புதினங்கள் காட்டும் சமுதாயச் சித்தரிப்புகள் என்பது ஆய்வேட்டின் நான்காவது இயல் ஆகும். இவ்வியலில்

ஆங்கிலேயர்கள் காலம், ஆங்கிலேயர்களுக்கு முந்தைய காலம் மற்றும் ஆங்கிலேயர்களுக்கு பிந்தைய காலம் ஆகிய மூன்று காலகாட்டங்களில் சமுதாய ஏற்றத்தாழ்வுகள் எப்படி இருந்தன என்பதை கி.ராவின் பதிவுகளின் மூலம் ஆராய்யப்பட்டுள்ளது

**முடிவுரை**

இவ்வாய்வின் நான்கு இயல்களிலிருந்து கிடைக்கப்பெற்ற முடிவுகள் தொகுக்கப்பெற்று முடிவுரையாகத் தரப்பட்டுள்ளன.

**துணைநூற்பட்டியல்**

முடிவுரைக்கு அடுத்து துணைநூற்பட்டியல் இடம்பெற்றுள்ளன. ஆய்வுக்குத் துணைநின்ற நூல்கள், கட்டுரைகள், ஆய்வேடு, இணைய இணைப்புகள் முதலியவை அகரவரிசைப்படித் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

**பின்னிணைப்பு**

கி. ராஜநாராயணனின் புகைப்படமும் அவருடன் தொடர்புடைய மற்ற நிழற்படங்களும் பின்னிணைப்பாகத் தரப்பட்டுள்ளன.

# இயல் - 1

## கி.ராவின் வாழ்வும் பணியும்

### முன்னுரை

படைப்பாளர் கி.ராஜநாராயணன் படைப்புகளில் காணப்பெறும் பண்பாட்டுப் பதிவுகளை பகுத்தாராயும் ஆய்வேட்டின் முதல் இயல் கி.ராவின் வாழ்வும் பணியும் என்பதாகும். இந்த இயலில் கி.ராஜநாராயணன் அவர்களின் தனி வாழ்வு, இலக்கிய வாழ்வு ஆகியவை குறித்த அறிமுகம் விளக்கப்படுகின்றன.

கி.ராஜநாராயணன் ஏறத்தாழ ஒரு நூற்றாண்டு காலம் வாழ்ந்து இலக்கிய வெளியிலும் ஆதிக்கம் செலுத்தும் ஒரு சில அதிகார சக்திகள் கட்டமைத்து நிலைநாட்டி இருக்கும் கருத்தாடல்களுக்கு எதிராக பெருவாரி மக்களிடம் உயிர்ப்புடன் நிலவும் உரையாடல்கள், கலை இலக்கியங்கள் மற்றும் வாழ்க்கை வடிவங்களைக் கவனத்தில் எடுத்து மாற்றுப் பண்பாட்டை மேலெடுத்து நிலைநிறுத்துவதே தனது இலக்கிய பயணம் என்ற குறிக்கோளோடு இயங்கியவர்.

### பிறப்பு

கி.ரா என இலக்கிய உலகில் அழைக்கப்படும் கி.ராஜநாராயணனின் முழுப்பெயர் **‘ராயங்குல ஸ்ரீகிருஷ்ண ராஜநாராயணப்பெருமாள் ராமானுஜம் நாயக்கர்’**. இன்றைய கோவில்பட்டிக்கு அருகில் இருக்கும், தூத்துக்குடி மாவட்டத்தைச் சேர்ந்த இடைசெவல் என்ற கரிசல் காட்டுக் கிராமத்தில் 1922 ஆம் ஆண்டு செப்டம்பர் 16 ஆம் தேதியில் ஸ்ரீ கிருஷ்ண ராமானுஜன்

மற்றும் லட்சுமி அம்மாள் ஆகியோருக்கு ஐந்தாவது புதல்வனாகப் பிறந்தார்.

**குடும்பம்**

கி.ரா. தந்தைக்கு அவர்கள் குடும்ப வழக்கப்படி இரண்டு துணைவிமார்கள். அத்தகைய குடும்பத்திற்கே உரிய சிக்காலான பின்புலத்தில் வளர்ந்த கி.ரா. அவரது 23 ஆம் வயதில் காசநோயினால் பாதிக்கப்பட்டார். மருந்தேகண்டுப்பிடிக்கப்படாத காலகட்டத்தில் கடுமையாகப் பாதிக்கப்பட்டார். நல்ல வேளையாக அதே காலகட்டத்தில் காசநோய்க்கான மருந்து கண்டுப்பிடிக்கப்பட்டு காலனித்துவ இந்தியாவிற்கு கொண்டு வரப்பட்டதால் கி.ரா பிழைத்துக்கொண்டார்.

இவ்வாறு காசநோயினால் நுரையீரல் பாதிக்கப்பட்ட கி.ரா-வுக்கு பெண்கொடுக்க யாரும் முன்வராத சூழலில் அவர் வாழ்ந்த தெருவிலேயே இருந்த கணவதி அம்மாவின் குடும்பத்தினர் கி.ரா குடும்பத்திற்கு இருந்த பல ஏக்கர் நில புலங்களைக் கணக்கிட்டே துணிந்து பெண் கொடுத்தனர். 1954 ஆம் ஆண்டு செப்டம்பர் 06 ஆம் தேதியில் கணவதி அம்மாளுடன் திருமணம் செய்யப்பட்டது.

இப்படி இணைந்த தம்பதியருக்கு இரண்டு ஆண் குழந்தைகள். மூத்தவர் திவாகரன். இளையவர் பிரபாகரன். மூத்தவர், தமிழ்நாடு காவல்துறையில் பணியாற்றி ஓய்வு பெற்றுப் பாண்டிச்சேரியில் வாழ்ந்து வருகின்றார். இளையவரான பிரபாகரன் தன் தந்தையைப்

போல விவசாயம் பார்த்துக்கொண்டு இடைசெவல் கிராமத்தில் கரிசல் வாழ்க்கையைச் சிறுகதைகளாக எழுதிக் கொண்டிருக்கிறார்.

**தாய்மொழி**

கி.ராவின் தாய்மொழி தெலுங்கு. தமிழ்நாட்டிலுள்ள பெரும்பான்மையான தெலுங்குக் குடும்பத்தினர் போலவே தெலுங்கு பேச மட்டுமே தெரியும். எழுதப் படிக்கத் தெரியாது. எழுதப் படிக்கத் தெரிந்த ஒரே மொழி தமிழ்மொழி மட்டும்தான்.

**கல்வி**

எட்டாம் வகுப்பு வரை மட்டுமே உள்ளூரில் இருந்த தொடக்கப் பள்ளியில் படித்துள்ளார். "பள்ளிக்கூடத்துப் பக்கம் மழைக்கு ஒதுங்கியவன் நான். அப்படி ஒதுங்கிய போதும் பள்ளிக்கூடத்தைப் பார்க்கவில்லை. மழையையே பார்த்துக்கொண்டிருந்தவன்" என்றும் "காடுகளில் ஆடு மேய்ப்பவர்களாடு சேர்ந்து சுற்றித்திரிந்து அவர்களின் கஞ்சியில் பங்கு கொண்டு எத்தனையோ நாட்கள் அலைந்திருக்கிறேன். அவர்களிடம் இருந்துதான் கதைகள் கேட்டேன். தமிழ் கற்றுக் கொண்டேன். ஆடு மேய்ப்பவர்கள், மாடு மேய்ப்பவர்கள், காடுகளில் வேலை செய்பவர்கள் இவர்கள்தான் எனக்கு ஆசான்கள். பள்ளி, பாடம், வாத்தியார் இவைகளைப் புறக்கணித்து விட்டுத் தனியாக காடுகளில் அலைந்து திரிந்ததனால் பல விஷயங்களையும் பார்க்கவும் கற்றுக் கொள்ளவும் முடிந்தது"[1] என்றும் தன் பள்ளிப்பருவ வாழ்க்கையைப் பதிவு செய்துள்ளதை அறியலாம்.

எட்டாம் வகுப்பு வரை மட்டுமே படித்திருந்த கி.ராவை 1985இல் புதுவை மத்தியப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராக இருந்த கல்வியாளர் கி.வெங்கடேச சுப்பிரமணியன் நாட்டுப்புறவியல் துறையின் வருகைத்தரு பேராசிரியராக வாய்ப்பளித்தார்.

**பள்ளிக்கூடமும் கி.ராவும்**

'ஒரு செய்தி' என்ற சிறுகதையை பற்றி கி. ராவிடம் கவிஞர் பழமலய் கேட்ட கேள்விக்கு அவர் அளித்த பதிலிலிருந்து பள்ளிக்கூடம் பற்றிய கி.ராவின் பார்வையை நாம் அறிந்துக்கொள்ளலாம்.

**பழமலய்** : "அந்த கதையில பிள்ளைகளைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பாம, இப்படித் தீப்பெட்டி, பட்டாசுத் தொழிற்சாலைக்கு அனுப்புறாங்களே என்று சொல்ல வர்ரீங்களா?"

**கி.ரா** : "பள்ளிக்கூடத்துக்கு அனுப்பவில்லை என்றா வருத்தப்படுகிறேன் இல்லையா, இல்லை. உடம்பை வளைத்து நெளித்து ஓடி ஆடி விழுந்து எழுந்து விளையாடிக் களிக்க வேண்டிய சின்னஞ் சிறு வயதில் இப்படி அநியாயமா ஆட விடாம, சிரிக்க விடாம, இருட்டுக்குள்ளே போட்டு ஒரே இடத்தில் பல மணி நேரம் என்று உட்கார வைத்து இடுப்ப ஒடிச்சு அந்தச் சிறுசுகளின் வாழ்க்கை இன்பங்களை அழிக்கிறார்களே அதைத்தான் அதுல சொல்ல வர்றேன். பள்ளிக்கூடமாவது... எழவாவது... அது எக்கேடு கெட்டா என்ன?"

"இந்தப் பிஞ்சுகளுக்கு விளையாட்டுப் பருவம் இல்லாமல் போச்சே என்பதுதான் என்னை கஷ்டப்படுத்துவது. அந்தக் கஷ்டத்தில்

பிறந்ததுதான் இந்த கதை" பொதுவாக இந்த கல்வி முறையை "செத்த கல்வி"[2] என்று தன்னுடைய உரையாடலில் அடிக்கடிச் சொல்லுவதை காணலாம்.

**கி.ராவும் மொழியும்**

'கொடுந்தமிழ்' என்று முன்னோர்களால் கூறப்பட்ட வட்டார மொழிக்கு இலக்கியத் தரம் கொடுத்தவர் கி.ரா. தான் அறிந்த கரிசல் வட்டாரத்தின் மொழியை அதன் ஒலிக் குறிப்பை எல்லாம் பதிவு செய்து தமிழில் முதன் முதலில் கரிசல் காட்டு அகராதி என்னும் அகராதியைத் தயாரித்து வெளியிட்டவர்.

தமிழ் மறுமலர்ச்சி என்ற அரசியல் உணர்வுகளால் பழமையைப் போற்றும் பண்புகள் பெருகிக் கொண்டிருந்த ஒரு காலகட்டத்தில், புலவர்களின் செல்வாக்குக் கொடிக்கட்டிப் பறந்த ஒரு சூழலில் தன் முயற்சியை விடாமல் தொடர்ந்தார். அதற்காக 'மக்கள் தமிழ் வாழ்க' என்னும் நூலை வெளியிட்டார்.

'கரிசல் காட்டு இலக்கியம் என்று சொல்லிக் கொண்டு உங்கள் எழுத்து முழுவதையும் கொச்சை மொழியிலேயே சொல்லிச் செல்கிறீர்கள். இது மொழியைச் சிதலப்படுத்துகிற ஒரு முயற்சி தானே. மேலும், வட்டார வழக்கு என்பதே ஒரு பம்மாத்துதானா?' என சுபமங்களா பத்திரிக்கை நிருபர் கேட்ட கேள்விக்கு இவ்வாறு பதிலளித்திருக்கிறார்

"கொச்சை மொழி எது தெரியுமா பண்டிதர்கள் பேசுவதுதான் கொச்சையான மொழி. மக்கள் பேசிக்கொண்டு இருப்பதுதான் நல்ல

தமிழ். சுந்தரத் தமிழ். ஏட்டில் இருப்பது தமிழ் மாதிரி உள்ள இமிடேஷன் மொழி. மக்களின் பேச்சுமொழியை எழுதினால், அதைக் கொச்சை என்னு சொன்னால் அவரைத் தமிழ்த் துரோகி என்பேன். நம்முடைய மக்கள் பேசுவது எப்படிக் கொச்சைமொழியாகும். வட்டார வழக்கல்ல பம்மாத்து; பண்டிதத் தமிழ்தான் பம்மாத்து."[3]

"உலகம் முழுவதிலும் உள்ள வட்டார மொழி இலக்கியம் சாதித்துக் காட்டி இருப்பது போலவே இவரும்,

1. தான் சார்ந்த நிலப்பகுதியை, அத்திணைக் குடிகளின் உடல் மணத்தை, உள்ளத் துயரைத் தன் படைப்பில் எதிரொலிக்கச் செய்துவிட்டார்
2. படைப்பின் ஊடாக அந்தப் புவியியல் தகவல்களை எல்லாம் ஒன்று விடாமல் வாசர்களுக்கு வழங்கி விட்டார்.
3. மொழியின் பிடிபடாத தர்க்கக் கூறுகளை எல்லாம் தன் படைப்பில் பிடித்து வைத்துவிட்டார்."[4]

என்பதை இந்திய இலக்கிய சிற்பிகள் புத்தகத்தின் வழியாக அறியலாம்.

## விவசாயமும் கி.ராவும்

கி.ரா அடிப்படையில் விவசாய குடும்பத்தைச் சேர்ந்தவர். தனக்குச் சொந்தமான வேளாண்நிலத்தில் விவசாயம் செய்துக்கொண்டே தனது இலக்கிய படைப்பு பணிகளை மேற்கொண்டவர். "கரிசல் மண் குறித்த கி. ராஜநாராயணனின் அறிதல் வியக்கத்தக்கது. இவர் அளவுக்கு தனது சூழ்நிலையை விளங்கிக்

கொண்ட கலைஞர்கள் மிகவும் குறைவு."[5] "கி.ராவின் படைப்புவெளியில் வேளாண் மக்களின் வாழ்க்கைப்பாடுகள்தான் பெரிய அளவில் மண்ணின் மொழியோடும் மணத்தோடும் நீக்கமற நிறைந்து கிடக்கின்றது."[6] இவருடைய படைப்புகள் அனைத்திலும் வேளாண்மை சமூகம் சார்ந்த சித்தரிப்புகள் நிறைந்துக் காணப்படுக்கின்றன. கரண்ட், கரிசல் காட்டில் ஒரு சம்சாரி, தாவைப் பார்த்து, ஒரு வெண்மைப் புரட்சி, மாயமான் முதலிய சிறுகதைகள் சிறந்த உதாரணமாகத் திகழ்கின்றன. இடைசெவல் கிராமத்தில் இருந்த மாவட்ட விவசாயிகள் சங்கத்தின் மாநாடுகளில் அதிகமாக பங்குக்கொண்டு சங்க மாநாடுகளிலும் பொதுக்கூட்டங்களிலும் பாடுவதற்காகப் பல பாடல்களையும் எழுதிக் கொடுத்திருக்கிறார். அப்பாடல்களில் ஒன்றுதான் கீழ்கண்ட பாடல்

**"காரிருள் போக்கியதே - கிஸான் சபை**
**காலைக் கதிரவன் போலே"**

**பொதுவுடைமைத் தத்துவமும் கி.ராவும்**

பெரிய நிலப்பிரபுக் குடும்பத்தில் பிறந்து வளர்ந்தாலும் தன் இளமைக் காலத்திலேயே பொதுவுடைமைத் தத்துவத்தில் ஆர்வம் கொண்டவராகத் திகழ்ந்துள்ளார். அதிகாரத்திற்கு எதிரான மனப்பான்மையும் கோவில்பட்டியில் இயங்கிய இலட்சுமி மில் தொழிலாளர்களுடனான தொடர்பும் இவரை கம்யூனிஸ்ட் இயக்கத்தில் இணைத்தது. தனது 20 ஆம் வயதிலேயே இடைசெவல் கிராம கம்யூனிஸ்ட் கட்சியின் செயலாளராக இயங்கியுள்ளார். "நான் அரசியல் வகுப்புகளில் கலந்து கொண்டும் புத்தகங்களைப் படித்தும்

தேறி ஒரு அரசியல்வாதியாகக் கனிந்தவுடன் என் கையில் கட்சி கார்டு கொடுத்தார்கள். என் நீட்டிய இரண்டு கைகளிலும் அந்த கார்டை வைத்தவர் காலம் சென்ற என் அரசியல் ஆசான் தோழர் பி. சீனிவாசராவ் அவர்கள் ஆவார். கார்டை வாங்கி நான் விரித்துப் பார்த்தபோது அதில் ஒரு வாசகம் இருந்தது. தோழர் லெனின் ஸ்தாபித்த கட்சியின் ஒரு அங்கத்தினன் என்ற கௌரவத்தைத் தவிர வேறு கௌரவம் இல்லை."[7] இவ்வாறு தான் கம்யூனிஸ்ட் இயக்கத்தில் சேர்ந்ததை கி.ரா பதிவுசெய்துள்ளார்:

சுதந்திர இந்தியாவின் விடுதலை என்பது உழைப்பாளி வர்க்கத்திற்கானதாக இல்லை. அது வெறுமனே முதலாளிகளுக்கு இடையிலான கைமாற்றப்பட்ட சுதந்திரம் என்று கம்யூனிஸ்ட் கட்சி விமர்சித்தது. இதனால் கம்யூனிஸ்ட் கட்சி இந்தியாவில் தடைசெய்யப்பட்டு பல சதிவழக்குகள் அக்கட்சியின் நிர்வாகிகள் மீது போடப்பட்டன. அத்தகைய சதிவழக்குகளில் ஒன்றாக தயாரிக்கப்பட்ட 1948 நெல்லை சதிவழக்கில் கி.ராவும் சேர்க்கப்பட்டதால் தலைமறைவு வாழ்க்கையை வாழ்ந்தார். அவ்வாறு தலைமறைவாக விருதுநகரில் இருந்தபோதுதான் 'சொந்தச் சீப்பு' என்ற தனது முதல் சிறுகதையை எழுதினார்.

டி.கே.சியுடன் நெருங்கிப்பழகியதைத் தொடர்ந்து கட்சியரசியலில் ஈடுபாடு கொள்ளாமல் அழகியல் சுவையில், தேர்ச்சியான இரசனை முறைகளில் தன் ஆர்வத்தை மடைமாற்றிக் கொண்டார். இதற்கான காரணத்தை பின்வருமாறு கூறுகிறார்

“இடதுசாரிகள் நாட்டுக்குத் தேவை. ஆனா அவங்க ஆள ஆசைப்படக்கூடாது. ஆள்றவனுக்கு சுயநலம் வந்திடும். ரஷ்யாவுல 70 ஆண்டுகள்தான் இடதுசாரிகளால நிற்கமுடிந்தது. நாங்க வந்தா தேவலோகமா இருக்கும்னு சொன்னோம். நடக்கலேயே... ஏன்... தத்துவத்துல பிரச்னையில்லை... வழிநடத்துனவங்களோட பிரச்சனை. இங்கே மனுஷங்களோட போக்கு சரியில்லை. வாழ்நாள் பூரா அந்தக் கட்சிக்குப் பாடுப்பட்டேன்... வீழ்தேன்...”[8] இவ்வாறு தனது கட்சி சார்ந்த பொதுவுடைமையைக் கூறியுள்ளார்.

**கி.ராவும் இசையும்**

கி.ரா ஒரு கர்நாடக இசைக்கலைஞர். தனது நண்பர் கு.அழகிரிசாமியுடன் சிறிய வயதிலிருந்து ஒன்றாய் பஜனை மடங்களில் பாடல்கள் பாடி வந்தவர். இசையின் மீது இருந்த ஆர்வத்தால் குருமலை பொன்னுசாமிப் பிள்ளை அவர்களிடம் முறையாக இசை பயின்றவர். இவரும் இவரது நண்பர் கு.அழகிரிசாமியும் இணைந்து தமிழில் சில கீர்த்தனைகளை வடிவமைத்திருக்கிறார்கள். ஆனால், அவற்றை கர்நாடக இசை உலகம் அங்கீகரிக்கவில்லை. அதைப்பற்றிக் கவலையும் அவர்களுக்கு இல்லை. கர்நாடக இசைக்கலைஞர்களைக் குறித்துக் கி.ரா. எழுதிய அனைத்துக் கட்டுரைகளையும் கழனியூரன் தொகுத்திருக்கிறார். பெரும்பாலும் கி.ரா. ரசிகமணி டி.கே.சி, காரிக்குறிச்சி அருணாச்சலம், விளாத்திகுளம் சுவாமிகள், திருவாவடுதுறை ராஜரத்தினம், வில்லிசைக் கலைஞர் பிச்சுக்குட்டி

ஆகியோர்களின் கச்சேரிகளையும் வாசிப்பையும் பற்றியே நிறைய எழுதியுள்ளார்.

**படைத்த நூல்கள்**

கரிசல் இலக்கியத்தின் தந்தை என அழைக்கப்படுகின்ற கி.ரா கரிசல் பகுதியை மையமிட்ட சிறுகதைகள், நாவல்கள், குறுநாவல்கள், கட்டுரைகள், சிறுவர் இலக்கியம் முதலியவற்றை படைத்தளித்துள்ளார். மேலும், அவர் நாட்டுப்புறக்கதைகளைத் தொகுத்து தொகுப்புகளாகவும், கரிசல் வட்டார வழக்கு சொற்களைத் தொகுத்து அகராதியாகவும் வெளியிட்டிருப்பதை அறியலாம்.

**கி.ராவின் நாவல்கள்**

கி.ரா முறையே கோபல்ல கிராமம், கோபல்லபுரத்து மக்கள், அந்தமான் நாயக்கர் ஆகிய மூன்று நாவல்களைப் படைத்துள்ளார். மூன்று நாவல்களும் கதைத் தொடர்ச்சிக் கொண்டவை. வரிசை முறையில் வாசித்தால் மட்டுமே கதைக் களம் புலப்படும்.

**கோபல்ல கிராமம்**

பாளையக்காரர்களின் ஆட்சி முடிந்து, ஆங்கிலேய கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆட்சி முறையாக அமலுக்குவராத காலகட்டத்தில் நாவலின் நிகழ்வுகள் புனையப்பட்டுள்ளன. முஸ்லிம் ராஜாவுக்கு அஞ்சித் தெற்கு நோக்கி ஓடி வந்த தெலுங்கு குடும்பங்கள், அரவதேசம் என்று தெலுங்கர்களால் அழைக்கப்படுகின்ற தமிழகத்தில் குடியேறி, கோபல்ல கிராமம் என்னும் புதிய கிராமத்தை உருவாக்கி, பல குடும்பங்களாகப் பெருகிய பின், அந்த மக்களின் பிரச்சனைகளைச்

சித்தரிக்கும் புதினம் இது. கரிசல் காட்டு கிராம மக்களின் பேச்சு வழக்கையும் சொலவடைகளையும் உள்ளடக்கிய வாய்மொழிக் கதை மரபில் அமைந்த நாவல்.

**கோபல்லபுரத்து மக்கள்**

கோபல்ல கிராமத்தின் இரண்டாம் பாகம் கோபல்லபுரத்து மக்கள். கோபல்ல கிராமத்தின் தொடர்ச்சியாக அமைந்த இந்நாவல் 34 வாரங்களாக ஆனந்த விகடனில் தொடராக வெளிவந்து பல்லாயிரக்கணக்கான வாசகர்களின் வரவேற்பையும், 1991 ஆம் ஆண்டிற்கான சாகித்திய அகாதெமி விருதையும் பெற்றதை அறியலாம். இந்தியா சுதந்திரம் பெற்ற கதையோடு முடியும் இப்புதினத்தில், சமகால வரலாற்றுச் சம்பவங்களின் பின்னணியில் சாதாரண மக்கள் நாயகர்களாக விளங்குவதையும், பிரிட்டிஷ் ஆட்சிக்கு எதிரான விடுதலை உணர்வு மக்களிடம் எவ்வாறு பிரதிபலித்தது என்பதையும், கரிசல் மக்களுக்கே உரித்தான தனித்தன்மைகளையும் தமக்கேயுரிய நடையில் கி.ரா விவரிப்பதை அறியலாம்.

**அந்தமான் நாயக்கர்**

கோபல்ல கிராமத்தின் மூன்றாம் பாகம் அந்தமான் நாயக்கர் என்னும் இப் புதினம். “இந்த தொடருக்கு ‘நம்பிக்கை மோசம்’ என்கின்ற... பெயர்... தலைப்புதான் பொருத்தம் பெயர் நல்லா இல்லாதது போலத் தெரிந்ததால் ‘அந்தமான் நாயக்கர்’ என்றே வைத்து விட்டேன்.”[9] (கிரா என்னுரையில்) வெள்ளைக்கார அரசை

எதிர்த்து நடந்த கொடிப் போராட்டத்தின்போது கோபல்லபுரத்தில் விளையாட்டுப் போல ஒரு இளைஞன் மூவர்ணக் கொடியை மரத்தில் ஏறிக் கட்டிவிடுகிறான். பிறகு அந்த இளைஞன் தன்னுடைய முதலாளியால் காட்டிக்கொடுக்கப்பட்டு சிறை செல்கின்றதையும், 40 வருடங்கள் கழித்துச் சிறையிலிருந்து வெளிவந்து ஒரு குற்றமும் அறியாத விவசாயியாக வாழ்ந்தப்போதும் சுதந்திர இந்தியாவின் போலீஸ் அவனை அடித்தே கொன்றுவிடும் கதையாக இந்நாவலை கி.ரா படைத்துள்ளார்.

**குறுநாவல்**

உரைநடையின் ஓர் வடிவமான குறுநாவல் சிறுகதைக்கும் நாவலுக்கும் இடைப்பட்ட வடிவமாகும். கி.ரா. கிடை, பிஞ்சுகள் என்ற இரண்டு குறுநாவல்களை படைத்துள்ளார்.

**கிடை**

கி.ராவின் படைப்புகளில் மிகவும் புகழ்ப்பெற்ற படைப்பாக பலராலும் சிறப்பிக்கப்படுவது ‘கிடை’ என்ற குறுநாவல். கிடையின் சிறப்பை நுஃமான் வரிகளில் கண்டோமேயானால் அது நமக்குப் புலப்படும்

“கிடை காட்டும் சமூக உறவுகள் மிகவும் இறுக்கமானவை. சாதி வேறுபாடுகள் பொருளாதார ஏற்றத்தாழ்வும் இங்கு இறுகிப் பிணைந்து கிடக்கின்றன. எல்லப்பனின் கலியாண ஊர்வலமும் செவனியின் பேயோட்டு வைபவமும் இந்தச் சமூக முரணை உக்கிரமாகக் காட்டுகின்றன. கிராமத்தின் சில வலியகரங்கள் சில தனிமனிதர்களின்

வாழ்வை ரகசியமாக இறுக்கிக் கொண்டிருப்பதை இதில் காணலாம். ஒரு கலை என்ற வகையில் கிடை தான் ராஜநாராயணனின் படைப்புகளிலேயே சிகரம் என்று இப்போதும் எனக்குத் தோன்றுகின்றது."[10] இதில் அவர் காட்டியுள்ள நுட்பம் அலாதியானது என எம். ஏ. நுஃமான் சுட்டிக் காட்டியுள்ளது கிடையின் சிறப்பை நமக்கு காட்டுகிறது.

**பிஞ்சுகள்**

தமிழில் எழுதப்பட்ட மிகச்சிறந்த சிறார் இலக்கியங்களில் ஒன்றாக மதிப்பிடப்படகூடியது. இயற்கையின் மீது குழந்தைகளுக்கு ஆர்வம் ஏற்படவும், நம் மண் சார்ந்த உயிரினங்களின் தமிழ்ப்பெயர்களை அறிந்து, அவற்றைப் பாதுகாக்கவும், குழந்தைகளுக்கு அறிவுறுத்துவதாகும், குழந்தைகளின் உலகைக் குழந்தைகள் மட்டுமல்லாமல் பெரியவர்களும் கண்டுணரும் விதமாக இயல்பான படைப்பாக இக் குறுநாவல் விளங்குகிறது.

**சிறுகதைகள்**

கதவு சிறுகதை மூலம் தமிழ்ச் சிறுகதை உலகின் கதவை விசாலமாகத் திறந்து வைத்தவர். தமிழிலக்கிய உலகின் கவனத்தை ஈர்த்துள்ள இவரது கதைகள் இந்தியாவின் இதயம் கிராமங்களில்தான் உள்ளது என்பதை உறுதி செய்யக்கூடியவை. 25க்கும் மேற்பட்ட சிறுகதைத் தொகுப்புகளை படைத்தளித்துள்ளார். அவை முறையே,

| வ.எண் | சிறுகதைத் தொகுப்பு |
|---|---|
| 1. | கன்னிமை |
| 2. | மின்னல் |
| 3. | கோமதி |
| 4. | பேதை |
| 5. | ஜீவன் |
| 6. | நெருப்பு |
| 7. | விளைவு |
| 8. | பாரதமாதா |
| 9. | கண்ணீர் |
| 10. | வேட்டி |
| 11. | கரிசல் கதைகள் |
| 12. | கி.ரா. பக்கங்கள் |
| 13. | கிராமிய விளையாட்டுகள் |
| 14. | கிராமியக் கதைகள் |
| 15. | குழந்தை பருவக் கதைகள் |
| 16. | கொத்தைப் பருத்தி |
| 17. | புதுவை வட்டார நாட்டுப்புறக் கதைகள் |
| 18. | பெண் கதைகள் |
| 19. | பெண் மனம் |
| 20. | வயது வந்தவர்களுக்கு மட்டும் |
| 21. | கதை செல்லி |

| | |
|---|---|
| 22. | மாயமான் |
| 23. | அப்பாபிள்ளை அம்மாபிள்ளை |
| 24. | பெருவிரல் குள்ளன் - சொல்கதை |
| 25. | கதவு |
| 26. | நிலைநிறுத்தல் |

## கட்டுரை

கி.ரா கதை, சிறுகதை, புதினங்கள் படைத்ததுபோல கட்டுரைகளையும் எழுதியுள்ளார். அவை முறையே

| வ.எண் | கட்டுரை |
|---|---|
| 1. | ருஷ்ய மண்ணின் நிறம் என்ன? |
| 2. | புதுமைப்பித்தன் |
| 3. | மாமலை ஜீவா |
| 4. | இசை மகா சமுத்திரம் |
| 5. | அழிந்துபோன நந்தவனங்கள் |
| 6. | கரிசல் காட்டுக் கடுதாசி |
| 7. | கி.ரா. கடிதங்கள் |
| 8. | கி.ரா கட்டுரைகள் |

## அகராதி

தமிழின் முதல் அகராதியை உருவாக்கிய வீரமாமுனிவர் வட்டார வழக்கு அகராதி ஒன்றையும் உருவாக்கியதாக

சொல்லப்படுகின்றது. ஆனால், அது நம்மிடம் இப்போது இல்லை. வீரமாமுனிவர் காலத்திற்குப் பிறகு ஒரு வட்டார வழக்கு அகராதி தமிழில் உருவாக சுமார் இரண்டரை நூற்றாண்டுகள் காத்திருக்க வேண்டியிருந்து. அக்குறையை நீக்கியவர் கி.ரா. அவர் கரிசல் வட்டார வழக்குச் சொற்களைத் தொகுத்து வட்டார வழக்குச் சொல்லகராதி என்ற அகராதியை உருவாக்கி தந்ததன் மூலம் தமிழ் வட்டார வழக்கு அகராதியின் முன்னோடியாகத் திகழ்கின்றார்.

**தொகுப்புகள்**

வாழையடி வாழையாக வாழ்ந்து வளர்ந்து வருகின்ற நாட்டுப்புற மக்களின் வாழ்வையும் வாழ்வுக் கூறுகளையும் படம் பிடித்துக் காட்டும் நாட்டுப்புறக்கதைகள் ஏட்டிலே வராத, எழுத்திலே காணமுடியாத உள்ளத்தில் ஊறிக்கிடக்கும் எத்தனையோ எண்ணங்களையும் நம்பிக்கைகளையும் பழக்க வழக்கங்களையும் அப்படியே படம் பிடித்து காட்டக்கூடியவை. இத்தகைய நாட்டுப்புறக் கதைகளை கி.ராஜநாரயணன் தொகுத்தளித்திருக்கின்றார். அவை முறையே,

| வ.எண் | தொகுப்பு |
| --- | --- |
| 1. | நாட்டுப்புறக் கதை களஞ்சியம் |
| 2. | தமிழ்நாட்டு நாடோடி கதைகள் |
| 3. | தமிழ் கிராமியக் கதைகள் |
| 4. | தாத்தா சொன்ன கதைகள் |

**அண்டரெண்டப் பட்சி**

தனது 98 வது வயதில் எழுதிய புதிய குறுநாவல்தான் அண்டரெண்டப் பட்சி. இது அச்சில் வராமல் கையெழுத்துப் பிரதியாகவே வெளியிடப்பட்டுள்ளது. இக் குறுநாவலே கி.ராவின் கடைசி படைப்பாக அமைந்தது குறிப்பிடத்தக்கதாகும்.

**இதழாளர் கி.ரா**

கதைச்சொல்லும் பழக்கத்தைத் தூண்டும் விதமாக முழுக்க முழுக்க கிராமியப் படைப்புகளைக் கொண்ட கிராமிய இதழாக 'கதைச்சொல்லி' என்ற இதழை கி.ரா நடத்தினார். அவ்விதழின் பொறுப்பாசிரியராக கழனியூரன் செயல்பட்டார். கதைச்சொல்லி இதழின் சார்பில் கரிசல் அறக்கட்டளை ஒன்றை நிறுவி கி.ரா- வின் பிறந்த நாளான செப்டம்பர் 15 ஆம் தேதியில் சிறந்த சிற்றிதழுக்கு 5000 ரூபாய் பரிசளித்ததைக் காணமுடிகின்றது.

**திரைப்படமான படைப்புகள்**

'கிடை' குறுநாவலை மையமாக வைத்து ஒருத்தி என்ற திரைபடத்தை அம்சன்குமார் என்பவர் 2003 ஆண்டு இயக்கியுள்ளார். இத்திரைப்படம் இந்திய சர்வதேச திரைப்பட விழாவிற்கு தேர்வு செய்யப்பட்டு இந்திய பனோரமா பிரிவில் திரையிடப்பட்டது மட்டுமின்றி புதுச்சேரி அரசின் சிறப்பு விருதினையும் பெற்றது.

'கரண்ட்' என்ற சிறுகதையினை மையமாக கொண்டு 1992 ஆம் ஆண்டில் கே. அரிகரன் என்பவர் கரண்ட் திரைப்படத்தை இந்திய தேசிய திரைப்பட மேம்பாட்டுக் கழகத்திற்காக இந்தியில் இயக்கினார்.

‘விளைவு’ என்ற சிறுகதை ‘பாவய்யா’ என்ற பெயரில் குறும்படமாகவும் ‘கதவு’ என்ற புகழ் பெற்ற சிறுகதை தங்கராஜ் இயக்கத்தில் குறும்படமாகவும் எடுக்கப்பட்டுள்ளது

## பெற்றவிருதுகள்

ஏறத்தாழ 100 ஆண்டுகள் வாழ்ந்து தமிழ் இலக்கிய உலகில் தீவிரமாக இயங்கிய இவருக்கு பல்வேறு விருதுகள் வழங்கப்படுள்ளன அவற்றைக்காணலாம்.

| வ.எண் | ஆண்டு | விருது |
|---|---|---|
| 1 | 1971 | தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்ற விருது |
| 2 | 1979 | இலக்கிய சிந்தனை விருது |
| 3 | 1990 | சாந்தோம் பன்னாட்டு கிறித்தவ சங்கத்தின் சிறந்த எழுத்தாளர் விருது |
| 4 | 1991 | கோபல்லபுரத்து மக்கள் புதினத்திற்கு சாகித்திய அகாதமி விருது |
| 5 | 2008 | எம்.ஏ.சிதம்பரம் விருது |
| 6 | 2016 | கனடா தமிழ் இலக்கியத் தோட்டத்தின் தமிழ் இலக்கியச் சாதனை விருது |
| 7 | 2016-17 | மனோன்மணியம் சுந்தரனார் விருது |

## இறப்பு

பாண்டிச்சேரியில் வசித்து வந்த கி.ரா தனது 98 ஆவது வயதில் 2021 ஆம் ஆண்டு மே மாதம் 17ஆம் நாள் இயற்கை எய்தினார்.

பாண்டிச்சேரி அரசால் தக்க மரியாதையுடன் தொடங்கி வைக்கப்பட்ட அவரின் ஊர்வலம் இடைசெவல் கிராமத்தில் தமிழக அரசின் மரியாதையுடன் நிறைவுற்றது.

கி.ராவின் இறப்பையடுத்து அவருக்கு சிறப்புசெய்யும் வண்ணம் தமிழ்நாடு அரசு கி.ரா பயின்ற இடைச்செவல் ஊராட்சி ஒன்றிய நடுநிலைப் பள்ளிக்கட்டடத்தைப் பழமை மாறாமல் புதுப்பித்தது. மேலும், கோவில்பட்டியில் 1 கோடியே 50 இலட்சத்து 70 ஆயிரம் ரூபாய் மதிப்பீட்டில் முழு திருவுருவச்சிலையுடன் நூலகம், நிர்வாக அலுவலகம், மின்னணு நூலகம் கண்காட்சி அறை உள்ளடக்கிய நினைவரங்கம் ஒன்றையும் அமைத்து கௌரவித்துள்ளது.

## தொகுப்புரை

கி.ராவின் வாழ்வும் பணியும் என்ற இந்த முதல் இயலின் வாயிலாக கி. ராஜநாராயணனின் தனி வாழ்வு, இலக்கிய வாழ்வு, அவர் படைத்த படைப்புகள், அவர் தொகுத்த அகராதிகள் மற்றும் நாட்டுப்புறக் கதைகள், பெற்ற விருதுகள், தமிழகம் மற்றும் புதுவை அரசுகள் அவருக்கு செய்த சிறப்புகள் ஆகியவை குறித்து விளக்கப்பட்டுள்ளன.

**சான்றெண் விளக்கம்**

1. க.பஞ்சாங்கம், இந்திய இலக்கியச் சிற்பிகள், ப.09
2. மேலது, பக்.53-54
3. மேலது, பக்.50-51
4. மேலது, ப.52
5. கி.ராஜநாராணீயம், ப.64
6. க.பஞ்சாங்கம், இந்திய இலக்கியச் சிற்பிகள், ப.23
7. கி.ராஜநாரயாணன், கி.ராஜநாராயணன் கட்டுரைகள், ப.88
8. ஆனந்தவிகடனுக்கு கி.ரா அளித்த பேட்டி, கி.ராவின் கரிசல் உலகம், ப.15
9. கி.ராஜநாராயணன், அந்தமான் நாயக்கர், ப.08
10. கி.ராவின் கரிசல் உலகம், ப.122

## இயல் - 2

# கி.ராவின் புதினங்கள் காட்டும் கம்மவார் நாயக்கர் வரலாறும் பண்பாட்டுப் பதிவுகளும்

### முன்னுரை

மக்கள் பல்வேறு காரணங்களுக்காக ஒரு நிலப்பரப்பிலிருந்து மற்றொரு நிலப்பரப்பிற்கு புலம்பெயர்ந்து செல்கின்றனர். அவ்வாறு புலம்பெயர்ந்து சென்றவர்கள் தங்களுடைய மரபுத் தொடர்ச்சியாக விளங்கக்கூடிய பண்பாடு மற்றும் கலாச்சாரங்களை பின்பற்றத் தவறுவதில்லை. இருப்பினும் தாங்கள் குடியேறிய புதிய நிலப்பரப்பிற்குத் தக்கவாறு தங்களை மாற்றிக்கொண்டு அப்பகுதியில் நிலவக்கூடிய பண்பாட்டினையும் ஏற்கவே செய்கின்றனர். இத்தகைய பண்பாட்டு கலப்புக்கு உள்ளான சமூகங்களில் ஒன்றுதான் கம்மவார் என்னும் நாயக்கர் சமூகத்தின் ஒரு பிரிவினர். இவர்கள் ஆந்திராவிலிருந்து தமிழகத்தின் திருநெல்வேலி மாவட்டத்தில் (தற்போதைய தூத்துக்குடி மாவட்டம்) உள்ள குருமலை சரிவுகளில் குடியேறியவர்களாவர். நாயக்கர் சமூகத்தின் ஓர் பிரிவினரான கம்மவார்களின் வரலாறு மற்றும் பண்பாட்டுச் செய்திகள் கி.ராவின் படைப்புகளில் பதிவுசெய்யப்பட்டிருக்கின்றன. அத்தகைய வரலாற்று மற்றும் பண்பாட்டுப் பதிவுகள் இவ்வியலில் விளக்கப்படுகின்றது.

**கம்மவார்கள்**

ஆந்திரப் பிரதேசத்திலிருந்து முஸ்லிம் ராஜாக்களுக்குப் அஞ்சி தமிழகத்திற்கு வந்த நாயக்கர் சமூகத்தின் ஒர் பிரிவினர் தான் கம்மவார்கள்.

"ஆந்திர தேசத்திலிருந்து கம்மவார்கள் மட்டும் இங்கே வரவில்லை ரெட்டியார், கம்பளத்தார், செட்டியார், பிராமணர், பொற்கொல்லர், சக்கிலியர் இப்படி எத்தனையோ.

இவர்கள் இங்கே புறப்பட்டு வந்ததற்கும் காரணங்கள் எத்தனையோ. தெலுங்கு அரசர்கள் இங்கே ஆட்சி செலுத்தியதையொட்டி வந்தவர்கள், பஞ்சம் பிழைக்க வந்தவர்கள், முஸ்லிம் ராஜாக்களுக்குப் பயந்து கொண்டுவந்தவர்கள், இப்படி இப்படி."[1] கி.ராவின் இப்பதிவிலிந்து நாயக்கர்கள் ஆந்திராவிலிருந்து முஸ்லிம் ராஜாக்களுக்கு பயந்து தமிழகம் குடிப்புகுந்தவர்கள் என்பது உறுதிப்படுத்தப்படுகின்றது.

**கம்மவார் பெயர்க் காரணம்**

காதுவளர்த்து வளையம் போன்ற 'கம்மா' எனப்படும் காதில் அணியும் ஆபரணத்தை இந்த சமூத்தைச் சார்ந்த பெண்கள் அணிந்து கொள்வதால் இப்பெயர் வந்தது என கி.ராஜாநாராயணன் மங்கத்தாயரு அம்மாள் என்ற பாத்திரம் மூலம் அறியமுடிகின்றது.

**கம்மவார் தோற்றம் பற்றிய பூர்வக்கதை**

நாகர்ஜீன மலையில் வீரம் நிறைந்த ஒரு ராட்சதப் பெண் இருந்தாள். அவளை அடக்க யாராலும் முடியவில்லை. அவளை அழகும் வீரமும் கொண்ட ஒரு பிராமணன் அடக்கி அவளுடைய மூக்கில் துறட்டியைப் போட்டு இழுத்துக் கொண்டு வந்தான்.

மூக்கில் துறட்டியைப் போட்டு அவளை இழுத்துக் கொண்டு வந்ததால் அந்தப் தொறட்டியையே அவள் ஆபரணமாக விரும்பிப் போட்டுக்கொண்டாள். ஆகவே அவர்களுடைய சந்ததிகளாகிய கம்மவார் பெண்கள் இன்றும் மூக்கில் தொறட்டி என்ற ஆபரணத்தை அணிந்து கொண்டிருக்கின்றனர் என்ற புராண ரீதியான கதையை கி.ரா. பதிவுச்செய்வதன் மூலம் அவர்களின் பூர்வக்கதை நமக்குத் தெரியவருகின்றது.

**கம்மவார் இடம்பெயரக் காரணம்**

இஸ்லாம் மதத்தைச் சார்ந்த முஸ்லிம் அரசர்களின் ஆட்சிக்கு உட்பட்ட ஆந்திரப் பகுதியில் இந்து மதத்தைச் சேர்ந்த கம்மவார் சமூகத்தினர் வாழ்ந்து வருகின்றனர். அச்சமூகத்தின் பருவமடையாத அழகிய பெண் சென்னாதேவி. அவளை அனைவரின் விருப்பத்திற்க்கு மாறாக வலுக்கட்டாயமான முறையில் திருமணம் முடிக்க ஏற்பாடு செய்கின்றான் துலுக்க ராஜா.

பலம் பொருந்திய ராஜாவை எதிர்க்க முடியாமல் சென்னாதேவியின் பெற்றோர்களும் உறவினர்களும் திருமணத்திற்கு ஒப்புக்கொண்டு முஸ்லிம் ராஜா அரண்மனைக்கு மணப்பெண்ணோடு

செல்கின்றனர். அங்கு இவர்களுக்காக ஏற்பாடு செய்யப்பட்டுக்கொண்டிருந்த உணவானது மாட்டிறைச்சி என்பதை அறிந்த உடனே, தங்களது உயிரே போனாலும் இங்கு இருக்கக்கூடாது என்று முடிவுச்செய்து, குழுவாக யாரும் அறியாவிதமாக தெற்கு நோக்கி பயணித்து வந்தனர். திரும்பி சென்றால் தங்களை முஸ்லிம் ராஜா ஊரோடு கொன்றுவிடுவான் என்றெண்ணி, தொடர்ந்து தெற்கு நோக்கியே பயணித்து, அரவதேசம் என்று அவர்கள் அழைக்கும் தமிழ் நாட்டின் கோவில்பட்டிக்கு அருகில் உள்ள குருமலையின் சரிவில் நிரந்தரமாகத் தங்கிவிட்டனர்.

**கம்மவார் நாயக்கர் இனக்குழு சமூகமாக தமிழகத்தில் வாழுதல்**

ஆந்திரதேசத்திலிருந்து தொடர்ந்து தெற்கு நோக்கி பயணித்த மக்கள், ஓர் இடத்தில் இயற்கையாக அமைந்த பள்ளம் ஒன்றில் நீர்தேங்கிருப்பதையும் அதனருகில் வேப்பம் மரம் ஒன்று இருந்ததையும் பார்க்கின்றனர். பிறகு அங்கு தங்கவும் செய்கின்றனர். அவ்வாறு அவர்கள் அங்கு தங்கும்போது அக்குழுவிலிருக்கும் முதியவளுக்கு சாமி வந்து

என் மக்களே, எங்கேயோ ஒரு தேசத்தில் பிறந்து, எங்கேயோ ஒரு தேசத்தில் வந்து வாழ வேண்டியதிருக்கிறதே என்று நீங்க நினைச்சி மனம் கலங்க வேண்டாம். எல்லாம் பூமித் தாயினுடைய ஒரே இடம்தான். அவளுடைய கையிலுள்ள ஒரு விரலிலிருந்து நீங்க இன்னொரு விரலுக்கு வந்திருக்றீக; அவ்வளவுதான். நீங்க ஒண்ணுக்கும் பயப்பட வேண்டியதில்லை. உங்களோடயே சதா நா

உங்களுக்குத் துணை இருப்பேன். என்று மூதாட்டி கூறினாள் பின் அவள் "தெற்கு திசையைக் காட்டி 'இந்தப்பக்கம் உள்ள உடங்காட்டை உங்களுடைய, பின்னால் ஏற்படப் போகும் மாடு ஆடுகளுக்கான மேய்ச்சல் தரையாக வைத்துக் கொள்ளுங்கள்.'

கிழக்குத் திசையைக் காட்டி இந்தக் 'கள்ளிக்காட்டை அழித்து உங்களுக்கு வேண்டிய நிலங்களைச் செய்து கொள்ளுங்கள். எனக்கு இதே இந்த இடத்தில் ஒரு கோயிலைக் கட்டிக் கொள்ளுங்கள்'. என்றுக் கூறி மயங்கினாள்." [2]

இந்நிகழ்விற்குப் பிறகு மக்கள் நாம் நிரந்தரமாக இருக்க வேண்டிய இடம் இதுதான் என்பதை உணர்ந்துக்கொண்டு அவ்விடத்தைத் தாம் குடியிருக்கத் தகுந்த இடமாக மாற்றத் தொடங்கினர்.

**இருப்பிடம்**

குடியிருக்க தகுந்த வடிவில் மண்ணாலான சிறு குடிசைகளை அவர்கள் முதலில் அமைத்தனர்.

" மஞ்சணத்தி, பூவரசு, வேம்பு முதலிய நீண்ட மரக்கிளைகளால் முகடுகலை பனைநார்களால் கட்டினர். சீகைப் புற்களையும் ஜம்புத்தட்டைகளையும் அறுத்துக் காயவைத்து அவைகளால் கூரை வேய்தனர்."[3] என்ற செய்தி கோபல்ல கிராமம் புதினத்தின் வழி அறியலாகின்றது.

**காட்டை நாடாக்குதல்**

மனிதச் சமுதாயம் நாகரிகவாழ்வுக்கான அறிவைப் பெற்று வாழத் தொடங்கியபோது தனக்கான உணவு உற்பத்தித் தேவைகளை நிறைவுசெய்து கொள்ளவும் இருப்பிடங்களை அமைத்துக்கொள்ளவும் வளமான காடுகளைக் கொன்று நாடாக மாற்றியது. இதனை கடியலூர் உருத்திரங்கண்ணனாரின் பட்டினப்பாலை அடிகள் சுட்டுவதைக் காணலாம்

**"காடு கொன்று நாடாக்கிக்**
**குளம் தொட்டு வளம் பெருக்கிப்**
**பிறங்கு நிலை மாடத்து உறந்தை போக்கிக்**
**கோயிலோடு குடிநிறீஇ**
**வாயிலொடு புழையமைத்து**
**ஞாயில் தொறும் புதை நிறீஇப்..."[4] ( ப.பாலை, அ.283-288)**

இச்சங்க இலக்கியப் பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளதற்கு ஏற்றவாறு பெருங்காட்டில் தங்களுக்குத் தேவையான பகுதிகளை மட்டும் பிரித்து தீவுக்காடாக்கி, அதனை தீயிட்டு எறித்து நாடாக மாற்றினர். இயற்கையாக இருந்த பள்ளம் ஒன்றை கம்மாயாக வெட்டி அகலப்படுத்தினர். அந்தக் கம்மாயின் கரையில் நாவல், வேம்பு, புளி, வாகை முதலிய மரங்களை குடும்பத்திற்கு ஒரு மரமாக வைத்து, போற்றிக் காப்பாற்றி வளர்த்தனர். குடிசைகளை அமைப்பதற்கு முன்பு தங்களுக்கான கோயில் ஒன்றையும் அமைத்துக்கொண்டனர்.

“கோயிந்தப்பா, அந்தப் பசுமாட்டோடு மகாலட்சுமியும் இந்தக் கிராமத்துக்கு அண்ணைக்கே வந்துட்டா அது வந்த வேளை ஊர் நிறைய பசுமாடுகளாப் பெருகிட்டது. கோபல்ல என்று பேர் வந்ததே இந்த கிராமத்துக்கு, அந்தப் பசுமாடுதான் காரணம்” [5] என்ற கோபல்ல கிராமம் நாவலின் பதிவிலிருந்து, நிறை சினையாக இருந்த காட்டுப்பசுவைப் பிடித்து அதனை நாட்டுப்பசுவாக பழக்கியதும், இந்தப் பசுவின் வரவால் தாங்கள் தங்கியிருந்த பகுதிக்கு கோபல்லபுரம் என்ற பெயரைச் சூட்டியதும் தெரியலாகின்றது.

“மரத்தில் கலப்பைகள்போல் செதுக்கி, மாடுகள்போல் அவர்களே இழுத்தார்கள். தங்களிடமுள்ள நவதானியங்களை கைவிதைப்பாய் விதைத்து, கருவேல்முள்ளை வெட்டிக் கவையாக்கி, காட்டுக் கொடிகளால் கட்டி இழுத்து விதைத்த விதைகளை மூடினார்கள். அப்போது அவர்களிடம் மாடுகளே கலப்பைகளோ இருக்கவில்லை”[6] இவ்வாறு புலம்பெயர்ந்து வந்த இந்த கம்மவார்கள் தமிழகத்தில் தங்களுக்கான வாழ்விடங்களை உருவாக்கிக் கொண்டனர்.

## வேடுவ வாழ்வின் உணவுகள்

நாகரிக சமூகமாக வாழ்ந்து அந்நிய ஆட்சியின் அட்டூழியத்தால் வேடுவர்களாக மாறிய கம்மவார்கள், தாங்கள் உணவுக்காக கொண்டுவந்த தானியங்களைச் சமைத்து உண்ணாமல் அதனை வேளாண்மைக்காக பயன்படுத்த பத்திரப்படுத்தி வைத்துக்கொண்டு, உணவிற்காக இயற்கையைச் சார்ந்து வாழத்தொடங்கினர்.

உடும்பு, சேடா, முள்ளெலி, முயல், முள்ளம்பன்றி, காட்டுப்பன்றி முதலிய காட்டு உயிரினங்களை வேட்டையாடியும், தேன் சேகரித்து மாமிசத் துண்டுகளை தேனில் தோய்த்தும் உண்டனர். மிச்சம் விழும் மாமிசத்தை சிறு துண்டுகளாக வெட்டி உப்புக்கண்டம் போட்டு வெயிலில் நன்றாகக் காயவைத்து, மழைக் காலத்துக்கு என்று பத்திரப் படுத்தி வைத்துக் கொண்டார்கள்.

கோரைக்கிழங்குகளையும், வளமான காட்டுக்கீரைகளையும் சமைத்து அதற்கு வெஞ்சனமாக காட்டில் கிடைத்த பறவையின் முட்டைகளையும் பொறித்து உண்டனர். மேலும், சோற்றுக் கற்றாழையை உரித்துத் தண்ணீரில் அலசி அதன் கசப்பை நீக்கியும் உண்டார்கள்.

**தனியுடைமைச் சமூகமாக மாற்றம் பெறுதல்**

ஆந்திராவிலிருந்து தமிழகத்தில் வந்து குடியேறி இனக்குழுவாக வாழ்ந்த கம்மவார்கள் முதல் வருடம் மட்டும் கம்பு, எள்ளு, பருத்தி, தினைப் பயிர் முதலியவற்றை கூட்டாக அறுவடை செய்து குடும்ப வாரியாகப் பகிர்ந்து கொண்டனர். அதன் பிறகு அவர்கள், ஒவ்வொரு குடும்பத்தின் சக்திக்கும் ஏற்ப எவ்வளவு நிலத்தை செப்பம் செய்ய முடியுமோ அவ்வளவு நிலத்தை செப்பம் செய்து பயிர் செய்ய ஆரம்பித்தார்கள். எந்தக் குடும்பத்தில் அதிக நபர்கள் இருந்தார்களோ அந்த அளவிற்கு அதிகமான நிலப்பரப்பில் பயிர் செய்து உடைமைச் சமூகமாக மாறினர்.

இவர்கள் உடைமைச்சமூகமாக மாறிய நிகழ்வை கி.ராவின் பதிவுகள் நமக்கு உணர்த்தும்

“ஒவ்வொரு குடும்பத்துக்கும் அவர்களது சக்திக்கும் ஏற்ப நிலங்களை, ஒவ்வொருவராலும் எவ்வளவுக்கு முடியுமோ அவ்வளவு நிலத்தை அவர்கள் சொந்தத்தில் செப்பம் செய்து பயிர் செய்ய ஆரம்பித்தார்கள்.

கோடை நாட்களில் வெகுதூரம் நடந்துசென்று மற்ற சமூக மக்களோடு தொடர்பு கொண்டார்கள். தங்களிடமுள்ள பொருள்களைக் கொடுத்து மாடுகள் மற்றும் கலப்பைகள் வாங்கினார்கள்.

இவர்களைப்போல தெலுங்கு நாட்டிலிருந்து வந்து ஆங்காங்கே குடியேறிய மக்களோடு தொடர்பு கொண்டார்கள். சம்மந்த வழி செய்துகெண்டார்கள். தங்களிடம் இல்லாத விவசாயத் தொழிலாளர்களான தச்சர்கள், கொல்லர்கள் முதலிய தொள்ளாளிகளைச் கூட்டிவந்து தங்கள் கிராமத்தில் குடியமர்த்தினார்கள்.

மொழிப் பிரச்சனை முதலில் அவர்களுக்குக் கொஞ்சம் சங்கடமாக இருந்தாலும் நாளாவட்டத்தில் அதெல்லாம் சரியாகி விட்டது. இவர்கள் இருதரப்பிலும் குழந்தைகள், பெண்கள் இவர்களே ஒருவர் மொழியை ஒருவர் பேசுவதற்கு சீக்கிரம் கற்றுக்கொண்டார்கள்.

வீடுகள் கட்ட ஆரம்பித்தார்கள். கிராமம் முறையாக வளர ஆரம்பிக்கவே, மழையினால் தேங்கிய தண்ணீர் காணாததால்

குடிநீர்க்கிணறுகள் தோண்டினார்கள். கால்நடைகளின் தண்ணீர் வசதிக்காக கம்மாயைத் தோண்டி அகலப்படுத்தினார்கள். கம்மாயின் கரைகளைச் சுற்றிலும் பலப்படுத்தி அதில் நீண்ட நாட்கள் நிற்கக்கூடிய மரங்களாக நட்டார்கள்.

அந்த நாட்களில் மனித பலமும் மனித எண்ணிக்கையும் அதிகமுள்ள குடும்பம் தான் பெரிய குடும்பம்; பெரிய வீடு, மனித பலம் அதிகமுள்ள குடும்பத்தால் அதிக நிலத்தை சீர்திருத்தி, அதிகக் கால்நடைகளையும் வைத்துப் பராமரிக்க முடியும். இதனால் அது அதிக வருமானமுள்ள பெரியகுடும்பமாக ஆக முடிந்தது."[7]

நிலங்களெல்லாம் தனிக்குடும்பச் சொத்தாகி, கூட்டுமனித சக்தியின் உழைப்பை நம்பி இருந்த காலத்தில் கூட்டுக் குடும்பமே பிரதானமாக இருந்தது. பின்னர் கூட்டுக்குடும்பங்கள் உடைந்துபோக ஆரம்பித்தன.

**சமயம்**

பெருமாளை முதன்மைக் கடவுளாக கொண்ட வைணவச் சமயத்தின் மீது மிகுந்த ஈடுபாடுக் கொண்டவர்களாக கம்மவார் நாயக்கர்கள் உள்ளனர் என்பதை கி.ரா தனது படைப்புகளின் பல்வேறு இடங்களில் பலவாறு சித்தரித்துள்ளார்.

கோபல்ல கிராமம் நாவலின் தொடக்கத்தில் கோட்டையார் வீட்டைச் சித்தரிக்கும் இடத்தில் இவ்வாறு சொல்கிறார்.

அதிகாலையில் "கோவிலில் சங்கும் நகராவும் முழங்கியது"[8]

“வீட்டின் தலைவாசல் நிலையில் மரத்தில் செதுக்கப்பட்ட சங்கு சக்கர நாமமும் பெரிதாகத் தெரிகிறது.

முற்றத்தைத் தாண்டி உள்ளே போனால் விசாலமான நீண்ட தாழ்வாரத் திண்ணை. அதன் இடது பக்கத்தில் ஆள் உயரத்துக்கு ஒரு பெரிய்ய ஒழுக்கரைப் பெட்டி, அதன் இரண்டு கதவுகளிலும் பித்தளையினால் செய்து பதிக்கப்பட்ட சங்கு சக்கரமும் நாமமும்.”[9]

சங்கு மற்றும் சக்கரம் ஆகிய இரண்டும் திருமாலின் கரங்களில் இருக்கும் ஆயுதங்களாகும். கி.ரா சித்தரிக்கும் நாயக்கர் இன மக்கள் தாங்கள் பயன்டுத்தக்கூடிய பொருட்களில் சங்கு, சக்கரங்களை பதித்திருப்பதன் மூலம் இவர்கள் வைணவ ஈர்ப்பு உடையவர்கள் என்பதை அறியமுடிகின்றது.

கி.ரா கோபல்ல மக்கள் நாவலில் துப்பாக்கியின் வரவு குறித்து சித்தரிக்கும் போது முதலாளி நாயக்கர் என்பவர் பற்றிய ஒரு கிளைக் கதையைக் கூறுகின்றார்.

ஆங்கிலேயர்களின் வரவால் மக்களிடம் வந்து சேர்ந்த பல கருவிகளில் துப்பாக்கியும் ஒன்று. முதலாளி நாயக்கர் என்பவர் குயில் வேட்டைக்காக ஒரு ரவைத் துப்பாக்கியை (கிட்டித்துப்பாக்கி) வாங்கிக்கொண்டு குயில் வேட்டைக்குச் சென்றவர் குயில் என்று கருதி தவறுதலாக கருடப்பட்சியை சுட்டுவிடுகிறார். தான் சுட்டது கருடப்பட்சி என்று அறிந்ததும் அவர் அடைந்த துக்கத்திற்கு அளவே இல்லை. தான் வணங்கும் மகாவிஷ்ணுவின் வாகனமான கருடப்பட்சியை அடக்கம் செய்து பால் ஊற்றினார். பலநாட்கள்

துளசிதீர்த்தம் மட்டும் அருந்திக்கொண்டு பட்டினி கிடந்து தன்னையே வருத்திக்கொண்டார். கருட தரிசனம் செய்த பிறகே ஒரு நாளைக்கு ஒரு முறை மட்டும் உண்டார். கருடப்பட்சியை காணமுடியாத நாட்களில் பட்டினி கிடந்தார். கருடப்பட்சியை அமர்திருக்கும் போது பார்த்தல் கூடாது என்று அது பறக்கும் வரை காத்துக்கிடப்பார்.

இக்கிளைக்கதையானது திருமாலின் வாகனமான கருடப்பறவை மற்றும் பெருமாளின் மீது நாயக்கரின மக்கள் கொண்ட பக்தியையும் வைணவ ஈடுப்பாட்டையும் புலப்படுத்துகின்றது.

அடிப்படையில் வேளாண்மை தொழிலையே சார்ந்து இருக்கும் கம்மவார் நாயக்கர்கள், தங்களின் கால்நடைகளின் மீது மிகுந்த பற்றும் பாசமும் கொண்டவர்கள். அவர்கள் அங்க லட்சணம் மற்றும் சுழிசுத்தத்துடன் பிறக்கும் காளைக்கன்றுகளை பெருமாளுக்கு நேர்ந்து விட்டுவிடுகின்றனர். கி.ரா. இதனை இவ்வாறு பதிவுசெய்கின்றார்

“சம்சாரி வீட்டில் நிற்கவேண்டிய காளைக்கன்று இது இல்லை. பெருமாளுக்கே உரியது என்று கோயிலுக்கு நேர்ந்துகொண்டனர்.

பெருமாளுக்கு காளை வாகனம் இல்லை; என்றாலும் அவன் பசுக்களையும், கன்றுகாலிகளையும் மேய்த்துப் பராமரித்தவன் அல்லவா

சம்சாரிகள் அவைகளை அப்படியே பார்க்கிறார்கள். இன்றும் பசுமந்தைகள் மேய்ச்சலுக்குப் போகும்போது புல்லாங் குழலோடு அவைகளின் கூடவே அவன் வருவதாக மேய்ப்பவர்கள் நம்புகிறார்கள்

புரட்டாசி மூன்றாம் சனிக்கிழமையன்று பெருமாள் கோயிலுக்குப் பொங்கல் வைத்து காரிக்கும்(பசுக்கன்று) கொஞ்சம் தந்து, ஊரோடு அவர்களும் உண்டு மகிழ்ந்து, காரியின் பின் முதுகில் சூட்டுக் கோலினால் சூலம் எழுதி அவிழ்த்து விட்டுவிடுவர்”[10]

இத்தகைய கி.ராவின் பதிவுகளிலிந்து நாயக்கர்கள் பெருமாளை முழுமுதற்கடவுகளாக கொண்ட வைணவ சமய சார்பு கொண்டவர்கள் என்பது திட்டவட்டமாக நிருபணமாகின்றது.

**திருமணமுறை**

கம்மவார் நாயக்க சமுகத்தின் வழக்கப்படி இரண்டு பெண்களைத் திருமணம் செய்யவேண்டும். அவ்வாறு இரண்டு பெண்களைத் திருமணம் செய்யாமல், ஒரு பெண்ணை மட்டும் மணந்திருக்கின்ற அபூர்வமான ஒரு சிலரை அச்சமூகத்தை சார்ந்த மற்றவர்கள் மதிப்பதில்லை. “அந்த சமூகத்தில் குறைந்தது இரண்டு தாரங்களாவது இருக்க வேண்டும். ஒரு பொண்டாட்டிதான் என்று இருப்பவனை ‘அந்த ஒத்தைப் பொண்டாட்டிக்காரனையா சொல்லுதே; சை அவன் என்ன மனுசன் ’ என்று ரொம்ப கேவலமாகப் பேசுவார்கள்!”[11] ஐந்து நாட்கள் திருமணம் நடைபெறும், மூன்று நாட்கள் ஊர்வலம் வருவார்கள். என்பதை கி.ரா. தனது கிடைநாவலில் பதிவுசெய்துள்ளதன் மூலம் நாயக்கர்களின் திருமணமுறை அறியலாகின்றது.

## திருவிழாக்கள்

கி.ராவின் படைப்புகளில்  இரண்டு விதமான திருவிழாக்கள் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

1. மாநோம்பு
2. ஊர்சாத்திரை

## மாநோம்பு

அறிவுக்கடலான கலாதேவிக்கும் அஞ்ஞான இருளனான வன்னிராஜனுக்கும் போர் நடந்தது, தோற்று விழுந்த வன்னி ராஜனை அந்த இடத்திலிருந்து பெயர்த்து அப்புறப்படுத்துவது போன்ற நிகழ்வுகளை பிரதிபலிக்கும் விதமாக இத்திருவிழா நடத்தப்படுகின்றது.

ஏட்டுப்பள்ளிக்கூடத்தில் பயிலும் மாணவர்களும் ஆசிரியரும் தான்  இவ்விழாவில் மிக முக்கிய நபர்கள்.

இவ்விழாக்காலத்தில் ஒரு வாரத்திற்கு பள்ளிக்கூடத்தில் பாடம் ஏதும் நடத்தப்படாது. பள்ளிக்கூடத்தை ஒட்டடை அடித்தல், வெள்ளையடித்தல் போன்ற  சுத்தம் செய்யும் வேலைகள் எல்லாம் அந்த ஒரு வாரத்தில்தான் நடைபெறும்.

காய்ந்த பனைமட்டைகளைக் கொண்டுவந்து தச்சாசாரியிடம் தந்து வாள் மாதிரி செதுக்கி அதற்கு வர்ணம் பூசுவார்கள். வெள்ளிக் குடத்தின் வாயைத் தேங்காயால் அடைத்து அதன் மேல் தண்ணீர்விட்டு கட்டியாக அரைத்து இளநி பருமனில் உள்ள மஞ்சளை

வைத்து சரஸ்வதி தேவியின் முகத்தைப் படைப்பார்கள், பிறகு அதே மஞ்சளை வைத்து கிரீடம், தலை, விரல், மூக்கு, காதுகள் உருவாக்குவார்கள். பூண்டின் கனமான பல்லை வைத்து சரஸ்வதியின் பல்லை உருவாக்குவர். குங்குமத்தால் சிவந்த வாய் உண்டாகும். இறுதியாக பட்டுப்பாவாடை அணிவிக்கப்பட்டு சரஸ்வதிதேவியின் உருவம் உண்டாகும்.

ஜோடிக்கப்பட்ட சிங்காதனத்தில் சரஸ்வதி தேவியின் உருவம் ஊர்வலமாகக் கொண்டுவரப்படும். ஆசிரியரும் பள்ளிப் பிள்ளைகளும் குதித்து குதித்துக் கோலாட்டம் அடித்துக்கொண்டும் வாள்களும் பட்டாக்கத்திகளும் வில்லும் ஏந்திக் கொண்டும் அந்த ஊர்வலத்தில் வருவார்கள்.

“வாங்காரப் பூஷணம் பூட்டி

திலகம் தீட்டி

மாரனைக் கண்ணாலே மருட்டி

சிங்கார மோகனப் பெண்ணாள்

வசந்தவல்லி

தெய்வரம்பை போலவே வந்தாள்...”[12]

இவ்வாறு பாடிக்கொண்டே வண்டியின் பழைய ஆரக்கால்களிலிருந்து செய்யப்பட்ட பெரிய பெரிய கோலாட்டக் குச்சிகளால் அடித்துப் பாடிக்கொண்டே ஊர்வலம் நகரும்.

வன்னி ராஜானின் அடையாளமாக வன்னி மரம் நடப்பட்டுள்ள இடத்தில் வந்து ஊர்வலம் நிற்கும். சரஸ்வதிதேவியின் சார்பில் ஆசிரியர் வன்னிமரத்தின் மீது வில்லை வளைத்து மூன்று முறை அம்பு எய்வார். அதைத் தொடர்ந்து அவருடைய மாணவர்கள் பனைமரத்து மட்டைகளில் செதுக்கிய வாள்களாலும் பட்டாக்கத்தியாலும் வன்னிமரத்தை வெட்டுவார்கள். அதைத் தெடர்ந்து வன்னிமரம் பிடுங்கப்படும்.

**ஊர்சாத்திரை**

மூன்று ஆண்டுகளுக்கு ஒரு முறை அல்லது ஐந்து ஆண்டுகளுக்கு ஒரு முறை கிராமத்தில் ஊர்சாத்திரைத் திருவிழா நடைபெறும்.

ஊரில் யார் வீட்டிலாவது அம்மை நோய் வந்திருந்தால் அந்த ஆண்டு ஊர்சாத்திரை நடைபெறாது. காரணம் அம்மை நோய்க்கு கொட்டுச்சத்தமே ஆகாது. ஊருக்குள் பெரியவர்களுக்குள் ஏதாவது மனஸ்தாபம் சண்டை என்று வந்துவிட்டாலும் ஊர்சாத்திரை நடைபெறாது. எப்படித் தள்ளிப் போனாலும் பன்னிரெண்டு வருடத்திற்கு ஒருமுறை ஊர்சாத்திரை நடைபெற்றே ஆகவேண்டும். ஊர்சாத்திரையில் முக்கிய அம்சம் மதுக்குடம் எடுப்பதாகும்.

வேளாளரிடம் சொல்லி மதுக் குடங்கள் செய்துகொண்டு வரச்சொல்லுவார்கள். அதில் கோவிலுக்கு என்று மட்டும் தனியாக மிகப்பெரிய மதுக்குடத்தைச் செய்வார்கள்.

மதுக்குடத்தில் சோளத்தை இடித்து அதோடு கம்பு, பச்சரிசி முதலிய அரிசிகளையும் இடித்து மாவாக்கி காடித் தண்ணீர் ஊற்றி முக்கால் பானைக்கு இருக்கும்படியாகச் செய்வார்கள்.

வேளாளர் கொண்டுவந்த புதிய மண்தொட்டிகளில் மண்ணையும் சேமித்த குப்பைகளையும் நிரப்பி அதில் நெருக்கமாக பருப்புவகை வித்துகளைப் போட்டுத் தண்ணீர் விட்டு சூரிய ஒளி படாமல் அரங்கு வீட்டுக்குள் வைத்து முளைப்பாரி தயார்செய்வர்.

ஊர்சாத்திரை நாள் நெருங்க நெருங்க மதுக்குடங்களிலிருந்து மது மேல் நோக்கிப் பொங்கிவந்து கொண்டிருக்கும். மக்கள் அதனை தினமும் கவனித்துக்கொண்டே வருவார்கள். விழா துவங்கும் நாளன்று மதியம் குடங்களிலுள்ள மது பொங்கி நுரைகட்டி குடத்தின் வாய் விளிம்பு வரை வந்திருக்கும்.

கோயில் மதுக்குடத்தை தூக்குபவர்கள் விரதம் இருக்கவேண்டும். மேளகாரர் கோயில் மதுக்குடத்தை சுற்றிச் சுற்றி வந்து மேளமடிப்பார்கள். பூசாரி வந்து மதுக்குடத்துக்கும் மதுக்குடத்தை தூக்குபவர்களுக்கும் அம்மன் காப்பு வைப்பார்.

கோயில் குடத்தில் மது பொங்கி வழிந்ததும் ஊர்வலமாக மதுக்குடம் எடுத்துச் செல்லப்படும். வீடுகளில் வைக்கப்பட்டிருந்த மதுக்குடங்களும் ஊர்வலத்தில் கலந்துகொள்ளும். ஊர்சுற்றி முடிந்ததும். பூசை செய்யப்பட்டு மக்களுக்கு மது விநியோகிக்கப்படும்.

**செவ்வாய்க்கிழமை விரதம்**

ஆடி, தை, மாசி மாதங்களின் செவ்வாய்க்கிழமை இரவுகளில் பெண்கள் விரதம் மேற்கொள்வார்கள். இந்த விரதத்தைப் பற்றி ஆண்கள் பெண்களிடம் என்ன, ஏது என்று கேட்கக் கூடாது என்பது வழக்கம்.

பெண்கள் செவ்வாய்க்கிழமை விரதம் இருக்கும்போது அவர்களது கணவன்கள் இரவுநேரத்தில் வீட்டில் தங்காமல் உறங்குவதற்கு மடத்திற்கோ, விரதம் நடக்காத சொந்தக்காரர்களின் வீடுகளுக்கோ சென்றுவிட வேண்டும் என்பது அச்சமூகத்தாரிடம் நிலவும் ஒருவிதி.

**பங்காருபட்சி**

பங்காருபட்சி என்பவள் கிராமம் கிராமமாக சென்று கூத்தாடும் கழைக்கூத்தாடிகளின் தலைவியாவாள்.

தொம்மரிகள் என்று அழைக்கப்பட்ட கழைக் கூத்தாடிகள் கூட்டத்துக்குத் தலைவியான பங்காருபட்சி, தனக்குக் கல்யாணம் செய்து கொள்ள விருப்பம் ஏற்படும்போது, ஒரு முகூர்த்தத்தில் தாலியை எடுத்து அவளே கழைமரத்தைத் தொட்டு தன் கழுத்தில் கட்டிக்கொள்வாள். அந்த வினாடியிலிருந்து அவள் பங்காருபட்சி என்று அழைக்கப்படுவாள். அந்தக் கூட்டத்தின் தலைவியாக தானே தன்னைப் பிரகடனப்படுத்திக்கொள்கின்ற ஒரு முறை இது. பங்காருபட்சி கழைக்கூத்தை “கி.ரா. தனது கிடை நாவலிலும் கோபல்லபுரத்து மக்கள் நாவலிலும் சித்தரிக்கிறார்”[13]

பங்காருபட்சி, அவள் இருக்கும் கூட்டத்திலுள்ள ஆண்களில் யாருக்கும் மனைவி அல்ல. அந்த பட்டத்துக்கு தங்களில் அழகான ஒரு பெண்ணை சிறு வயதிலிருந்தே தேர்ந்தெடுத்து அவள் தெரிந்துக்கொள்ள வேண்டிய சகல விளையாட்டுகளிலும் பயிற்சி கொடுப்பர். அவள் அவைகளிலெல்லாம் தேர்ந்தபிறகு 'பெரிய மனுஷி' ஆனவுடன் ஒரு நல்ல நாளில் அவள் ஏறி விளையாடும் கழை மரத்துக்கே தாலிக்கட்டிக் கொள்வாள்.

அங்கீகரிக்கப்பட்ட ஒரு உரிமையாக அவள் வந்து யாரோடும் எந்தப் பெரிய மனிதரோடும் தொட்டு விளையாடுவாள். அவளை யாரும் ஒண்ணும் சொல்ல முடியாது; சொல்லவும் கூடாது. அது அவள் இஷ்டம். அவள் யாருக்கும் கட்டுப்பட்டவள் அல்ல. கழை ஒன்றுக்குத்தான் கட்டுப்பட்டவள். அந்தக் கழை மரம்தான் அவளுடைய புருசன்.

ஒரு தேன் கூட்டில் ஒரு ராணி தேனீ தான் உண்டு, அதுபோல தொம்மரிகள் கூட்டத்திலும் அப்படியே ஒரு ராணியாக பங்காருபட்சி இருப்பாள். இன்னொரு பங்காருபட்சி அந்தக் கூட்டத்தில் உருவானால் கூட்டம் இரண்டாகப் பிரிந்துவிடும். அவளுடைய கூட்டத்தில் எந்த ஆணோடு வேண்டுமானாலும் அவள் உறவு கொண்டாடி குடும்பம் நடத்தலாம்.

கிராமத்தில் ஒரு பங்காருபட்சி எந்த ஆணின் மேல் வேட்டியையும் உரிமையோடு பறிப்பாள்; விரும்பினால் கொடுப்பாள், அது எழுதப்படாத சட்டம்! பறித்துக்கொண்டு போய்விட்ட

மேல்வேட்டியை பங்காருபட்சி இருக்கும் இடம் போய் நின்று மரியாதையாக தான் கேட்டு வாங்கவேண்டும்.

கி.ராவின் இப்பதிவுகளை மேம்போக்காக பார்த்தால் பங்காருபட்சி என்ற பெண் ஆண்களுக்கெல்லாம் தலைவியாக சுதந்திரமாக வாழக்கூடியவள் என்பதுபோலத் தோன்றும். ஆனால், கோயிலுக்கு பொட்டுக்கட்டிவிடுகின்ற பெண்ணை தெய்வத்தின் குழந்தையாகக் கருதி அவளுக்குச் சில சலுகைகளை அளித்தாலும் அவள் எவ்வாறெல்லாம் ஒடுக்கபடுவாள் என்றால் சிறிதும் விருப்பமில்லாமலே சிறுவயதிலே ஒரு பெண் அவ்வறு ஆக்கப்படுகிறாள், அவள் தேவரடியாளான பிறகு கோயில் நிர்வாகிகள், அதிகாரவர்க்கத்தினரால் பாலியல் ரீதியாக சுரண்டப்படுவாள். சாதாரண பெண்ணுக்கான அனைத்து உரிமைகளும் பறிக்கப்பட்ட ஒரு உணர்வுகளற்ற உடலாக ஆக்கப்படுவாள்.

ஒரு தேவரடியாள் எவ்வாறெல்லாம் ஒடுக்கப்படுவாளோ, சுரண்டப்படுவாளோ அதற்கு சற்றும் குறைபடாமல் பங்காருபட்சியும் சுரண்டப்படுவாள் என்பதை கி.ராவின் பதிவுகளுக்குப் பின்னால் இருக்கக்கூடிய உண்மையை ஆராய்ந்து பார்ப்பதால் அறியமுடிகின்றது.

### நீதிவழங்கும் முறை

தங்களுக்கென எந்த அரசாங்கமும் இல்லாத காலகட்டத்தில் கோபல்லபுரத்து மக்கள் எவ்வாறு நீதி வழங்கினர் என்பதை கி.ரா பதிவுசெய்துள்ளார்.

கிராமத்தின் அதிக உடைமைக்காரர்கள் யாரோ அவர்களே பஞ்சாயத்து தலைவராக இருந்து நீதிவழங்குபவராக இருந்துள்ளதை நாவலின் வழி அறியமுடிகின்றது. அவர்கள் வழங்கிய நீதியானது கொலைக்குக் கொலையாக மரணத்திற்குத் தீர்வு மரணமே என்றவாறு உள்ளது.

கம்மாளச்சி பெண்ணை காதணிக்காக கொலைச் செய்த கள்வனை கோபல்லபுரத்தார் எப்படித் தண்டிக்கிறார்கள் என்றால்

“முதலில் அவனை மாறுகால் மாறுகை வாங்குவது என்று தீர்மானித்து பின்பு அதை மாற்றி, உயிரோடு கழுவில் ஏற்றுவது என்று தீர்மானித்தது”[14]

## கழுவேற்றும் முறை

கழுவேற்றுவதில் பல முறைகள் உண்டு. உடனே கொல்லுகிற முறை, பல நாள் கழித்து வேதனையால் துடித்துச் சாகும்முறை. உடம்பில் எந்த இடத்தில் குத்தி எந்த இடத்தில் வெளிவரவேண்டும் என்கிற முறைகளெல்லாம் உண்டு.

கழுவில் ஏற்றப்படுபவனின் கைகளைப் பின்கட்டாகவும், கால்களை பின் பக்கம் மடித்துக்கட்டி அவனைத் தூக்கிக் கழுமரத்தின் நுனியில் உட்கார வைத்து அழுத்துவார்கள். கழுவின் நுனி ஊசி அவனுடைய அபானத்துக்குள் புகுந்து பின் கழுத்தின் பிடரி வழியாக வெளியே வரும். அந்த வினாடியில் அவனது உடம்பு நடுங்கித் துடித்து மலமும் இரத்தமும் அபானத்தின் வழியாய்க் கசியும். கண்டத்திலிருந்து ஒரு பயங்கர ஓலம் வெளிவரும்.

அவன் இறந்த பிறகு அவனை கழுமரத்திலிருந்து எடுத்து புதைப்பர். மக்கள் அவனை வழிபடவும், அவனது பெயரான கழுவன் என்பதை தங்களது குழந்தைகளுக்கு சூட்டவும் செய்வார்கள்.

இச்செய்திகள் அனைத்தும் அம்மக்களின் நீதிமுறைகளைப் புலப்படுத்தும் விதமாக கிராவின் கோபல்லகிராமம் நாவலின் வாயிலாக வெளிப்படுகின்றது.

**குறிகேட்டு நீதிவழங்கும் முறை**

சில குற்றங்களை செய்தவர் யார் என அறியமுடியாத போது குறிகேட்டு வந்து குறியில் யார் குற்றவாளி என தெரியவருகிறதோ அவரை விசாரிக்காமல் தண்டிக்கும் வழக்கமும் இருந்திருக்கின்றது என்பது “ஊர்க்கூட்டம் ஒரு முடிவை எடுத்தது, அதன்படி, இந்த அழிம்பைச் செய்தது யார் என்று தெரிந்துகொள்ள குறிகேட்டு வருவது...”[15] என்ற கிடை நாவலின் பதிவின் மூலம் அறியமுடிகின்றது.

**நாட்டுவைத்திய முறைகள்**

ஒவ்வொரு கிராமச் சமூகத்தினரிடமும் நாட்டுவைத்திய மருத்துவம் சார்ந்த புரிதல் இருக்கிறன. அந்த வகையில் கம்மவார் நாயக்க சமூகத்தினர் அறிந்திருக்கின்ற கால்நடைகள் சார்ந்த நாட்டுவைத்திய முறைகள் பற்றிய குறிப்புகள் கி.ராவின் நாவல்களில் கிடைக்கின்றன.

ஆட்டுப்பால் சார்ந்த மருத்துவமுறைகளை கிடை நாவலின் மூலம் அறியலாம். “வயிற்றுக் கோளாறு உள்ள குழந்தைகளுக்கு,

வெள்ளாடுகள் வயிற்றினுள்ளிருந்து இழுத்து அசைபோடும் உதவியை எடுத்து கறந்த பாலுடன் உடனே கலந்து, சங்கால் குழந்தைகளுக்குப் புகட்டிக்கொண்டிருந்தார்கள். கண்வலிக்காரர்கள், ஆட்டுக்காரர்களின் ஒத்தாசையுடன் வெள்ளாட்டம் பாலை, காம்பைப் பிடித்துத் தங்களின் நோயுடைய கண்களில் பீய்ச்சிக்கொண்டிருந்தார்கள்."[16] கிடைநாவலின் இந்தப் பகுதியினை நாம் பார்க்கும் போது, நமக்கு ஆட்டுப்பால் சார்ந்த மருத்துவ குணங்களைப் பற்றி அறிந்துக்கொள்ளமுடிகின்றது.

**நாட்டுவைத்தியமும் நம்பிக்கையும்**

கால்நடைகளுக்கு கண்திருஷ்டி ஏற்பட்டால் பச்சிலை பூசப்படுவது என்பது கிராமங்களில் ஒரு நாட்டுவைத்திய முறை என்பது கோபல்லகிராமம் புதினத்தின் மூலம் தெரியவருகின்றது. அப்படி பச்சிலைபூசும்போது கடைப்பிடிக்கவேண்டிய கட்டுப்பாடுகளும் சில இருகின்றன. ஆங்கில மருத்துவமுறைகளைப் போல நாட்டுமருத்துவ முறைகளை மக்கள் பயன்படுத்துவதில்லை. அதற்காக நாள், நேரம், திசை, நிமித்தம் போன்ற நம்பிக்கைகளையும் கடைப்பிடிக்கின்றனர். இத்தகைய நாட்டுமருத்துவ முறைகளை பயன்படுத்தும்போது கடைப்பிடிக்கப்படும் நெறிமுறைகளை கி.ரா கோபல்லகிராமம் நாவலில் குறிப்பிடுவதிலிருந்து அறியலாம்.

"வாகடம் புல்லையா, கால்நடை சம்மந்தப்பட்ட சகல நோய்களுக்கும் அவர்தான் வைத்தியர். கண்திருஷ்டிகளுக்குப் பச்சிலை பூசுவார்.

பச்சிலை பூசுகிற அன்று யாரோடும் பேசமாட்டார்; பேசினால் பச்சிலையின் மகத்துவம் போய்விடுமாம்!

முதல் நாளே அவரிடம் பச்சிலை பூசவேண்டியதிருந்தால் சொல்லிவிடவேண்டும். அதிகாலையில் எழுந்து விடுவிடு என்று நடந்துபோவார். முகத்தை ஒருமாதிரி உம்மென்று வைத்துக் கொண்டு உதடுகள் வேகமாக எதையோ முணுமுணுக்கிற மாதிரி இருக்கும்.

பசுமாட்டின் நெற்றியில், கசக்கிய பச்சிலையைப் பிழிந்து, வடியும் அந்தச் சாற்றை முதுகு நோக்கித் தடவி விட்டுக்கொண்டே வால்வழியாக கீழ்நோக்கி இழுத்துவிடுவார். வாலிலிருந்து கைதழுவியதும் ஒரு சொடக்குப் போடுவார். அப்படி மூணுதரம். பிறகுதான் பேசுவார்."[17] இவ்வாறு நம்பிக்கை அடிப்படையான மருத்துவத்தைக் கோபல்ல கிராமம் நாவல் வழி அறியமுடிகின்றது.

**பச்சிலை வைத்தியம்**

கண்திருஷ்டி, காம்பு வீங்கிய மடி, இரத்தம் கசியும் காம்பு, சரியாக மேயாமலும் தண்ணீர் குடிக்காமலும் இருக்கும் மாடுகளுக்கு சிறந்த மருந்தாக அமையக்கூடியது என்று புதினத்தின் வழி அறியமுடிகின்றது.

**தழைதல்**

கன்றுக்குட்டி இறந்து போன பசு மாட்டோடு, பசுமாடு இறந்துபோன கன்றுக்குட்டியை சேர்த்து வைப்பதற்கு தழைதல் என்று பெயர்.

கன்று இறந்த மாட்டிற்கு செயற்கையாக பிரசவ வலியை ஏற்படுத்தி பசுமாடு இறந்த கன்றுகுட்டியை ஈன்றதாக நம்பவைத்து அக்கன்றுக்குட்டியினை பராமரிக்க வைக்கும் முறை.

**இறப்புச் சடங்கு**

கம்மவார் நாயக்க சமுக மக்களின் இறப்புச் சடங்குகள் குறித்த முக்கிய பதிவுகளை கி.ரா பதிவுசெய்துள்ளார்.

**அடைப்பு**

மூத்தவர்கள் இறந்தால், அந்த வீட்டில் அவர்கள் ஆவிபிரிந்த இடத்தில் ஒரு மண்பானை நிறையத் தண்ணீர், எண்ணெய் ஊற்றி திரிபோட்டுவைத்த அகல்விளக்கு வைத்து, ஆறுமுழநீளம் மூன்றுமுழ அகலம் மூன்றுமுழ உயரம் மண்ணினால் மூடி சிறிது காலம் வைத்து பிறகு ஒரு குறிப்பிட்ட நாளில் அதைத் திறந்து பார்ப்பார்கள்.

அடைப்பைத் திறந்து பார்க்கும்போது குடத்திலுள்ள குளிர்ந்தநீர் வற்றியிருந்தால் அந்த ஆத்மாவின் தாகம் அடங்கியதாக நினைப்பார்கள். நிறைகுடமாகவே இருந்தால், மறைந்த ஆத்மா நிறைவுடனேயே பிரிந்திருக்கிறது என்று கொள்வார்கள்.

இறந்தவர்களின் நேரத்தைப் பொறுத்து மூன்று மாத அடைப்பு, ஆறுமாத அடைப்பு, இருபது நாள், அறுபது நாள் அடைப்பு என்ற வகைகள் உண்டு. (கி.ரா., கிடை,99-100.)

**இறந்தோர் உறவினர்கள்**

இறந்து போனவர்களின் நெருங்கிய உறவினர்களை கொஞ்சதூரம் நடத்திக்கொண்டுபோய் நீத்துப் பாகம் குடிக்கச்சொல்லி திரும்பக் கூட்டிக்கொண்டு வருவது நாயக்கர் இன மக்களின் வழக்கம் என்பது கி.ரா. தனது நாவலின் வழி வெளிப்படுத்துகின்றார்.

**கர்ப்பிணி இறப்புச் சடங்கு**

கர்ப்பிணிப்பெண் இறந்துவிட்டால் அவளின் இறுதிச்சடங்கு எப்படி நடைபெறும் என்பதை கி.ராஜநாரயணன் தனது கோபல்ல கிராமம் என்ற புதினத்தில் தெளிவாக விளக்கியுள்ளார்.

“தன்சாவு இல்லாத கர்ப்பிணிகளை அடக்கம் செய்வதற்கு முன்னால், வயிற்றில் குழந்தையோடு புதைக்கமாட்டார்கள். வயிற்றைக் கீறிக் குழந்தையை எடுத்து பக்கத்தில் வைத்துதான் புதைப்பார்கள்”[18]

வயிற்றிலிருந்து குழந்தையை எடுக்காமல் புதைத்தால் சுமைத்தாங்கிக்கல் வைக்கவேண்டும் என்ற வழக்கமும் இச்சமூகத்தாரிடம் இருப்பதை கி.ராவின் படைப்புகள் வாயிலாக அறியமுடிகின்றது.

**உடன்கட்டை ஏறும் வழக்கம்**

1829 ஆம் ஆண்டு சதி என்னும் உடன்கட்டை ஏறும் வழக்கம் அன்றைய இந்திய வைஸ்ராயக இருந்த வில்லியம் பெண்டிங் பிரபுவால் தடைசெய்யப்பட்டது. தடைசெய்யப்படுவதற்கு முன்பு

”கம்மவார் நாயக்க சமூகத்தில் நிலவிய உடன்கட்டை ஏறும் வழக்கத்தை கி.ரா. தனது கோபல்லபுரத்து மக்கள் என்ற புதினத்தில் விரிவாக சுட்டிக்காட்டியுள்ளார்.”[19]

## உடன்கட்டை ஏறுவதற்கான விதிமுறைகள்

கர்ப்பவதிகள், தாய்ப்பாலூட்டி பாதுகாக்கும் நிலையுள்ள தாய்மார்கள், பூப்படையாத பெண்கள், கணவன் உடலைச் சிதையேற்றும் நாளில் வீட்டுக்குத் தூரமான பெண்கள் ஆகியோர் விரும்பினாலும் உடன்கட்டை ஏற அனுமதிக்கிடையாது.

## உடன்கட்டை ஏறுவதற்கான அமைப்பு

உடன்கட்டை ஏறுதலுக்கு மூட்டம் கிடையாது. பன்னிரண்டு அடிநீள அகலத்துக்கு, சச்சதுரமாக முழங்கால் உயரத்துக்குக் காய்ந்த விறகுகளைச் சேகரித்துக் கொண்டு வந்து பரப்புவார்கள். குடம் குடமாக எண்ணெய்யை அவ்விறகுகளின் மீது ஊற்றுவார்கள். கட்டையடுக்கைச் சுற்றிலும் தீ நாக்குக்கு எட்டாத தூரத்தில் சுற்றிலும் கம்புகளை நட்டு, வடக்குப் பக்கம் மட்டும் ஒரு வாசல் விட்டு, சுற்றிலும் மாத்துத் துணிகளால் மறைப்பார்கள். கட்டை அடுக்கின் நடு மையத்தில் கணவனின் உடலை வைப்பார்கள்.

## உடன்கட்டை ஏறும் பெண்

மஞ்சளில் நனைத்த ஈரப்புடவை அணிந்துக்கொண்டு, கூந்தலெல்லாம் மஞ்சள் நீர் சொட்டுமாறு நனைக்கப்பட்டு, செவ்வரளி மாலையை கழுத்தில் போட்டுக்கொண்டு தனது கணவனின் உடல்

வைக்கப்பட்டுள்ள இடத்தை நோக்கி சுற்றத்தார் புடைசூழ வீட்டை விட்டுப் புறப்படுவாள்.

அவள் புறப்படும்போது பெண்கள் குலவையிடுவார்கள். செல்லும் வழியில் உள்ள ஒவ்வொரு வீட்டின் முன்னாலும் அவளை நிறுத்தி சுமங்கலிகள் அவளுடைய பாதங்களை மஞ்சள் நீரால் கழுவி, தங்கள் கூந்தலினால் அவள் பாதங்களைத் துடைப்பர்.

சேகண்டியும் தப்பும் அடிப்பவர்கள் ஸ்ரீகோவிந்தனின் திருநாமத்தைப் பாடி, பலமாகத்தட்டி ஒலி எழுப்பிக்கொண்டே முன்னால் வருவார்கள்.

ஒரு குறிப்பிட்ட இடம் வந்ததும் குழந்தைகள், கர்ப்பிணிகள், நோயாளிகள், பெண்கள் என அனைவரையும் நிறுத்தி விட்டு இரண்டு பெண்களை மட்டும் உடன் கட்டை ஏறும் பெண்ணுடன் அனுமதிப்பர்.

கணவனின் உடலைக் கண்டதும் அப்பெண் மறைப்பைச் சுற்றி வந்து வாசலுக்கு நேராக வந்து ஒரே ஓட்டமாக கைகளை அகலித்துக் கொண்டு ஒரு தீப்பறவை பறப்பதுபோலப் பாய்ந்து சென்று தன் துணைவனைத் தழுவிக்கொள்வாள். அப்போது சேகண்டிகளின் கணகணப்பும் தப்புவாத்தியங்களின் உச்ச ஒலியும், குலவை ஒலியும் ஒலிக்கும்.

## தொகுப்புரை

கி.ராவின் புதினங்கள் காட்டும் கம்மவார் நாயக்கர் வரலாறும் பண்பாட்டுப் பதிவுகளும் என்ற தலைப்பில் அமைந்த இந்த இரண்டாவது இயலில் கம்மவார் யார்? அவர்கள் எங்கிருந்து வந்தனர், ஏன் தமிழகத்திற்கு வந்தனர் என்பதும், அவர்கள் தமிழகத்தில் எவ்வாறு தங்களுக்கான இடத்தை தேர்வுசெய்துக்கொண்டு, இனக்குழுவாக வாழத்தொடங்கி உடைமைச்சமூகமாக மாறினர் என்ற வரலாற்றை இவ்வியலின் மூலம் அறியமுடிகின்றது.

தமிழகத்தில் நிரந்தரமாக குடியேறிய ஆந்திராவிலிருந்து வந்த கம்மவார் நாயக்கரின் திருமணமுறை, இறப்பு சடங்கு, உடன்கட்டை ஏறும் முறை, நீதிவழங்கல், திருவிழா, மருத்துவம் மற்றும் சமயம் குறித்த பண்பாட்டுப் பதிவுகள் குறித்து விரிவாக கி.ராவின் புதினங்களின் வழி  இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளது.

**சான்றெண்விளக்கம்**

1. கி.ராஜநாராயாணன், கோபல்ல கிராமம், ப.39
2. மேலது, ப.92
3. மேலது, ப.91
4. ரா.இராகவையங்கார், பட்டினப்பாலை ஆராய்ச்சியும் உரையும், ப.16
5. கி.ராஜநாராயணன், கோபல்ல கிராமம், ப.105
6. மேலது, ப.107
7. மேலது, பக்.108-109
8. மேலது, ப.15
9. மேலது, ப.17
10. மேலது, பக். 41-42
11. மேலது, ப.118
12. கி.ராஜநாராயணன், கோபல்லபுரத்து மக்கள், ப.18
13. கி.ராஜநாராயணன், கோபல்லபுரத்து மக்கள், பக். 170-171 மற்றும் கி.ராஜநாராயணன், கிடை, பக். 87-89
14. கி.ராஜநாராயாணன், கோபல்ல கிராமம், ப.141
15. கி.ராஜநாராயணன், கிடை, ப.45
16. கி.ராஜநாராயணன், கிடை, ப.12
17. கி.ராஜநாராயாணன், கோபல்ல கிராமம், ப.122
18. மேலது, ப.141
19. கி.ராஜநாராயணன், கோபல்லபுரத்து மக்கள், பக்.25-27

# இயல் - 3

# கி.ராவின் புதினங்கள் காட்டும் வாய்மொழிப் பண்பாட்டுப் பதிவுகள்

## முன்னுரை

நாட்டுப்புற மக்களின் வாய்மொழிப் பாடல்கள், கதைகள், சொலவடைகள் முதலியன அம்மக்களின் பண்பாடு, பழக்க வழக்கங்கள், பழமையான எண்ணங்கள் ஆகியவற்றை வெளிப்படையாகக் காட்டும் கண்ணாடியாகத் திகழ்பவை. கோபல்லபுர நாயக்கர் சமுகத்தைப் பின்னணியாகக் கொண்ட கி.ராவின் புதினங்களில் காணப்படுகின்ற இத்தகைய வாய்மொழிப் பதிவுகளை ஆராய்வதாக இவ்வியல் அமைகின்றது.

## வாய்மொழிப் பாடல்கள்

“மண்ணின் மைந்தர்கள் தமது மனக்கருவறையில் கருக்கொண்டு உருப்பெற்று உலா வரும் உள்ளத்தின் உண்மையான வெளிப்பாடுகளே”[1] வாய்மொழிப் பாடல்கள். மனிதனின் பிறப்பு முதல் இறப்பு வரையுள்ள நிகழ்வுகள் வாய்மொழிப் பாடலின் பொருளாக இருப்பதால் அவை, நாட்டு மக்களின் நாகரிகத்தை, பண்பாட்டை, பழக்க வழக்கங்களை, வரலாற்றைப் படம் படித்துக் காட்டுபவையாகத் திகழ்கின்றன.

**கும்மிப் பாடல்**

மாரியம்மன் கோவிலில் மாவிளக்கு ஏற்றிவைத்து அந்த மாவிளக்குகளைச் சுற்றிவந்து பாடுகின்ற கும்மிப்பாடல் ஒன்றை கி.ரா தனது கோபல்ல கிராமம் புதினத்தில் எடுத்துக்காட்டியுள்ளார்.

**"மாரியம்மேங் கோயிலிலே**
**மாவிளக்கு நூறு, மஞ்சப் பிள்ளைய நூறு**
**தரம்பாத்துக் கும்மியடிக்கிற**
**தண்டுப் பெண்டுக நூறு,**
**தண்டுப்பெண்டுக நூறு.**

**மாரி பிறந்தது மாநாடு - மாரி**
**மக்க பிறந்தது காஞ்சி வனம்**
**காஞ்சி வனத்தில் பிறந்தவரை**
**கண்ணோட்டம் பாரம்மா முத்துமாரி.**

**ஆத்து மணலிலே சோறாக்கி**
**ஆவரங்காயை கறி சமைச்சி**
**மின்னட்டம் பூச்சியை விளக்கேத்தி**
**வேடிக்கை பாரம்மா முத்துமாரி.**

**பாவை படந்ததைப் பாத்தியளா! - பாவை**
**பத்திப் படந்ததைக் கேட்டியளா!**
**அத்தனை பேருக பத்தினிப் பொண்ணுக**
**பாடிக் கும்மியடியுங்கடி.**

சுரை படந்ததைப் பாத்தியளா - சுரை
சுத்திப் படந்ததைக் கேட்டீயளா!
அத்தனை பேருக பத்தினிப் பொண்ணுக
பாடிக் கும்மியடியுங்கடி.

கோவை படந்ததைப் பாத்தியளா - கோவை
குத்திப் படந்ததைக் கேட்டீயளா!
கோவைக்குள் இருக்கும் குத்திர காளிக்கு
கொத்துச் சரப்பளி மின்னாலே.

அஞ்சி களஞ்சிக்கு மிஞ்சிகட்டி
ஆயிரம் களஞ்சிக்கு அரும்புகட்டி
காலிலே போட்டாக் கலகலக்கும்
கன்னி கழியாத பத்ரகாளி.

ஆலம் இலைபோல் அடிவயிறு
அசந்த நெத்தியில் புருவக்கட்டு
சோலைக்கிளிபோல எம் பிறவிக்கு
சொந்தக்கிராமம் கோபல்லம்.

அம்மா பிறந்தது அய்யோத்தி - அம்மா
சடை பிறந்தது சதுரகிரி
வேம்பு பிறந்தது வேனகிரி - நாங்க
விளையாட வந்தது கோபல்லம்.

**செங்கல் அறுத்த கிடங்குக்குள்ளே நாங்க**
**சீரகச் சம்பா விளையவச்சோம் - இப்பெ**
**பச்சைக்கிளி வந்து கெச்சட்டம் போடுது**
**பறந்தடிங்கடிதோழிப் பொண்ணே."[2]**

இப்பாடலின் மூலம் கோபல்லபுரத்தில் இருக்கும் மக்கள் மாரியம்மனுக்கு மாவிளக்கு படைத்து எப்படியெல்லாம் வழிபட்டனர் என்பது தெரியவருகின்றது. மேலும், இந்தப் பாடல் கோபல்லபுர மக்களால் பாடப்பட்டது அல்ல என்பதும் இப்பாடலின்

**செங்கல் அறுத்த கிடங்குக்குள்ளே நாங்க**
**சீரகச் சம்பா விளையவச்சோம்**

என்ற வரிகளின் மூலம் தெரியவருகின்றது. கோபல்லபுர கரிசல்காட்டில் நெல் விளையாது. அக்காடு கம்பு மட்டும் விளையக்கூடிய மானாவாரி பூமி என்பதை "கோவைபடர்ந்திருந்த காட்டிலே இப்பொழுது பாவையும் சுரையும் பற்றிப் படந்து மக்களுக்குப் பலன் தருகிறது. ஆனால், இன்னும் இந்த கோபல்ல கிராமத்தில் நெல் விளையவில்லை."[3] என்ற வரிகளிலிருந்து அறியலாம். வாய்மொழிப் பாடல்கள் அவை பிறந்த இடத்திலேயே தங்கிவிடுவதில்லை. அவை காற்றிலே மிதக்கும் பாடல்கள், திணை விட்டு திணை பரவக்கூடியவை. வாய்மொழிப் பாடல்களுக்கு ஆசிரியர்கள் மக்கள்தான், அவற்றை வாங்கி பாடுபவர்கள் தங்கள் கருத்துக்களையும் சேர்த்துவிடுகின்றனர்.

கோபல்லபுரத்து மக்கள் இந்தப் பாடலை தோற்றுவிக்கவில்லை என்றாலும் அவர்களிடத்தில் மாரியம்மன்

மாவிளக்கு வாழிபாடு இருந்துள்ளது என்பதை மறுத்துவிட முடியாது. வாய்மொழிப் பாடலைப் பாடுபவர்கள் தங்களுக்குத் தொடர்பில்லாததைப் பாடுவது கிடையாது. உதாரணமாக நாற்று நடுபவர்கள் நடவுப் பாட்டையும், ஏற்றம் இறைப்பவர்கள் ஏற்றப் பாட்டையும் பாடுவார்கள். அது போல மாரியம்மன் வழிபாடு உள்ளவர்கள்தான் இந்தப் பாடலைப் பாடுவார்கள்.

**மாநோம்பு பாடல்**

கலாதேவியான சரஸ்வதி வன்னிராஜானைத் தோற்கடித்ததை நினைவுகூறும் வகையில் கொண்டாடப்படும் மாநோம்புத் திருவிழாவில் பாடப்படும் பாடல் இது.

**"வங்காரப் பூஷணம் பூட்டி**

**திலகம் தீட்டி**

**மாரனைக் கண்ணாலே மருட்டி**

**சிங்கார மோகனப் பெண்ணாள்**

**வசந்தவல்லி**

**தெய்வரம்பை போலவே வந்தாள்..."**[4]

இவ்வாறு பாடிக்கொண்டே வண்டியின் பழைய ஆரங்கால்களிலிருந்து செய்யப்பட்ட பெரிய பெரிய கோலாட்டக் குச்சிகளை அடித்துப் பாடிக்கொண்டே ஊர்வலமாகச் சரஸ்வதியின் உருவத்தைக் கொண்டு வருவார்கள் என்பது கோபல்லபுர மக்கள் புதினத்தின் வாயிலாக அறியமுடிகின்றது.

**ஏட்டுப் பள்ளிப் பாடல்**

ஆங்கிலேயர்கள் தமிழ்நாட்டுக்கு வந்து ஆங்கிலமுறைக் கல்வியை அறிமுகம் செய்ததற்கு முன்பு நிலவிய கல்வி முறைதான் ஏட்டுப் பள்ளிக்கூடமுறை. இங்கு ஒரே ஒர் ஆசிரியர் மட்டும்தான் இருப்பார். ஊரின் கல்வி கற்க உரிமையுடைய உயர்சாதிப் பிள்ளைகள் இந்தப் பள்ளிக்கூடத்தில் கல்விக் கற்பர்.

அவர்கள் உணவு இடைவேளைக்கு செல்ல வேண்டும் என்றால், கீழ்க்கண்ட பாடலைப் பாடி அனுமதிப் பெற வேண்டும்.

**“சட்டப்படியே தானெழுதி**

**சரியாய்லெக்கம் தொகை ஏத்தி**

**இட்ட கணக்கும் வாசகமும்**

**எழுதினபடியே தீர்ந்து கொண்டோம்**

**பட்டப்பகலில் அடிதிரும்ப**

**பசிபொறுக்கக் கூடுதில்லை**

**திட்டமுடனே அனுப்புங்கய்யா**

**திருவடீ சரணம் தானே”5**

அவர்கள் மாலையில் வீடு திரும்ப வேண்டுமெனில் கீழ்க்கண்ட இப்பாடலைப் பாடி ஆசிரியரிடம் அனுமதிக் கேட்க வேண்டும்.

**“அந்திக்குப் போறோம் நாங்கள்**

**அகந்தனில் விளையாடாமல்**

**சுந்தரி விளக்கு முன்னே**

**சுவடிகள் அவிழ்த்துப் பார்த்து**

**கந்தனார் சேவல் கூவ**

**காலமெ எழுந்து வாரோம்**

**சிந்தை கூர்ந் (து) தனுப்புங் கய்யா**

**திருவடி சரணம் தானே.”**[6]

இவ்விருப் பாடல்களும் வாய்மொழிப் பாடல்களாகவே இருந்திருக்கின்றன. ஏட்டுப் பள்ளிக்கூடம் இருந்த காலகட்டம் தாளைப் பயன்படுத்தாத காலம். இப்பாடலின் மூலம் அக்காலத்தில் மாணவர்களுக்கு ஆசிரியர்களின் மீது பயபக்தி இருந்ததை அறிந்துக் கொள்ள முடிகின்றது.

**பருத்திப் பாடல்**

அந்தமான் நாயக்கர் புதினத்தில் பதிவுசெய்யப்பட்டுள்ள, பருத்திக்காட்டில் விளைந்திருக்கும் பருத்தியை எடுக்கும்போது பாடப்படுகின்ற கீழ்க்காணப்பெறும் பாடல்

**“மஞ்சப் பூசி மகி(ழ்)ந்திருந்தேம்**

**மாட்டேம் ன்னீரெ - நா**

**மஞ்சப் பூசி மகி(ழ்)ந்திருந்தேம் - அப்பொ**

**மாட்டேம் ன்னீரெ**

**இப்பொ**

**புள்ளெப் பெத்து பொளந்திருக்கேம்**

**புடுங்க வந்தீரொ - இப்பொப்**

**புடுங்க வந்தீரோ”[7]**

பருத்திக்காய் பச்சையாக விளைந்திருக்கும்போது அதை யாரும் கண்டுகொள்ளவில்லை. பிறகு அது பெரியதாகி மஞ்சளாக இருக்கும்போதும் அதை யாரும் கவனிக்கவில்லை. வெயிலில் வெடித்து பிளந்து பஞ்சை வெளியே பிள்ளை பெற்றதுபோல தள்ளிய பிறகு பல்லைக் காட்டிக்கொண்டு பருத்தியை மட்டும் பிடுங்கி எடுக்க வந்ததால் அதுக்கு எரிச்சலும் கோபமும் வருவதாக பாடல் இருக்கின்றது.

**வெள்ளையர் மீது பாடப்பட்ட ஏசல் பாடல்கள்**

கோபல்லபுரத்து மக்கள் ஆங்கிலேயர்களால் நன்மை ஏதும் அடையாததாலும், ஏமாற்றப்பட்டதாலும் அவர்கள் மீது பல ஏசல் பாடல்களை இயற்றிப் பாடினர். கி.ராவின் புதினங்களில் உள்ள இத்தகைய ஏசல் பாடல்களைக் காணும் பேது ஆங்கிலேயர்களின் மீது அவர்கள் கொண்டிருந்த கோபத்தையும் எதிர்ப்புணர்வையும் அறியமுடிகின்றது.

கி.ராவின் புதினத்திலிருகின்ற இத்தகைய ஏசல் பாடல்கள் இங்கு தொகுத்து அளிக்கப்படுகின்றன.

**“ஐசக்கை ஐ**

**அரைப்படி நெய்**

**வெள்ளைக்காரன் தொப்பியிலே**

**விளக்குப் பொருத்தி வை**

**வாராண்டா வாராண்டா**

**வெள்ளைக்காரன்**

**வரட்டும் தாயோளி**

**தொப்பிக்காரன்”**[8]

**“வாராண்டாவாராண்டா வெள்ளக்காரன்**

**வரட்டும்தாயோளி தொப்பிக்காரன்”**[9]

மேற்கண்ட இந்த இரண்டு வாய்மொழிப் பாடல்கள் மூலம் கோபல்லபுர மக்களுக்கு ஆங்கிலேயர்கள் மீது இருந்த கோபத்தையும் எதிர்ப்புணர்வையும் உணரமுடிகின்றது.

**“ஊரான் ஊரான் தோட்டத்திலே**

**ஒருத்தன் போட்டானாம் வெள்ளரிக்காய் அத**

**காயிதம் போட்டானாம் வெள்ளைக்காரன்”**[10]

இந்தப் பாடல் மூலம் ஆங்கிலேயர்களின், அன்றைய வேளாண் ஒடுக்குமுறையை அறியமுடிகின்றது.

**“வெள்ளைக்காரன்பணம் வெள்ளிப்பணம்**

**வேடிக்கை பண்ணுது சின்னப் பணம்**

**வெள்ளிப் பணத்துக்கோ ஆசைப்பட்டு**

**வேடங்குலைந்தாளே வீராயி…”**[11]

மேற்கண்ட இந்த நாட்டுப்புறப்பாடல் வெள்ளையர்கள் அறிமுகம் செய்த அன்றைய அதிகாரப்பூர்வமான பணத்தைச் சம்பாதிக்க ஆசைப்பட்டு வறுமையடைந்த பெண்ணின் நிலையை விளக்குவதாக இருக்கின்றது. இந்தப் பாடல் அன்றைக்கு புழக்கத்திலிருந்த பணத்தில் வெள்ளி நாணயமும் ஒன்று என்பதைக் காட்டுவதாக உள்ளது.

**சுதந்திரப் போராட்டப் பாடல்**

சுதந்திரப் போரட்டக் காலத்தில் காந்தியின் கொள்கைகளை விளக்குகின்ற பாடல்கள் பாடப்பட்டுள்ளன,

**"கதர்க்கப்பல் கொடி தோணுதே…**

**கரம்சந்த்ர மோகனதாஸ்**

**காந்தியின் சுதேசிக் கதர்க்கப்பல் கொடி தோணுதே."**[12]

இந்தப் பாடல் அன்றைய பேராயக்கட்சியின் சுதேசி பொருட்கள் ஆதரிப்பு நிலைப்பாட்டையும் அந்நிய பொருட்களுக்கான எதிர்ப்புணர்வையும் தாங்கி நிற்கின்றது.

**"தாழ்த்தப்பட்ட சோதரரை தாங்குவாருண்டோ**

**தாங்குவார் உண்டோ மண்ணில் ஏங்குவாருண்டோ**

**தாழ்த்தப்பட்ட சோதரரை."[13]**

அன்றைய பேராயக்கட்சியின் முகமாக விளங்கிய காந்தியின் அரிசன மக்கள் ஆதரவு நிலைப்பாட்டை விளக்குவதாக மேற்கண்ட பாடல் இருக்கின்றது.

### வாய்மொழிக் கதைகள்

“இந்தியா ஒரு கதைக் களஞ்சியம். தமிழ்நாடு கதைகளின் கருவூலம். ஆதிகால மக்கள் உலகத்தைப் பற்றியும் உலகத் தோற்றத்தைப் பற்றியும் கதைகள் புனைந்தனர். இவைகளே காலப்போக்கில் கற்பனைக் கதைகளாகவும் இதிகாசங்களாகவும் புராணங்களாகவும் மாறின. பழங்கால சமுதாயத்தை அறிய இக்கதைகள் பெரிதும் உதவும்.”[14] இத்தகைய கதைகளை கி.ரா தனது புதினங்களின் பெரும்பாலான இடங்களில் பதிவுசெய்திருக்கின்றார்.

### மாடும் மனிதனும் கதை

கடவுள் ஆதியில் உயிரினங்களைப் படைத்து அவைகளுக்கான வேலையைப் பகிர்ந்தளிக்கும் போது மாட்டைப் பார்த்து, பூமியை உழுவதற்கு நீ கலப்பையை இழுக்க வேண்டும், பாரங்களை இழுத்து

நீ மனிதனுக்கு உதவ வேண்டும், தாய்ப்பால் இல்லாத குழந்தைகளுக்கு அவைகள் செத்துப் போகாமல் காப்பற்ற உன் பெண்வர்க்கங்கள் பாலைத் தந்து அவர்களைப் காப்பாற்ற வேண்டும் என சொல்கின்றார்.

கடவுள் கூறியதற்கு மாடு, என்னைத் தொழுவிலேயே கட்டிப்போட்டு வைக்காமல் தினமும் கொஞ்சம் உலாவ விடவேண்டும். என்னையும் என் வம்சாவளிகளையும் அடித்துத் துன்புறுத்தக் கூடாது. பச்சைக் காலங்களில் தினமும் எங்களுக்கு ஒரு நேரமாவது பச்சை கொண்டுவந்து போட வேண்டும். கம்மங்கதிர் பிணையல் கட்டும்போது எங்களுக்கு வாங்கூடு பூட்டக்கூடாது. வருடத்திற்கு ஒரு முறையாவது எங்கள் தொழுவில் பொங்கலிட்டு எங்களுக்கு மரியாதை செய்ய வேண்டும். அன்றைக்கு எங்களைக் குளிப்பாட்டி கொம்புகளில் மஞ்சள் தடவி குங்குமம் இட்டு, தின்பதற்கு கரும்பு, பொங்கல் கொடுக்க வேண்டும் என சொன்னது.

கடவுளை சாட்சியாக வைத்து, மாடு சொன்னதற்கெல்லாம் ஒப்புக்கொண்டான் மனிதன். அப்போது மனிதனைப் பார்த்து மாடு சொன்னது இப்படியெல்லாம் நீ செய்தால், நான் செத்துப்போனதற்குப் பிறகும் உன் காலுக்குச் செருப்பாக உழைப்பேன் என்று.

இக்கதையை தனது கோபல்லபுரத்து மக்கள் என்ற புதினத்தில் கி.ரா பதிவு செய்துள்ளார். இக்கதை நாயக்கர்கள் எப்படி மாடுகளுடன் நெருங்கி உறவுகொண்டிருந்தனர் என்பதையும் அவர்கள் தங்களது

மாடுகளை எவ்வாறு பராமரித்து அதற்கு பொங்கல் விழா கொண்டாடினர் என்பதையும் காட்டும் விதமாக உள்ளது.

**விராலி வட்டம் கதை**

விராலி வட்டம் என்று ஓர் ஏடு இருக்கின்றது. அதை யாரும் படிக்கக்கூடாது. படித்தால் அவ்வளவுதான், பைத்தியம் பிடித்துவிடும். அந்த ஏட்டைப் பார்த்தாலே போதும் அது தன்னைப் படி படி எனத் தூண்டும். அந்த ஏட்டைப் படித்து முடித்ததும், அம்மன் நேரில் வந்து நிறை அம்மணமாக காட்சி கொடுப்பாள். அதைப் பார்த்ததும் படித்தவர்களுக்கு பைத்தியம் பிடித்துவிடும்.

இந்தக் கதை நாயக்கர் சமூகத்தில் நிலவிய மூட நம்பிக்கை மற்றும் வலிந்து காரணம் கூறும் குணங்கள் இருந்தைக் காட்டுகின்றது.

**துலுக்க ராஜா கதை**

நீளமான கூந்தலை வைத்து அழகாக திகழ்ந்த இந்து மதத்தினை சேர்ந்த துளசி என்கின்ற பெண்ணை, அனைவரின் விருப்பத்திற்கும் மாறாக துலுக்க ராஜாவுக்கு மணம் முடிப்பதற்காக, துலுக்க ராஜாவின் வீரர்கள் அவளது முடியைப் பிடித்துக் கொண்டு இழுத்துச்செல்கின்றனர். அப்போது அந்தப் பெண் தெய்வங்களின் பெயர்களைச் சொல்லிக் கூப்பிடுகின்றாள். அவ்வாறு அவள் தெய்வங்களை அழைத்த உடனே அந்த இடத்தில் பூமி பிளந்து , பூமாதேவி அவளைத் தன்னுள் வாங்கிக் கொண்டாள்.

இந்தக் கதை கோபல்ல கிராமம் என்ற கி.ராவின் புதினத்தில் பதிவுசெய்யப்பட்டுள்ளது. இக்கதையின் மூலம் நாயக்கர்களுக்கு துலுக்கர்களின் மீது இருந்த எதிர்ப்பும் அக்காலத்திய துலுக்கராஜாக்கள் எவ்வாறு இந்து பெண்களைப் பாலியல் வேட்டையாடினர் என்பதும் தெரியவருகின்றது. மேலும், நாயக்கர்களிடம் தனது தெய்வம் தன்னை நிச்சயம் காப்பாற்றும் என்ற நம்பிக்கை நிலவியிருப்பதன் மூலம் அவர்கள் அதீத இந்து புராண தெய்வ நம்பிக்கை உடையவர்கள் என்பதையும் அறியமுடிகின்றது.

**விரளக்கா கதை**

கைவிடப்பட்ட தனது அக்காவிற்காக திருமணமே செய்துகொள்ளாமல் அவளையே பார்த்துக்கொண்டு வாழ்ந்து வந்தவள் தான் விரளக்கா. தனது அக்கா இறந்துபோன பிறகு அக்காவின் மகன்தான் தன்மகன் என்று கருதி அவனை வளர்த்து ஆளாக்கி, அவனுக்குத் திருமணம் செய்து வைக்கிறாள்.

வீட்டிற்கு வந்த மருமகள் அவளுக்கு ஒரு வேளை உணவுகூட அளிக்காமல், வயதான காலத்தில் அவளை வீட்டைவிட்டு அனுப்பிவிடுகின்றாள். மகனும் மனைவி தன்னை விட்டு போய்விடுவாளோ என்று பயந்து எதுவும் சொல்லாமல் மௌனம் சாதித்துவிடுகின்றான்.

வீட்டைவிட்டு வெளியேறிய விரளக்கா பழைய கிணறு ஒன்றில் விழுந்து இறந்துவிடுகின்றாள். நான்கு நாட்கள் ஆனபிறகு அந்தக் கிணற்றுப் பக்கம் ஆடு மேய்க்க வந்தவர்களால் அவள்

பிணமாக மீட்கப்பட்டு அவர்களாலே அடக்கம் செய்படுகின்றாள். இதை அறிந்த மகனும் மருமகளும் செலவு மிச்சம் எனக்கருதி சந்தோசப்படுகின்றனர்.

காலப்போக்கில் விரளக்கா பேயாக வந்து தனது மகனுக்குப் பிறந்த இரண்டு ஆண்குழந்தைகளையும் ஒரு பெண் குழந்தையையும் கொலை செய்கின்றாள்.

அந்தமான் நாயக்கர் புதினத்தில் பதிவுசெய்யப்பட்டுள்ள இக்கதை அறவுணர்வை மையமாகக் கொண்டு திகழ்கின்றது. இதன் மூலம் அக்காலத்திய நீதி, நம்பிக்கை மோசம், பழிக்கு பழி உணர்வு, தவறுக்கு தண்டிக்கப்படுதல், பேய் பிசாசு பற்றிய நம்பிக்கைகள் கோபல்லபுரத்து நாயக்கர்களிடம் இருந்தன என்பது தெரியவருகின்றது.

**சொலவடைகள்**

சொலவடைகள் ஒரு பண்பாட்டின் முக்கிய அங்கம். அவை ஒரு சமூகத்தின் கலாச்சாரம், பழக்கவழக்கங்கள் மற்றும் நம்பிக்கைகளைப் பிரதிபலிக்கக்கூடியவை. மேலும் அச்சமூகத்தின் வரலாற்றையும் பாரம்பரியத்தையும் அறிய பக்கபலமாகத் திகழக்கூடியவை. சொலவடைக்குப் பல பெயர்கள் உள்ளன. அவற்றில் முக்கியமானது பழமொழி. “பழமையான நம்பிக்கைகளையும் வரலாற்றினையும் பண்பாட்டினையும் மனித உணர்வுகளையும் காட்டுபவை பழமொழிகள். பழமொழிகள் ஒரு சமுதாயத்தின் அனுபவ

முதிர்ச்சியையும் அறிவுக் கூறுகளையும் விளக்கும் சான்றாகத் திகழ்கின்றன.”[15]

## நாயக்கர் சமூகம் பயன்படுத்திய சொலவடைகள்

மனித சமுதாயத்தின் வரலாற்றை விளக்கும் வாயிலாகத் திகழும் சொலவடைகளின் முக்கியத்துவத்தைக் கருதி கி.ராவின் புதினங்களில் பதிவாகியிருக்கின்ற சொலவடைகள் அனைத்தும் வகைப்படுத்தப்பட்டு அட்டவணைப்படுத்தப்படுகின்றன.

| வகைகள் | சொலவடைகள் |
|---|---|
| வேளாண்மை | நல்ல நாயக்கனைக் கண்டு நிலம் பயப்படும் |
| | கரிசல்காட்டு சம்சாரிக்கு முதல் எதிரி அருகுதான் |
| | அழுதுகொண்டே இருந்தாலும் உழுதுகொண்டே இரு |
| | பட்ட மரம் பால் சொரியும் |
| | துவரை அடித்த களமாக |
| | நொர நாட்டியம் பிடச்ச வேலை |
| பறவை, விலங்கு | முழு உடும்பு<br>முக்காக் காடை<br>அரை ஆடு<br>கால்க் கோழி |
| | மாட்டுக்கு மயிலைநிறம் பெண்டுக்கு சேப்புநிறம் |

| | |
|---|---|
| | கூட்டுக் காடெய வச்சிக் காட்டுக் காடெயப் பிடி |
| | தேனைத் தொட்டையோ நீரைத் தொட்டையோ |
| | தும்பைய விட்டுட்டு இப்போ வாலெப் பிடிக்க வந்தா எப்படி |
| | மாட்டுக்கு ரண்டு மரக்கால் கம்பம்புல்லு |
| குடும்பம் | கடும் உறவு கண்ணை மறைக்கும் |
| | பொரு ஹிண்டிகி போய்ன காலு பொரணி மாட்டலாடின நோறு |
| | ஏகாதசித் தோசையும் இளைவடியாள் மாகையும் |
| தத்துவம் | மனக்கொண்டது மாளிகை |
| | முப்பது வருசம் வாழ்ந்ததுமில்லை, முப்பது வருசம் கெட்டதுமில்லை. |
| பொருளாதாரம் | த்ராயும் (தராசு) படியும் தெரிவில இருக்கு |
| மருத்துவம் | உருக்குத்தி குத்துனயோ உருக்குலைஞ்சி போனயோ |
| அதிகாரம் | அதிகாரிக பேச்சு அப்பவே போச்சி |
| | போலீஸ்காரம் பேச்சி பொழுதடைஞ்சாப் போச்சி |
| | அதிகாரிக வாக்குறுதிய தண்ணிலதாம் எழுதணும் |
| மாதம், கிழமை | கார்த்திகை மாசம் கழுத்தாம்பிடி |

## தொகுப்புரை

கி.ராவின் புதினங்கள் காட்டும் வாய்மொழிப் பண்பாட்டுப் பதிவுகள் என்ற இம்மூன்றாம் இயலில் கி.ராவின் புதினங்களில் பதிவுசெய்யப்பட்டுள்ள வாய்மொழிப் பாடல்கள், கதைகள், சொலவடைகள் காட்டும் பண்பாடுச் செய்திகள் போன்றவை விளக்கப்பட்டுள்ளன.

**சான்றெண்விளக்கம்**

1. டாக்டர் சு. சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப.28
2. கி. ராஜநாராயணன், கோபல்ல கிராமம், பக்.146-147
3. மேலது, பக்.148-149
4. கி. ராஜநாராயணன், கோபல்லபுரத்து மக்கள், ப.18
5. மேலது, ப.17
6. மேலது, ப.16
7. கி. ராஜநாராயணன், அந்தமான் நாயக்கர், ப.75
8. கி. ராஜநாராயணன், கோபல்லபுரத்து மக்கள், ப.161
9. மேலது, ப.188
10. மேலது, ப.188
11. மேலது, ப.188
12. மேலது, ப.200
13. மேலது, ப.200
14. டாக்டர் சு. சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப.65
15. மேலது, ப.104

# இயல் - 4

# கி.ராவின் புதினங்கள் காட்டும் சமுதாயச் சித்தரிப்புகள்

## முன்னுரை

ஆங்கிலேயர் ஆட்சி, ஆங்கிலேயர் ஆட்சிக்கு முன்பு, ஆங்கிலேயர் ஆட்சிக்கு பின்பு என மூன்று காலகட்டங்களைப் பின்னணியாக கொண்டவை கி.ராவின் புதினங்கள். கி.ரா இப் புதினங்களில் அக்காலத்திய சமுதாய ஏற்றத்தாழ்வுகளையும், ஒடுக்குமுறைகளையும், சமுதாய படிநிலைகளையும் கதையின் ஊடாக பதிவுசெய்திருக்கின்றார். அத்தகைய சமுதாய சித்தரிப்புகள் எவ்வாறு இருக்கின்றன என்பதை இவ்வியலில் தொகுத்தாராயலாம்.

## பள்ளியர் ஒடுக்கப்படுதல்

### வெறியாடல்

தலைவனின் காதல் பிரிவால் தலைவி ஏங்குகிறாள், அவளின் மனவருத்தம் உடல் நோயாக வெளிப்படுகிறது. நற்றாயும், செவிலித்தாயும் அவளின் வெளித்தோற்ற மாறுதல்களைக் கண்டு தன் மகளை நோயிலிருந்து குணப்படுத்த வெறியாடல் மூலம் தலைவியின் நோய்க்கான காரணத்தை கண்டறிவார்கள்.

**“பெய்ம்மணல் வரைப்பில் கழங்கு படுத்து, அன்னைக்கு**

**முருகு என மொழியும் வேலன்; மற்று - அவன்**

**வாழிய இலங்கும் அருவிச்**

**சூர் மலை நாடனை அறியாதோனே" (ஐ.நூறு, 246 -249)**

தலைவியின் நோய்க்கு காரணம் தலைவன் தான் என்பதை அறியாத வெறியாடுபவன் தலைவியின் நோய்க்கு காராணம், முருகன் தான் என கூறுவதாக இச் சங்க இலக்கிய பாடல் அமைந்துள்ளது.

இதற்குச் சற்றும் மாறுபடாமல் ஒரு நிகழ்வு கிடை நாவலில் இருக்கின்றது.

தாழ்த்தப்பட்ட பள்ளியர் சமூகத்தைச் சேர்ந்த சடங்காகாத செவனியும் அவளுடன் ஆடுமேய்க்கும் நாயக்கரின எல்லப்பனும் காதலிக்கின்றனர். இவ்வாறு காதலித்து திரியும் ஒரு நாளில் இருவருக்கிடையும் புணர்ச்சி ஏற்பட்டுவிடுகின்றது. இதனை அறிந்த எல்லப்பனின் வீட்டார் அவனுக்கு நாயக்கர் சமூகத்திலையே சடங்கான பெண் ஒன்று, சடங்காகாத பெண் ஒன்று என இரண்டு பெண்களைப் பார்த்து திருமணம் செய்து வைக்கத் திட்டமிடுகின்றனர். எல்லப்பனும் செவனியை மறந்து, தான் எந்த குற்றமும் செய்யதவன் போல திருமணத்திற்கு எந்த எதிர்ப்பும் தெரிவிக்காமல், இரண்டுப் பெண்களையும் மணம் முடித்துக்கொள்கிறான்.

அப்போதுதான் பூத்துச் சடங்காகி இருந்த செவனி தான் காதலித்த எல்லப்பன் தன்னை மறந்து, இரண்டு பெண்களைத் திருமணம் செய்துக்கொண்டு வருவதை கேள்விப்பட்டு பேய்பிடித்தவள் போல் ஆகிவிடுகிறாள்.

செவனியின் செய்கைகளைக் கண்ட அவளது அப்பாவும் அம்மாவும் யாருமில்லாத காட்டில் தன் மகள் பூத்து சடங்கானதினால் காற்று தோஷம் பட்டுவிட்டதாகக் கருதி, அவளுக்கு உடுக்கை அடித்துப் பேயை விரட்ட திட்டமிடுகின்றனர். அதனை கி.ரா இவ்வாறு வர்ணிக்கிறார்

"பள்ளக்குடியில் செவனியை எருக்கம் விளாரினால் அடித்துக்கொண்டிருந்தார்கள். 'யார் நீ சொல்லு! சொல்லு! என்று கோடாங்கிக்காரன் அவளை அடித்துக்கொண்டே கேட்டான். அவளுடைய தலைமயிர் அவிழ்ந்து நீளமாகத் தொங்கி தரையைத் தொட்டது. நெற்றி தலையிலெல்லாம் ஒரே விபூதி; அதில் கருப்புமை. அவள் தன்னுடைய இரண்டு கைகளையும் தனக்கு முன்னால் தரையில் ஊன்றி, வீர மண்டியிட்டு அமர்ந்திருந்தாள். கண்கள் மூடியிருந்தன. அதிலிருந்து கண்ணீர் சொட்டிக் கொண்டிருந்தது. திரும்பவும் ஒரு பாய்ச்சல் அவளை எருக்கம் விளாரினால் அடித்து முடித்துவிட்டு, கோடங்கி உடுக்கை எடுத்து, அதைத் தடவி விட்டுக்கொண்டு ஒலியை எழுப்பினான். அந்த உடுக்கின் சப்தம் கேட்பவரின் இதயத்தை என்னவோ செய்தது. அவன் பாடினான். அந்தப்பாட்டு கல்லும் கசியும் படியான சோகம் நிறைந்தது. தன்னுடைய கதையை சோகம் ததும்பச் சொல்ல, அது அடியெடுத்துக் கொடுப்பது போல் இருந்தது.

செவனி அந்த உடுக்கின் அடிகேற்ப ஆடிக்கொண்டே 'தன்' கதையைப் பாட்டாக அங்கிருப்பவர்களுக்குச் சொல்லத் தொடங்கினாள்."[1]

இந்த நிகழ்வானது சங்க காலத்தின் தமிழ்சமூகத்தில் இருந்த வெறியாடலுடன் ஒத்துப்போவதைக் கண்டாலும், இதற்கு பின்னால் சாதிய ஒடுக்குமுறையும், பாலியல் சுரண்டலும் இருப்பதைக் காணமுடிகின்றது. மேலும், இந்நிகழ்வுகளிலிருந்து நாயக்கர்கள் பள்ளியர்களையும் பெண்களையும் எவ்வாறெல்லாம் ஒடுக்கி உள்ளனர் என்தையும் குழந்தை திருமணம், பலதார முறை வழக்கம் உடையவர்கள் என்பதையும் அறியமுடிகின்றது.

“'ஆமா, ஆமா, அது உம்ம செம்புலித்தான்!' என்று சொல்லிச் சிரித்து, செவனியைப் பார்த்து கண்ணைச் சிமிட்டுவான்! செவனிக்கு இது ஒரு பெரிய விகடமாகத் தெரியும். ஓஹோ என்று குனிந்து சிரிப்பாள். ஒரு பள்ளி தன்னைப் பார்த்து சிரிக்கலாச்சா என்று கவுண்டர், வாய்க்கு வராத கெட்டவார்த்தைகளால், செவனியை ‘ஆத்தா அக்கா அம்மா என்று ஏசுவார். ஏச ஏச செவனிக்குக் கொண்டாட்டம்தான்; சிரிப்பாணி அள்ளிக்கொண்டு போகும் அவர் தோற்று மூதி, மூதி வெறிவாக்கலங் கெட்ட மூதி!' என்று காறித்துப்புவார்.”[2]

நாயக்கர்களும் கவுண்டர்களும் பள்ளியர்களை ஒடுக்குபவர்களாகவும் பள்ளியர்கள் ஒடுக்கப்படுபவர்களாவும் இருந்ததைக் காட்டும் வண்ணம் மேற்கண்ட கிராவின் சித்தரிப்பு அமைத்துள்ளது.

**தீண்டாமை**

பள்ளியர்கள் நாயக்கர்களை முழங்காலுக்குக் கீழ் மட்டும் தான் தொடவேண்டும் என்ற தீண்டாமையை புலப்படுத்தும் விதமாக "'நீ பள்ளி, என்னைத் தொடலாமா?' என்று கண்ணைச் சிமிட்டி சிரித்துக்கொண்டே கேட்டான்! அவள் அவனுடைய காலைத் தொட்டுப் பிடித்திழுத்து 'உங்க எல்லாருடைய காலுகள், முழங்காலுக்குக் கீழே அது எங்களுக்குத்தான் சொந்தம் தெரியுமா யாருகிட்டேயும் வேணுமானாலும் கேட்டுப் பாருங்க.'.."[3] இந்த சித்தரிப்பு.

"என்ன ஐயா; சாமீ; ஆள் மெலிஞ்ச மாதரி இருக்கியே என்று - தொடக்கூடிய ஜாதியாக இருந்தால் தடவி விடுவார்."[4] இந்த இரண்டு வரிகள் நாயக்கர்கள் தாழ்த்தப்பட்ட ஒடுக்கப்பட்ட சமுகத்தினரிடம் தீண்டாமையைக் கடைப்பிடித்திருக்கின்றனர் என்பதை மேலும் உறுதிப்படுத்துகின்றது.

வைத்தியம் மஞ்சைய்யா நாயக்கர் என்ற கதாபாத்திரத்தின் மூலமும் கி.ரா அந்த காலத்தில் நாயக்கர்கள் தீண்டாமையை கடைப்பிடித்தனர் என்பதை உணர்த்துகிறார்.

கைநாடிப் பார்க்கும் மஞ்சாய நாயக்கர் "தீண்டாத ஜாதியைச் சேர்ந்தவர்கள் வைத்தியத்துக்கு வந்தால் அவர்களுடைய கையின்மேல் போட்டுப் பார்ப்பதற்கு ஒரு மெல்லிய பட்டுத்துணி வைத்திருக்கிறார். அதைப் போட்டுத்தான் நாடி பார்பார்."[5]

**ஊர்குடும்பன்**

உடலாலும் திறத்தாலும் பலம்பொருந்திய தாழ்த்தப்பட்ட சமுதாயத்தைச் சார்ந்த ஒருவன் தான் ஊர்குடும்பன். வெள்ளையர்கள் ஆட்சிக்கு முன்பு நிலவிய ஊர்குடும்பன் முறையினை கி.ரா. தனது கோபல்ல கிராமம் நாவலில் விரிவாக பதிவுசெய்துள்ளார். வீரம் நிறைந்த ஒருவன் எப்படியெல்லாம் சாதியை காரணமாகக் காட்டி ஒடுக்கப்படுகின்றான் என்பதை ஊர்குடும்பன் கதாபாத்திரத்தின் மூலம் அறியமுடிகின்றது.

**ஊர்குடும்பனின் வேலை**

கிராமத்தின் செல்வந்தர் குடும்பத்திற்கு அடிமையாக வேலைச்செய்பவர் ஊர்குடும்பன். அவரது வேலை என்னவென்பதை கிராவின் வரிகளின் மூலம் அறியலாம் “கோவிந்தப்ப நாயக்கர் அப்பொழுதுதான் ஆகாரம் பார்த்து விட்டு வீட்டின் முற்றத்தின் வேம்படியிலுள்ள பலகைக் கல்லில் வந்து உட்கார்ந்து வெற்றிலை போட்டுக்கொண்டிருந்தார். எதிரே கோட்டைச் சுவர் நிழலில் ஊர்க்குடும்பன் அவருக்கு முன்பாக கைகளைக் கட்டிக்கொண்டு நின்று கொண்டிருந்தான். அவன் அந்த வீட்டின் பண்ணைக்காரன். வேலை இருந்தாலும் இல்லாவிட்டாலும் அவன் அங்கே எப்போதும் நின்று கொண்டே இருப்பான், ஒரு உயிருள்ள சிலை மாதிரி.”[6]

**ஊர்குடும்பனின் வீரம்**

கி.ரா சித்தரிக்கக்கூடிய ஊர்குடும்பன் ஒரு கவண் வீரன். அவன் வீரத்தை “குடும்பன் இடுப்பில் சுற்றியிருந்த கவணை அவிழ்த்து

கையில் பிடித்தான். கையில் கவண் வந்தவுடன் அவனை ஆள் அடையாளம் தெரியாது. முகத்தில் உடனே வீரலட்சுமி துதிக்கொண்டுவிடுவாள். கொஞ்ச நேரத்துக்கு முன்னால் பவ்யமாக கையைக் கட்டிக்கொண்டு நின்றிருந்த அந்த மனிதனா இவன் என்று தோன்றும்.

துப்பாக்கி அமுலுக்கு வராத அந்தக் காலத்தில் அவன் கவணில் செய்துக்காட்டிய சாகசங்கள் அதிகம். அதில் சிகரம், இருட்டில் ஒலிவரும் இடத்தை நோக்கி துல்லியமாகக் கவண் எறிந்து குறியை வீழ்த்திடுவான் என்பதே.

ஓடுகிற முயல் அவன் எறிக்குத் தப்பியதே கிடையாது, மலைப்பன்றியை வேட்டையாடும்போது இன்ன இடத்தில் இப்பொ விழப்போகிறது என்று உடம்புறுப்பின் பெயரைச் சொல்லிக் கொண்டே எறிந்து வீழ்த்துவான். போய்ப் பார்த்தால் அவன் சொன்ன இடத்தில் அது தப்பாமல் விழுந்திருக்கும். வானத்தில் பறந்து கொண்டிருக்கும் பறவைகளை கவண் கல்லால் அடித்து வீழ்த்திக் காண்பிப்பான். கண்ணால் நேரில் பார்த்தாலல்லாது அவன் விஷயத்தில் நம்பமுடியாது.

தெல்லுத்தண்டி கல்லிலிருந்து தேங்காய்த் தண்டி கல்வரை கவணில் வைத்து வீசுவான். கல் இரைந்து சத்தங்கொடுத்துக் கொண்டே செல்ல வேண்டுமானாலும் செய்வான். சத்தமே கேட்காமல் எதிரிக்குக் கல் எந்தத் திசையிலிருந்து வருகின்றது என்று தெரியாமல் எறியவேண்டுமானாலும் செய்வான்.”[7] கி.ரா. இப்படிச்

சுட்டிக்காட்டுவதன் மூலம் அறியலாம். எவ்வளவு பெரிய வீரனாக இருந்தாலும் தாழ்த்தப்பட்ட அல்லது ஒடுக்கப்பட்ட சமூகத்தில் பிறந்திருந்தால் அவனது உழைப்பும் வீரமும் மேல்வர்க்கத்தினரால் சுரண்டப்பட்டு வீட்டின் வாசலில் நாய்போல் தான் நிறுத்தப்படுவான். என்பதை ஊர்குடும்பன் கதாபாத்திரத்தின் மூலம் தெளிவாக விளங்கிக்கொள்ளமுடிகின்றது.

**குடிமகள்**

குடிமகள் என்பவர்கள் தாழ்த்தப்பட்ட சாதியினைச் சேர்ந்தவர்கள் இவர்கள் கிராமத்தின் நாயக்கர், கவுண்டர், செட்டியார் முதலிய உயர்சாதியினரிடம் காலையிலும் மாலையிலும் வீடுவீடாக சோறு வாங்கித் தங்கள் பசியினை தீர்த்துக்கொள்பவர்கள்.

ஏன் இவர்கள் வீடுவீடாக சோறுவாங்கி தங்கள் பசியினைத் தீர்த்துக்கெள்ள வேண்டும் என்ற கேள்வி நமக்கு எழலாம் கி.ரா.சித்தரிக்ககூடிய நாவலின் காலகட்டம் ஆங்கிலேய ஆட்சிக்கு முந்தையது. ஆங்கிலேயர்களின் வருகைக்கு முன்பு நம் நாட்டில் தாழ்த்தப்பட்டு தீண்டதகாதவர்களாக்கப்பட்டோருக்கு நிலம் வாங்க உரிமையில்லை. அவர்கள் நிலம் இருக்ககூடிய உயர்சாதியினரை சார்ந்து வாழ வேண்டிய கட்டாயம் இருந்தது.

**குடிமகன்**

குடிமகன் என்பவர்கள் இறப்புச்சடங்குகள் செய்யக்கூடிய தீண்டத்தகாவர்களாக்கப்பட்ட சமூகத்தினர். இவர்கள் சடலங்களை

எறித்தல் போன்ற வேலைகளைச் செய்வர். இந்த உயர்சாதி வீட்டுக்கு இந்த குடிமகன் என்ற வரையறை குடிமகன்களுக்கிடையே உண்டு.

“அந்த நெஞ்சைத் திரும்பவும் குச்சியால் புரட்டிப் புரட்டி, குத்திக் குத்தித் தனியாக ஆமணக்கும் முத்தும் விறகும் போட்டு எரித்து சாம்பலாக்குவான் குடிமகன்”[8]

ஆதரவற்றவர்களின் பிணங்களுக்கு கொள்ளிப் போடுவது குடிமகனின் கடமையாக கருதப்பட்டது.

“அனாதைப் பிரேதங்களுக்கு வழக்கமாக கொள்ளி போடுற குடிமகனையே கொள்ளி வைக்கச்சொல்லி...”[9]

**ஊர்த் தொள்ளாளிகள்**

கிராமத்தின் சம்சாரிகளின் வீட்டுகளுக்குச் சென்று காலையிலும் இரவிலும் வந்து நாள் தவறாமல், வீடு தவறாமல் ஒவ்வொரு கைச் சோறு வாங்கிக் கொண்டு போய் உண்பவர்கள்.

**வெள்ளையரும் சாதியும்**

கோபல்லபுரத்தில் இருந்த நாயக்கர்கள் வெள்ளையர்களை எதற்கெல்லாம் வெறுத்தார்கள் என்பதை கி.ரா. பட்டியலிட்டுள்ளார். அவை

- “முதலில் அவன், ஜாதியில் ஒசந்தவன் இல்லை.
- ரெண்டாவது, அவனுக்குச் சமையலாள் இங்கேயுள்ள கீழ்ச்சாதிக்காரன்தானாம்

- மூணாவது, அய்யோ அதை எப்படிச் செல்றது... நாராயண நாராயண நாராயண... பசுமாட்டின் மாமிசத்தைத் தின்பானமே, நாராயண நாராயண”[10]

கோவில்பட்டி எவ்வாறு ஆங்கிலேயர்கள் காலத்தில் தாலுக்காவாகியது என்ற வரலாற்றை சொல்லவரும்போது, அக்காலத்தில் தாழ்த்தப்பட்டவர்கள் எவ்வளவு பெரிய அதிகாரியாக இருந்தாலும் தங்கள் ஊரில் தங்க வீடு தரமாட்டர்கள் என்ற செய்தி புலனாகின்றது. அன்றைய ஆங்கேலேயர் ஆட்சியின் போது தலுக்காவாக முதலில் இருந்தது ஒட்டப்பிடாரம் தானாம். ஜமாபந்தி தினத்தில் தாலுக்கா அலுவலகத்திற்கு வட்டாட்சியர் வர தாமதமான காரணத்தை ஜில்லா கலெக்டர் கேட்க, வட்டாட்சியர் சொன்ன காரணம் அக்காலத்தில் நிலவிய சாதிய இறுக்கத்தினை விளக்கக்கூடியதாக உள்ளது. அவர் சொன்ன தாமதத்திற்கான காரணம்;

“துரைகளே, நான் தாழ்ந்த சாதிக்காரன் எனக்கு இங்கே இந்த ஊரில் குடியிருக்க யாரும் வீடுதர முன் வரவில்லை. நானும் மிகவும் முயன்று பார்த்தேன். இங்கே வெள்ளாளர் சாதி மக்களுக்குத்தான் மதிப்பு. தாழ்ந்த சாதிக்காரன் பெரிய அதிகாரியாகவே இருந்தாலும் வசிக்க வீடு தரமாட்டார்கள்.” [11]

தாசில்தாருக்கே குடியிருக்க வீடு தராத இந்த ஒட்டப்பிடாரத்துக்கு தாலூகா தலைநகர் தேவையில்லை என்று கோபமாக தலைநகரை கோவில்பட்டிக்கு மாற்றிவிட்டார் கலெக்டர்.

இந்த நிகழ்வின் மூலம் ஆங்கிலேயர்கள் சாதிக்கும், தீண்டாமைக்கும் எதிராக இருந்திருக்கின்றனர் என்பது புலனாகின்றது.

**பகடைகள்**

தங்கள் வாழ்வின் அனைத்து முக்கிய நிகழ்வுகளோடும் கள்ளை பிரதான உணவாக கொண்ட தாழ்த்தப்பட்ட சமூகம் தான் பகடைச் சமூகம். "கள் அவர்கள் ரத்தத்தோடு கலந்திருந்தது. கள்ளைப் புனிதமாக நினைத்து அதை பூஜையில் வைத்து அவர்கள் வணங்கினார்கள். அதனால்தான் அவர்கள் குழந்தை பிறந்தவுடனே அந்தக் குழந்தைக்குத் தாய்ப்பால் கொடுப்பதற்குமுன் கள்ளையே சேனையாக வைக்கின்றனர். கள் இல்லாத வாழ்க்கையை அவர்களால் நினைத்துப் பார்க்கவே முடியவில்லே.

கள்ளுக்கடை வேண்டாம் என்கிற சொல் எல்லோரையும்விட அவர்களைத்தான் அதிகம் திடுக்கிட வைத்தது."[12] என கிரா சொல்வதிலிருந்து கள் அவர்களின் வாழ்வில் எவ்வாறு கலந்திருக்கிறது என்பதை அறியமுடிகின்றது.

ஊரிலிருந்து வெளியூருக்கு சென்று படித்த அரசியல் புரிதல் கொண்ட சில கிராம இளைஞர்கள் காந்தியைக் குருவாகக் கொண்டு சுதந்திரத்திற்காக ஆங்கிலேயர்களை எதிர்த்துப் போராட ஆரம்பித்தனர். காந்தி, கள்ளுக்கடை மறியல் போராட்டத்தை அறிவித்தப்போது கோபல்லபுர இளைஞர்களும் அப்போராட்டத்தை தங்கள் கிராமத்தில் நடத்தினர். இரவு நேரங்களில், கள்ளை அதிகமாக குடித்து பழகிய சமூகமான பகடைகள் குடியிறுப்புகளுக்குள் சென்று

கள் அருந்துவதல் ஏற்படக்கூடிய பாதிப்புகளைச் சொல்லிப் பிரச்சாரம் செய்யத் தொடங்கினர். அவர்களுக்கு நினைத்ததையும்விட நல்ல வரவேற்பும், ஆதரவும் இருந்தது.

“இப்படி இவர்கள் தினமும் வந்து தங்களுக்கு எதிராக தங்கள் குடும்பத்தாரையே 'கிளப்பி' விடுகிறார்கள் என்று தெரிந்துகொண்ட குடிகாரர்களுக்குச் சகிக்க முடியாத எரிச்சலாகவும் கோபமாகவும் இருந்தது. இவர்களை என்ன செய்வது என்றும் தெரியவில்லை. இவர்கள் கிராமத்தின் பெரிய வீட்டுப் பிள்ளைகள். பயமறியாத இளங்கன்றுகள் துடிப்பும் இளரத்தமும் உள்ள இவர்களை என்னதான் செய்வதென்று தெரியாமல், குடிக்கும் இடமான கள்ளுக் கடையில், போதை ஏற ஏற, சவள திட்டித் தீர்த்தார்கள்.

பாலான் பகடை குடித்துவிட்டு வந்து வீட்டில் அவனுடைய பெண்டாட்டி பிள்ளைகளைப் போட்டு கொடூரமாக அடித்துக் கொண்டிருக்கிறான் என்றும், என் சம்பாத்தியத்தில் நாங்குடிக்கிறன் ஊர்க்காரங்களுக்கு என்ன போச்சி; அவங்களோட நீங்களும் சேந்துக்கிட்டீளே என்று சொல்லி அடிக்கிறான் என்று கேள்விப்பட்டதும் நரசிம்மனும் கஸ்தூரியும் இளவட்டங்களோடு அந்த இடத்துக்கு விரைந்தார்கள்.

அங்கே சென்று பார்த்தபோது இவர்களுக்குப் பயமாகவும் தயக்கமாகவும் இருந்தது; பாலானுக்குப் பின்னால் குடிகாரர்களின் கூட்டம் தட்டுப்பட்டது. அவர்களுடைய வாய்களால் ஊர்க்

காரர்களைத் திட்டிக்கொண்டே தங்கள் குடும்பத்தாரை அடித்துக் கொண்டிருந்தார்கள்.

நரசிம்மனும் கஸ்தூரியும் பாலான்பகடைக்குமுன் போய் மறித்ததுபோல் நின்றார்கள். அப்போதுதான் அவர்களுக்குத் தெரிந்தது அவனுடைய சுயத் தோற்றம்! வழக்கமாக பணிவோடும் பவ்யத்தோடும் நிற்கும் அந்த உருவம் இப்போது நிமிர்ந்து உயர்ந்து நின்று இவர்களைப் பார்த்தது.

அவன் கொஞ்சமும் மறைவு ஒளிவு இல்லாமல் கோபத்துடன் இவர்களைப் பார்த்துத் தெலுங்கில் கேட்டான் "எதுக்காக வந்திர என்று. துளிக்கூட மதிக்காமல் மரியாதை காட்டாமல் அப்படி அவன் கேட்டதும் கஸ்தூரிக்கும் நரசிம்மனுக்கும் கோபம் மூட்டிக்கொண்டு வந்தது. மின்னல் வேகத்தில் பறந்து வந்து தாக்குவதுபோல் நரசிம்மன் பாலான் பகடையைப் பாய்ந்து தாக்கினான். மாறி மாறித் தாக்கினான். இளவட்டங்களும் நரசிம்மனோடு சேர்ந்துகொண்டார்கள். அங்கே நின்ற குடிகாரர்களின் கூட்டம் ஓட்டம் பிடித்தது.

அந்த பிரம்மாண்டமான உருவம் கொஞ்சம் நேரத்தில் 'சாமீ எசமான்களே என்னெக் காப்பாத்துங்க' என்று சொல்லிக் காலில் விழுந்தது.

மூணாம் நாள் அதே இடத்தில் அதே நேரத்தில் "காட்சி" வேறு விதமாக அமைந்தது!

நரசிம்மனும் மற்றவர்களும் அதே சக்கிலியர் குடியிருப்புக்குப் போனபோது பாலான்பகடை அதேபோலதான் எதிரே வந்து நின்றான்.

யாருமே எதிர்பார்க்கவில்லை; நெரிசலிலிருந்து ஒரு சரியான கருவக்கம்பை உருவி எடுத்து ஓங்கிக்கொண்டே ‘இண்ணைக்கி நாஞ் சாகணும், இல்லெ நீங்க சாகணும்’ என்று சொல்லி ஆவேசமாக நின்றான் ஒரு மலைபோல. கொத்தனார் சாமி நாயக்கரும் அதேபோல் ஒரு கருவக்கம்பை உருவி எடுத்தார். இதற்குள் பாலான் குடும்பத்தைச் சேர்ந்தவர்களும் மற்றவர்களும் ஓடிவந்து பாலானைச் சேர்த்துப் பிடித்து இழுத்துக்கொண்டு போக முயன்றார்கள். உடம்பின்மேல் விழுந்து அப்பிய அவர்களை அவன் ஒரு குலுக்கலில் உதிர்ந்து விழச் செய்தான்! என்றாலும் மொலோரென்று அவன்பேரில் ஆவேசமாக விழுந்து அவனைத் தள்ளிக்கொண்டு போனார்கள். யாருக்குமே கட்டுப்படுவதாக இல்லை அவன். அவனுடைய வயோதிகத் தாய் வந்து கீச்சுக்குரலில் தன்மீது ஆணை வைத்து ஏதோ சொன்னதுபோல் இருந்தது; அவன் சொன்னது அந்த களேபரத்திலும் கூச்சலிலும் இவர்களுக்குச் சரியாகக் கேட்கவில்லை. அதன் பிறகுதான் கம்பை அவன் தரையில் அடித்து விட்டு, கை கட்டிக்கொண்டு நின்றான்.

மேல்குடியினரின் காதுகளுக்கு இந்த விஷயங்கள் வந்து சேர்ந்தபோது வேறு விதமாகிவிட்டது! அது பரவத் தொடங்கிய போது அதிர்ச்சியும் ஆங்காரமும் ஒரு கொந்தளிப்பே ஏற்பட்டு விட்டது கிராமத்தினுள்.

குடித்துக் கெட்டுப்போக வேண்டாம் என்று கேட்டுக்கொள்ளப் போன கோட்டையார் வீட்டு நரசிம்மனையும் நுன்னகொண்ட கஸ்தூரியையும் பாலான் பகடை கம்பால் சரியானபடிக்கு அடித்துப்

போட்டுவிட்டதாகவும், அந்தப் பிள்ளைகள் பாவம், நிலைமை மோசமாகிக் கிடக்கிறார்கள் என்றும், பிழைப்பார்களா என்பதே சந்தேகம் என்கிறவரைக்கும் போய்விட்டது!

இப்படி ஒரு செய்தியைக் கேட்டதும் ஊரே நிலை குலைந்து போய்விட்டது.

என்ன நடந்தது என்று வீட்டுப் பெரியவர்கள் கஸ்தூரி ரெங்கய்யனையும் நரசிம்மனையும் கூப்பிட்டுக் கேட்டார்கள். நடந்ததை அவர்கள் சொன்னார்கள். என்னதான் இருந்தாலும் ஒரு தாழ்ந்த சாதிக்காரன் மேல்சாதிக்காரப் பிள்ளைகளை, அதிலும் ஊரின் பெருந்தனக்காரங்களின் செல்வப் பிள்ளைகளை இப்படிக் கம்பை எடுத்து ஓங்குவது என்றால்..?

இவர்களென்ன அவன் வீட்டுக்குக் கன்னம் வைக்கப் போனார்களா, களவாங்கப் போனார்களா. அடேய், குடிச்சிக் கெட்டுப்போகாதே என்றுதானே சொல்லப் போயிருக்கிறார்கள்; இது தப்பா?

அவர்களால் இதைப் பொறுத்துக்கொள்ள முடியலை. சக்கிலிய குடியிருப்பையே நொறுக்கிவிடுவது என்று ஊரே கோபத்தோடு கிளம்பி விட்டது. கம்பையும் கத்தியையும் எடுத்துக்கொண்டு ஆவேசமாகக் கிளம்பியவர்களையெல்லாம் சமாதானப்படுத்தி நிறுத்திப் பார்த்தார்கள். இவர்களுடைய கொந்தளிப்பைக் கட்டுப்படுத்த முடியவில்லை. பெரியாட்கள் இவர்களைத் திசை திருப்ப அவர்களுக்குத் தெரிந்த ஒரே வழி உடனே ஊர்க் கூட்டத்தைக்

கூட்டுவதுதான் என்று தீர்மானித்தார்கள். ஊர்க் கூட்டத்துக்கும் அவர்கள் கட்டுப்படவில்லை என்றால் பிறகு என்ன செய்வது என்பதை யோசிப்போம். அவர்களை வகையாகப் பைசல் செய்வோம். நம்மை மீறிய ஆட்களா அவர்கள், என்றெல்லாம் இளவட்டங்களின் கோபத்தை சாந்தப்படுத்தி ஊர்க் கூட்டத்தைக் கூட்ட, சாட்டச் சொன்னார்கள்.

கம்மாய்க் கரையின் அரசமரத்தடி நிழலில் ஊர்கூடியது, என்றுமே இல்லாதபடி ஊர்க் கூட்டம் பெருசாக இருந்தது. பாலான் பகடையும் அவன் குடும்பத்தாரும் சக்கிலியர் குடியிருப்பைச் சேர்ந்த அனைவரும் வந்து ஊர்க் கூட்டத்தின் முன்னால் தரையில் விரிக்கப்பட்ட பாய்போல் கூட்டத்தின் காலில் விழுந்து கிடந்தார்கள். அவர்கள் இப்போது கிராமத்தின் அடைக்கலம்

அவர்களின் சரணாகதி, - அவர்கள் அப்படித் தரையில் மண்ணின் மேல் குப்புறப் படுத்து கைகள் ரண்டையும் நீட்டிக் கும்பிட்டபடியே வெகு நேரமாகக் கிடந்தார்கள் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து கிடந்த அவர்களின் மத்தியிலிருந்து ஊர்ப்பகடையின் தீனமான குரல், ‘சாமி, எசமான்களே எங்களைக் காப்பாத்துங்க காப்பாத்துங்க’ என்று கேட்டுக் கொண்டேயிருந்தது.

‘பார்த்தீரா இவஞ் செஞ்ச காரியத்த. கடசிக் கந்தாயத்தில் பயபுள்ளெ கம்பை எடுத்து ஓங்கீட்டானெ நம்மள அடிக்க’ என்றார் வேலுக்கோனார்.

‘அவங்கள யாருண்ணு நெனைச்சீரு. ஏதோ ஒரு சத்தியத்துக் கில்லெ அவங்க நம்மகிட்ட அடங்கிக் கிடக்காங்க. அவங்களப் பத்தி அவங்களுக்கே தெரியாது பாத்துக்கிடும்! யானைக்குத் தன் பலம் தெரியாதும் பாங்க. திருமால் நாயக்கர் ராஜாவும் கிருஷ்ண தேவராய ராஜாவும் இவங்களே முக்கியமான ஒரு பட்டாள மாக பயிற்சி கொடுத்து மாதாரியான் பட்டாளம்ன்ணே வச்சிருந்தாங் களாக்கும்.’ என்றார் மன்னார் நாயக்கர்.

‘அப்படிக்கு என்ன விசேசத்தை இவங்கள்ட்டெ கண்டாங்க அந்த ராஜாக்கள்?’

‘அதென்ன அப்படிச் சொல்லீட்டீரு. மாடுதிங்கிறவங்கிட்டெ இருக்கிற பலம் ஆடு திங்கிறவங்கிட்டெ இருக்குமா?’ என்று கேட்டார் மன்னார் நாயக்கர்

‘அடங்காத, சேட்டை பண்ணுகிற துலுக்க ராஜாக்களை அடக்கவும் அரமனைக் காவலுக்கும் களவு சில்லரைகளை ஒடுக்கவும் இந்த மாதிரிப் பட்டாளம் பயன்பட்டது. இவங்கட்ட இருந்து தோணியவந்தான்' மதுரை வீரன்’ என்றார்.

ஊர்ப் பெரியாட்கள் தனியாகக் கூடி யோசித்தார்கள். அபராதம் போடலாமா அல்லது அவனைமட்டும் ஊரைவிட்டு போகச் சொல்லிவிடலாமா என்று.

அப்படிப் போகச் சொல்லும்போது எல்லாருமே கிளம்பிப் போய் விட்டால் அப்புறம் கமலையின் கூனைவாலைத் தைக்கவும் களத்து

வேலைகளைச் செய்யவும் காலுக்குச் செருப்புதைக்கவும் என்ன செய்கிறது.

‘அவம் நல்லவனோ கெட்டவனோ எண்ணைக்கு நமக்கு நேரா கம்பெ எடுத்து ஓங்கிட்டானோ, அவனெ இங்க இனி வச்சிப் பாக்கப்படாது’ என்று பெரும்பாலானவர்கள் அபிப்ராயப் பட்டுவிட்டார்கள். தரையில் விழுந்து கிடந்தவர்களின் மத்தியிலிருந்து ஊர்ப்பகடையின் தீனமான அபயக்குரல் கேட்டுக் கொண்டேயிருந்தது.

ஊர்ப் பெரியாள் ஒருத்தர் உரத்த குரலில் இப்படிச் சொன்னார் ‘வெய்யண்டரா பினாண்டி பிட்லால’ (எந்திரிங்கடா பய பிள்ளைகளா). ஆனால் யாருமே எழுந்திருக்கவில்லை. குழந்தை குட்டிகள் பெண்டுகள் உட்பட அனைவரும் அதே நிலையில் கிடந்தார்கள், கும்பிட்ட நீண்ட கைகளுடன்.

ஊர்மணியத்தின் குரல் அதட்டலாக ஒலித்தது:

‘ஏந்திருங்கடா பயபிள்ளைகளா’

சொல்லி வச்சதுபோல எல்லாரும் எழுந்து நின்றார்கள். ரண்டு கைகளும் தலைக்குமேல் கும்பிட்டபடியே இருந்தன. ஆண்களின் மேல் வேட்டி இடுப்பில் கட்டியபடி இருந்தன. ஊர்ப்பகடைதான் சொன்னான்: ‘எசமாங்களே, நீங்க பாத்து அடிச்சா நாங்க எங்க போவம் சாமீ. நாயி செஞ்சது தப்புதாம் மகாபெரிய தப்பு. குடிவெறியிலெ செஞ்ச காரியம். ஊரு என்ன சொல்லுதோ அதுக்கு நாங்க கட்டுப்படுதோம்.’ ஊர்ப் பகடை இப்படிச் சொல்லி முடித்ததும் மீண்டும் அனைவரும் கிராமத்தின் காலில் விழுந்து கும்பிட்டார்கள்.

‘சர்தான் எந்திரிங்கடா பயபிள்ளைகளா" என்று சத்தம் போட்டார் மணியம். அவர்கள் எழுந்து நின்றதும், கிராமத்தின் சார்பாக மணியம் தீர்ப்பைச் சொன்னார். ‘சக்கிலியக் குடியிலிருந்து நூறு ரூபா அபராதமாகச் செலுத்திர வேண்டியது. பாலான் பகடை ஊரை விட்டே ஓடிப்போயிற வேண்டியது’

தீர்ப்பைக் கேட்டதும் மண்ணின்மேல் அனைவரும் முன்னைப் போலவே விழுந்தார்கள். ‘தாங்காது சாமீதாங்காது சாமீ’ என்றான் ஊர்ப்பகடை. அவர்கள் அதேபடி தரையில் கிடக்க, திரும்பவும் ஊர்ப்பெரியாட்கள் கூடி யோசித்தார்கள்.

அபராதத் தொகையைக் குறைத்துக்கொண்டு, பாலான் பகடையை ஊரைவிட்டுப் போகச் சொல்வதில் மட்டும் கவனமாய் இருந்தார்கள்.

கடைசியில் அதுபடிதான் ஆயிற்று. பாலான் ஊரை விட்டே அன்றே ஓடும்படி ஆகிவிட்டது.”[13]

மேற்கண்ட கி.ராவின் கோபல்லபுரத்து மக்கள் நாவலின் சித்தரிப்பு அக்காலத்தில் நிலவிய சாதிய ஒடுக்குமுறைகளையும், தீண்டாமைகளையும், தாழ்த்தப்பட்டோர்களின் வீரம் மற்றும் உழைப்பு எவ்வாறு சுரண்டபட்டது என்பதையும் சகிப்புத்தன்மையற்ற உயர்சாதி அடக்கமுறைகளையும் படம்பிடித்துக் காட்டுகின்றது.

**கிணத்தடியும் சாதிய ஒழுங்கு முறையும்**

அக்காலத்தில் கிணத்தடிக்கென்று சில கட்டுப்பாடுகள் இருந்தன. தாழ்த்தப்பட்டவர்கள் எவ்வளவு தண்ணீர் தாகமானலும்

கிணற்றிலிருந்து தண்ணீரை சேந்திக்குடிக்கக் கூடாது, தண்ணீர் சேந்துவதற்க்கு உரிமையுடைய உயர்சாதியினர் யாராவது வந்து தண்ணீர் சேந்தி கைத்தொடமால் ஊற்றினால் தான் குடிக்கமுடியும்.

கி.ரா சுதந்திரப் போராட்ட காலத்தில் நிலவிய கிணத்தடி ஒழுங்குமுறைகளைக் குறிப்பிட்டுக்காட்டியுள்ளவை இவற்றை மேலும் உறுதிப்படுத்தும்

“கிணத்தடிக்கு என்று சில ஒழுங்குமுறை இருக்கிறது. குடம் நிறைந்தவுடன் மீதி வாளித் தண்ணீரை கீழே கொட்டுவதற்கு முன் யாரும் - தொடாதவர்கள் - குடத்தைக் கொண்டு வந்து மூலையில் வைத்திருந்தால் அதில்தான் ஊற்ற வேண்டும். தொடாதவர்களில் பச்சைக் குழந்தைக்காரி வந்து தண்ணீர் கேட்டால் கட்டாயம் தண்ணீர் ஊற்றி அனுப்ப வேண்டும். கிணத்தடியில் வந்து தாகத்துக்குத் தண்ணீர் கேட்பவர்களுக்கு ‘வர்ணத்தை’த் தெரிந்துக்கொண்டு வாளித் தண்ணீரை அவர்கள் முன்வைப்பது, வாளியைத் தருவது, வாளித் தண்ணீரை கையில் ஊற்றுவது என்றெல்லாம் இருக்கிறது.”[14]

இத்தகைய கிணற்றடி ஒழுங்குமுறைகள் யாவும் சாதிய இறுக்கத்தினை புலப்படுத்திக் காட்டுகின்றன.

**பள்ளிக்கூடமும் சாதியும்**

ஆங்கிலேயர்கள் ஆட்சியாளர்களாக திகழ்ந்த காலம் என்பதால் கோபல்லபுரத்துக்கு இருபாலர் அரசு பள்ளி வந்தது. இப் பள்ளி வருவதற்கு முன்னம் ஏட்டுப்பள்ளிக்கூடம் தான் அக்கிராமத்தின் பிரதான பள்ளியாக இருந்தது. அந்த ஏட்டுப்பள்ளியில் நாயக்கர்கள்

போன்ற உயர்சாதியினர்கள் மட்டும் கற்கமுடிந்தது. ஆனால், ஆங்கில அரசுக் கொண்டு வந்த பள்ளிக்கூடத்தில் அனைத்து சாதியினரும் படிக்கலாம். அரசு பள்ளிக்கூடம் வந்த புதியதில் பள்ளிக்கூடத்தில் சாதியம் எப்படி இருந்தது என்பதை கி.ராவின் விவரணையிலிருந்து நன்கு அறியலாம்.

"ஊர்காரர்கள் வகுப்பறைக்குள் நுழையாமல் இருந்தது பல வகைகளிலும் பிரயோஜனமாக இருந்தது. திராவிடப் பிள்ளைகளை மற்றப் பிள்ளைகளோடு சேர்த்து நெருக்கமாக உட்காரவைக்க முடிந்தது.

படிப்புத் தரத்துக்கு (ரேங்க்) தக்கபடி வகுப்பில் வரிசைப் படுத்தி உட்கார்த்தி வைக்கலாமா என்று நாறம்புநாதன்(தலைமையாசிரியர்) முதலில் நினைத்தார். இப்போதைக்கு அது வேண்டாம் என்று அதைக் கைவிட்டார். மற்ற சாதி மாணவர்களோடு படிப்பிலும் இவர்கள் பின்தங்கி இருக்கிறார்கள். இவர்களை வகுப்பறையிலும் பின் தள்ளினால் தாழ்வு மனப்பான்மை வந்துவிடக் கூடும் என்று எண்ணினார். அதனால் பிள்ளைகளின் பெயர்களின் அகரவரிசைப் படி உட்கார வைத்தார். இப்படியெல்லாம் செய்தும்கூட ஒருநாள், சாய்ந்திரம் விளையாட்டுப் 'பீரீடு'வின்போது ஒரு பெரியவர் வந்து கவனித்துவிட்டார்!

அவருடைய கடுமையான ஆத்திரத்துக்கு இன்னொரு காரணமும் இருந்தது.

பள்ளிக்கூடத்துக்குக் கிழக்கேயுள்ள சிறிய விளையாட்டு மைதானத்தில் பள்ளிப்பிள்ளைகள் விளையாடிக் கொண்டிருந்தார்கள். அந்த நேரத்தில், படப்பில் கூளம் பிடுங்கிக் கட்டிக் கொண்டு வருவதற்காகக் கையில் கயிறு எடுத்துக்கொண்டு அந்த வழியாகப் போன இட்லி ரங்கசாமி நாயக்கர் கண்ணில் அந்தப் பிள்ளைகள் விளையாடிக்கொண்டிருந்த 'மல்லுக்குடட்டி விளையாட்டு பட்டது. இட்டிலிக்கு அடுத்தபடியாக அவருக்குப் ரொம்ப பிடித்தமான விளையாட்டு. இந்த மல்லுக்குடட்டி விளையாட்டைக் கவனிக்க அங்கே போய் நின்றார்.

யாரோ ஒரு பையன் அழகாகப் பாடி வந்தான். வலசாரி இடசாரியாக கொம்பு சுற்றிப் பாடினான். அவன் கலக்கிய கலக்கு இட்லி நாயக்கருக்கு ரொம்பப் பிடித்தது.

மூச்சுக் குடட்டி என்றால் மூச்சு நிற்பதற்குள் நடு எல்லையைத் தாண்டி வந்துவிட வேண்டும்; இது மல்லுக்குடட்டி என்பதால் அந்தப் பயல் மாறி மாறி விதவிதமாகப் பாடிக் குதியாளம் போட்டான். 'வாக்காக இருக்கிறபோது லாவி அமுக்கிவிடலாமே. என்னத்துகாகத் தயங்குகிறார்கள்?' என்று யோசித்தார். 'விட்டுப் பிடிக்கிறது' என்கிற தந்திரமாக இருக்கும் என்று நினைத்து முடிப்பதற்குள் பயலை அப்படியே கப்பென்று ஒரு அமுக்கு; சத்தத்தையே காணோம்! "விட்டுறு” என்கிற சத்தந்தான் வந்தது அவனிடமிருந்து.

அட! பொடிப் பயல்கள்; என்னமா விளையாடுராங்கள்' என்று மகுந்து போன இட்லிரங்கசாமி, விளையாட்டைக் கவனிக்க. உட்கார்ந்துவிட்டார்

பிடிபட்டவன், இவருக்குப் பக்கத்தில் வந்து சிரித்துக்கொண்டே உட்கார்ந்தான். எதிர்வெயிலினால் முதலில் அடையாளம் தெரியவில்லை. பிறகுதான் தெரிந்தது யார் அவன் என்று. ஆனாலும் கேட்டார்; அடே, நீ அப்பிநாயண்டு பேரன்தானே?

ஆமா என்று தலையை ஆட்டிவிட்டு அவன் கவனம் விளையாட்டில் லயிக்க ஆரம்பித்தது.

"ஓம் பேரென்ன?" என்று கேட்டார்.

"எல். சுப்பையா" என்றான் விளையாட்டைப் பார்த்துக் கொண்டு.

எல்.சுப்பையாவின் அணியிலிருந்து இப்போது ஒருவன் பாடிப் போனான், 'பரவாயில்லை' என்று நினைத்துக்கொண்டார் இட்லி. எதிர் வெயிலைத் தடுக்கக் 'கண்ணாடி' போட்டுப் பார்த்த போதுதான் தெரிந்தது தன்னுடைய பேரன் அது என்று. வாயெல்லாம் பல்லானது! கொஞ்ச நேரங்கூட ஆகவில்லை அவருடைய மகிழ்ச்சியில் மண்விழ. யாரு என்று தெரியலை; அந்த மொரட்டுப் பயபிள்ளை, பேரனைச் செந்தூக்காய் அலக்காத் தூக்கி அப்படியே படுக்கப் போட்டு மேலே ஏறி சக்கென்று உட்கார்ந்து விட்டான்.

பாடி வந்தவனை அப்படித் தூக்கிய விதமும், நோகாமல் கீழே போட்டு 'அமுக்கிய விதமும் நல்ல முறையில் இருந்ததால் யார் அவன் என்று விசாரித்தார் எல்.சுப்பையாவிடம். 'கழுவன் மகன்' என்று

பதில் வந்தது. அவ்வளவுதான்; ஆங்காரம் வந்துவிட்டது நாயக்கருக்கு! தொடக்கூடாத ஒரு சாதிக்காரன் தனது பேரனைத் தொட்டுத் தூக்கிக் கீழே போட்டு மேலேயும் ஏறி உட்காருவதா

நேரடியாகவே அவனோடு சண்டைக்குப் போனார். மாணவர்களுக்கு அவர் செய்கிற காரியம் வள்ளிசாகப் பிடிக்கவில்லை. அவருடைய பேரனுக்கே அது எரிச்சலாக வந்தது. ஆனாலும் அவனால் அவரிடம் வாய் திறக்க முடியாது. வீட்டில் செல்வாக்குள்ள தாத்தா அவர்.

சத்தம் கேட்டு ஹெட்மாஸ்டர் ஓடி வந்தார்.

நிலைமையைக் கண்டதும் என்ன என்று புரிந்துகொண்டார் 'இந்த இதுகளுக்குத் தான் வெளியாட்களைப் பள்ளிக்கூட எல்லைக்குள்ளேயே அனுமதிக்கக்கூடாது எங்கிறது' என்று தனக்குள் சொல்லிக் கொண்டே "வாங்க பெரியவரே" என்று மரியாதை கொடுத்து அழைத்து, "வாங்க: உள்ளே வாங்க” என்று கூட்டிக் கொண்டுபோய் உட்கார வைத்துப் பேசினார் ஆதரவாக.

இந்த ஜாதி மத வித்தியாசங்களெல்லாம் நம்ம தலைமுறையோடு போகட்டும். குழந்தைகளிடம் அதுவும் பள்ளியில் வந்து படிக்கிற குழந்தைகளிடம் - காட்ட வேண்டாம். தேசத்தில் இப்பொ ஒரு புதிய விடியல் உண்டாகிக்கொண்டிருக்கிறது. நம்ம பழம்பெருங் கோயில்களுக்குள்ளேயெல்லாம் தாழ்த்தப் பட்டவர்கள் போய் சாமி கும்பிடலாம் என்று ஏற்பட்டுக் கொண்டிருக்கு. பள்ளிக்கூடமும் ஒரு கோயில்மாதிரிதான். இது பொதுமக்களோட

வரிப்பணத்திலிருந்து நடத்தப்படுகிற காரியம். இது எல்லாத் தரப்பு மக்களுக்கும் சொந்தம். இங்கெ வந்து மேல்சாதி கீழ்சாதி என்றெல்லாம் பாராட்டக்கூடாது. நீங்க இதுல பிடிவாதமா இருந்தா, ஒங்க வீட்டுப் பிள்ளையத்தான் நாங்க வகுப்புல தனியா உட்கார வைப்போம். இது அவம் மனசைப் பாதிக்கும். வாத்தியார்க நல்லா சொல்லிக் கொடுக்கிறாங்களா. பாடங்களைப் பிள்ளைக ஒழுங்காப் படிக்கிறாங்களா: இதெத்தாம் நீங்க கவனிக்கணுமே தவிர, பள்ளிக்கூடத்து உள்வெவகாரங்களை நீங்க கண்டுக்கிடக்கூடாது.

இந்தப் பள்ளிக்கூடம் பிடிக்கலையா, வேற பள்ளிக்கூடத்தில் கொண்டுபோயி ஒங்க பேரப்பிள்ளையச் சேத்துருங்க. ஆனா எங்க கொண்டுபோயிச் சேர்த்தாலும் அங்கயும் இதே கதெதாம் நடக்கும்."

எவ்வளவு எடுத்துச்சொல்லியும் இட்லிரங்கசாமி நாயக்கர் 'மசிய'வில்லை; அவரை சமாதானப்படுத்தவே முடியவில்லை. எங்க வீட்டுப்பிள்ளை அப்படிப் படிச்சி என்ன மண்டகப்படி கணக்கு எழுதப்போரானா, எங்களுக்கு நிலம் இருக்கு. அதெக் கிண்டிக் கிளச்சி நாங்க பொளைச்சிக்கிடுவோம் என்று."வாடா போவம் என்று பேரனைக் கூட்டிக்கொண்டே போய்விட்டார்." [15]

மேற்கண்ட கி.ராவின் பதிவுகளிலிருந்து நாயக்கர்களிடம் இருந்த தீண்டாமை உணர்வுகளும், சாதியத்திற்காக படிப்பையே தூக்கி எறியும் அளவிற்கு சாதிப் பற்று அவர்களிடம் இருந்துள்ளது என்பதையும் உணரமுடிகின்றது.

**பிராமணர்களும் சாதியமும்**

பிராமணர்களிடம் சாதியம் எவ்வாறு இருந்தது என்பதையும் அவர்கள் இடைச்சாதியினரை எவ்வாறு மதித்தனர் என்பதையும், தாழ்த்தப்பட்ட வகுப்பினரை எவ்வாறு மதித்தனர் என்பதையும் 'சொக்கையர்' என்ற கதாபாத்திரத்தின் மூலம் சுட்டிக்காட்டுகிறார் கி.ராஜநாராயணன்.

"'சாமி வாங்க' 'சாமி வாங்க' என்று உபசரிப்பு பலம் ஒவ்வொரு 'சாமி வாங்க'வுக்கும் கழுத்து களுக்கிக்கொள்ளாமல் சுமாரான ஒரு தலை அசைப்பு. 'சாமி கும்புடுதென்' என்பவர்களுக்கு இடதுகையை மட்டும் கொஞ்சம் வெட்டியிழுப்பதுபோல வெடுக் கென்று அசைப்பார். அவரது மூதாதையர்கள் 'நெய் ஊற்றி ஊற்றி யாகத்துக்கு அக்கினிவளர்த்த வலது கையால் கும்பிடுவை ஏற்க பதிலுக்கு உயர்த்தினால் பாவம் இவர்கள் சாம்பலாகப் போய் விடுவார்கள் என்றுதான் அப்படி இடதுகையால் அசைக்கிறது"[16]

மேற்கண்ட கி.ராவின் பதிவை ஆராய்ந்து பார்த்தோம் எனில் நமக்குப் புலப்படுவது யாதெனில் ஐயரை சாமி வாங்க என்பவர்கள் எல்லாம் இடைச்சாதியினர். அவ்வாறு அழைப்பவர்களின் அழைப்பை அவர் தலையசைப்பின் மூலம் ஏற்றுக்கொள்கிறார். 'சாமி கும்புடுதென்' என்பவர்களெல்லாம் ஒடுக்கப்பட்ட வகுப்பினைச் சார்ந்தவர்கள். அவர்களின் அழைப்பை இடதுகையை அசைப்பதன் மூலம் வேண்டா வெறுப்பாக ஏற்கிறார். வலது கையால் கும்பிடுகையை ஏற்றால் அவர்கள் சாம்பலாகப் போய் விடுவார்கள்

என்பதைக் காரணமாக காட்டுவதால் ஒடுக்கப்பட்டோர்கள் எல்லாம் பாவம் செய்தவர்களாகவும் பிராமணர்கள் புண்ணியம் செய்தவர்களாவும் கருதப்படுவது தெரியவருகின்றது.

“முக்கியமாக மகாத்மா காந்திபேரில் அவருக்கு ரொம்பக் கடுப்பு. மது குடிக்கக்கூடாது என்று சொன்னதுக்காகக்கூட இல்லை; கோவிலுக்குள் அரிஜனங்களை அனுமதிக்க வேண்டும் என்று சொன்னதுக்குத்தான், ‘நீ ஒரு கோயிலைக் கட்டு, சொந்தத்துல ஒந்துட்டைப் போட்டுக் கட்டு. கூட்டீட்டுப்போ. ம்; கூட்டீட்டுப்பொ பள்ளுப் பாறை பதினெட்டு ஜாதியையும் யாரு வேண்டாங்கா?’ என்று கேட்டு, கொஞ்சம் இடைவெளியிட்டு தலையை அப்படி முன்னும் பின்னும் ஆட்டினார்.”[17]

“ஒனக்கு அதுக்கு வக்கில்லெ... பூர்வீகமாகக் கட்டி வச்சிருக்கிற ஆச்சாரமான கோயிலுள்ளெ பள்ளுப்பறையெ கூட்டுட்டுப் போவேன்னா இங்க இருக்கப்பட்டவன் என்ன சும்பக்கூஞ்ஞ்ணு நெனைச்சுண்டயோ?”[18]

“ஒவ்வொருத்தன் கும்பிடறதுக்குன்னே சாமியுமிருக்கு; கோயிலுமிருக்கு. அதவுட்டுட்டு, நா மீனாச்சியம்மன் கோவிலுக்குள்குள்ளாதாம் போவேன்னுட்டு சொல்றது எதுல சேர்த்தி? காலெ ஒடச்சுப்போடுவம் படவா”[19]

சுதந்திரப் போராட்டக் காலத்தின் போது காந்தியின் மீது, பிராமணர்கள் எவ்வளவு கோபம் கொண்டிருந்தனர் என்பதையும். தாழ்த்தப்பட்ட மக்களை கோயில் நுழைவுப்போரட்டத்தின் மூலம்

அனுமதிக்கவேண்டும் என்ற காந்தியின் நிலைப்பாட்டிற்கு எதிராக செயல்பட்டதையும் கி.ரா சொக்கையர் மூலம் தெரியப்படுத்திருப்பதன் மூலம் அக்காலத்தில் நிலவிய பிராமணர்களின் சாதிய மேலாதிக்கதை அறியமுடிகின்றது.

அதே சமகால சுதந்திரப்பேராட்டத்தில் காந்தியின் கொள்கைகளை ஏற்றுக்கொண்டு தாழ்த்தப்பட்ட மக்களுக்கு ஆதரவாகவும் பிராமணிய சிந்தைகளுக்கு எதிராகவும் சில பிராமண வகுப்பைச் சேர்ந்தோர் செயல்பட்டிருக்கின்றனர்.

அவ்வாறு செயல்பட்டவர்தான் கழுகுமலை அய்யர். அவர் தன்னை சாமீ என்று அழைப்பதை ஏற்க மாட்டார் அண்ணாச்சி என்று அழைப்பதையே விரும்புவார்.

“எந்த ஊருக்குப்போனாலும் முதலில், அவர் சாப்பிட விரும்புவது ஒரு அரிஜன் வீட்டில். கிராமங்களில் இது அநேகமாக அவருக்குச் சாத்தியமாகாது. குடிக்க ஒரு மடக்கு ‘நீச்சத் தண்ணி’ யாவது தாங்க என்று கேட்டு மன்றாடுவார்.

அய்யாமாருக்குக் குடிக்க தண்ணி தந்துட்டு அந்தப் பாவத்தே நாங்க எங்கனெ கொண்டுபோயித் தொலைப்பொம். சும்மாலெ நாங்க படுற ‘லோல்’ போதாதா? என்று அவருடைய காதில் விழாமல் பேசுவார்கள்”[20]

பிராமணர்கள் ஒடுக்கப்பட்டோர்களின் வீட்டில் சாப்பிடுவதை பிராமணர்களே எதிர்ப்பதை விட ஒடுக்கப்பட்டோர்களே எதிர்த்திருப்பதும் தெரியவருகின்றது. இதற்கு காரணம் முற்போக்கு

சிந்தனைக் கொண்ட பிராமணர் ஒருவருக்கு உணவளிப்பதனால் தங்களுக்கு பிற பிராமணர்கள் மற்றும் இடைநிலை சாதியினர்களால் ஏற்படக்கூடிய கடுமையான பின்விளைவுகளை எண்ணி அவர்கள் அஞ்சியதேயாகும்.

## தொகுப்புரை

கி.ராவின் புதினங்கள் காட்டும் சமுதாய சித்தரிப்புகள் என்கின்ற தலைப்பில் அமைந்த இந்த மூன்றாவது இயலனாது கி.ராவின் புதினங்களில் இடம்பெற்றுள்ள சமுதாய சித்தரிப்புகள் எவ்வாறு இருக்கின்றன என்பதை ஆராயக்கூடியதாகத் திகழ்கிறது. ஆங்கிலேயர் காலம், ஆங்கிலேயர்களுக்கு முந்தைய காலம், ஆங்கிலேயர்களுக்கு பிந்தைய காலம் ஆகிய மூன்று காலகட்டங்களில் திகழ்ந்த சாதிய ஒடுக்குமுறைகளும், தீண்டாமையும், சாதியத்தை அடிப்படையாகக் கொண்ட சுரண்டல்களும், ஆதிக்க சாதிய போக்குகளும் கி.ராவின் புதினங்களில் பதிவுசெய்யப்பட்டிருக்கின்றது. இத்தகைய பதிவுகளை வரலாற்றியல் கண்ணோட்டத்தில் பள்ளியர், பகடைகள், குடிமகள், குடிமகன், ஆகிய தாழ்த்தப்பட்ட சமுதாயங்கள் நாயக்கர்களால் எவ்வாறு ஒடுக்கப்பட்டு இருந்தன என்பதையும் அச்சமூகங்கள் எவ்வாறு நாயக்கர்களை சார்ந்து இருந்தன என்பதையும் கி.ராவின் புதினத்தின் வழி ஆராய்கின்றது. ஊர் குடும்பனின் வீரமும் பள்ளியர் பாலியலும் எவ்வாறு நாயக்கர்களால் சுரண்டப்பட்டது என்பதும் கிணத்தடி சாதிய ஒழுங்குமுறைகளும், பிராமணர்களும் பிராமணியமும், பள்ளிக்கூடத்தில் இருந்த சாதியமும் நாவல்களின் பதிவுகள் மூலம் தொகுத்து அளிக்கப்பட்டுள்ளன.

**சான்றெண்விளக்கம்**

1. கி.ராஜநாராயணன், கிடை, ப.57
2. மேலது, ப.33
3. மேலது, ப.34
4. மேலது, ப.87
5. மேலது, ப.128
6. கி.ராஜநாராயணன், கோபல்ல கிராமம், ப.29
7. மேலது, பக். 30-31
8. கி.ராஜநாராயணன், கோபல்லபுரத்து மக்கள், பக்.76-77
9. கி.ராஜநாராயணன், அந்தமான் நாயக்கர், ப.37
10. கி.ராஜநாராயணன், கோபல்லபுரத்து மக்கள், ப.91
11. மேலது, ப.95
12. மேலது, ப.122
13. மேலது, பக்.129-135
14. மேலது, பக்.171-172
15. மேலது, பக்.191-194
16. மேலது, ப.153
17. மேலது, ப.154
18. மேலது, ப.155
19. மேலது, ப.155
20. மேலது, ப.196

# முடிவுரை

கி.ராவின் கரிசல் உலகப் பண்பாட்டுப் பதிவுகள் என்ற தலைப்பில் அமைந்த இவ்வாய்வேட்டின் நான்கு இயலில் ஆய்ந்தறிந்த முடிவுகள் சுருக்கமாக இந்த முடிவுரையில் தரப்படுகின்றன.

முதல் இயலான கி.ராவின் வாழ்வும் பணியும் என்ற இயலின் வாயிலாக கி. ராஜநாராயணனின் தனி வாழ்வு, இலக்கிய வாழ்வு, அவர் படைத்த படைப்புகள், அவர் தொகுத்த அகராதிகள், நாட்டுப்புறக் கதைகள், பெற்ற விருதுகள், தமிழகம் மற்றும் புதுவை அரசுகள் அவருக்கு செய்த சிறப்புகள் ஆகியவை குறித்து விளக்கப்பட்டுள்ளன.

இரண்டாவது இயலான கி.ராவின் புதினங்கள் காட்டும் கம்மவார் நாயக்கர் வரலாறும் பண்பாட்டுப் பதிவுகளும் என்ற இயலில் கம்மவார் யார்? அவர்கள் எங்கிருந்து வந்தனர், ஏன் தமிழகத்திற்கு வந்தனர் என்பதும், அவர்கள் தமிழகத்தில் எவ்வாறு தங்களுக்கான இடத்தை தேர்வுசெய்துக்கொண்டு, இனக்குழுவாக வாழத்தொடங்கி உடைமைச்சமூகமாக மாறினர் என்ற வரலாறு ஆராயப்பட்டுள்ளது. மேலும், தமிழகத்தில் நிரந்தரமாக குடியேறிய ஆந்திராவிலிருந்து வந்த கம்மவார் நாயக்கரின் திருமணமுறை, இறப்புச் சடங்கு, உடன்கட்டை ஏறும் முறை, நீதிவழங்கல், திருவிழா, மருத்துவம் மற்றும் சமயம் குறித்த பண்பாட்டுப் பதிவுகள் விரிவாக கி.ராவின் புதினங்களின் வழி ஆராயப்பட்டுள்ளது.

மூன்றாவது இயலான கி.ராவின் புதினங்கள் காட்டும் வாய்மொழிப் பண்பாட்டுப் பதிவுகள் என்ற இயலில் கி.ராவின் புதினங்களில் பதிவுசெய்யப்பட்டுள்ள வாய்மொழிப் பாடல்கள், கதைகள், சொலவடைகள் காட்டும் பண்பாட்டுச் செய்திகள் ஆராயப்படுள்ளன.

நான்காவது இயலான கி.ராவின் புதினங்கள் காட்டும் சமுதாயச் சித்தரிப்புகள் என்கின்ற இயலில் கி.ராவின் புதினங்களில் இடம்பெற்றுள்ள சமுதாயச் சித்தரிப்புகள் எவ்வாறு இருக்கின்றன என்பதை ஆராயக்கூடியதாகத் திகழ்கிறது. ஆங்கிலேயர் காலம், ஆங்கிலேயர்களுக்கு முந்தைய காலம், ஆங்கிலேயர்களுக்கு பிந்தைய காலம் ஆகிய மூன்று காலகட்டங்களில் திகழ்ந்த சாதிய ஒடுக்குமுறைகளும், தீண்டாமையும், சாதியத்தை அடிப்படியாகக் கொண்ட சுரண்டல்களும், ஆதிக்க சாதிய போக்குகளும் கி.ராவின் புதினங்களில் பதிவுசெய்யப்பட்டிருக்கின்றது. இத்தகைய பதிவுகளை வரலாற்றியல் கண்ணோட்டத்தில் பள்ளியர், பகடைகள், குடிமகள், குடிமகன், ஆகிய தாழ்த்தப்பட்ட சமுதாயங்கள் நாயக்கர்களால் எவ்வாறு ஒடுக்கப்பட்டு இருந்தன என்பதையும் அச்சமூகங்கள் எவ்வாறு நாயக்கர்களை சார்ந்து இருந்தன என்பதையும். ஊர் குடும்பனின் வீரமும் பள்ளியர் பாலியலும் எவ்வாறு நாயக்கர்களால் சுரண்டப்பட்டது என்பதும் கிணத்தடி சாதிய ஒழுங்குமுறைகளும், பிராமணர்களும் பிராமணியமும், பள்ளிக்கூடத்தில் இருந்த சாதியமும் நாவல்களின் வழி விளக்கப்பட்டுள்ளது.

# துணைநூற்பட்டியல்


1. சக்திவேல் சு — நாட்டுப்புற இயல் ஆய்வு
   மணிவாசகர் பதிப்பகம்
   முதல் பதிப்பு - சூலை 2023
   சென்னை - 600 104

2. தமிழ்த்துறை — கரிசல் களம்
   திராவிடப் பல்கலைக்கழகம்
   முதற்பதிப்பு - ஜனவரி 2024
   குப்பம் - 517 426

3. தனஞ்செயன் ஆ — தமிழில் இலக்கிய மானிடவியல்
   உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
   முதற்பதிப்பு - 2014
   சென்னை - 600 113

4. பக்தவத்சல பாரதி — இலக்கிய மானிடவியல்
   அடையாளம் பதிப்பகம்
   முதற்பதிப்பு - 2014
   புத்தாநத்தம் - 621310

5. பஞ்சாங்கம் க — இந்திய இலக்கியச் சிற்பிகள்
சாகித்திய அகாதெமி
முதற்பதிப்பு - 2023
புது தில்லி - 110 001

6. ராமலிங்கம் சு — கிராவின் கரிசல் உலகம்
தமிழ்துறை
டாக்டர்.எம்.ஜி.ஆர்
கல்வி மற்றும் ஆராய்ச்சி
நிறுவனம்
முதற்பதிப்பு - ஜனவரி 2024
சென்னை - 600 095

7. ராஜநாராயணன் கி — அந்தமான் நாயக்கர்
அன்னம் பதிப்பகம்
மூன்றாம் பதிப்பு
டிசம்பர் 2019
தஞ்சாவூர் - 613 007

8. ராஜநாராயணன் கி — கிடை
அன்னம் பதிப்பகம்
இரண்டாம் பதிப்பு
செப்டம்பர்- 2020
தஞ்சாவூர் - 613 007

9. ராஜநாராயணன் கி — கோபல்ல கிராமம்
அன்னம் பதிப்பகம்
பதிமூன்றாம் பதிப்பு
டிசம்பர் 2019
தஞ்சாவூர் - 613 007

10. ராஜநாராயணன் கி — கோபல்லபுரத்து மக்கள்
அன்னம் பதிப்பகம்
பதிநான்காம் பதிப்பு
டிசம்பர் 2022
தஞ்சாவூர் - 613 007

## ஆய்வேடு

1. அங்கயற்கண்ணி ந — கி. ராஜநாராயணன் புதினங்கள் - ஓர் ஆய்வு
சென்னைப் பல்கலைக்கழகம்
செம்டம்பர் 2001

## அகராதிகள் - கலை களஞ்சியம்

1. கந்தையா பிள்ளை, ந.சி — செந்தமிழ் அகராதி
சைவ சித்தாந்தக் கழகம்
சென்னை - 1
வெளியீடு 1962

2. கதிரைவேற் பிள்ளை, நா — தமிழ் மொழி அகராதி
Asia Educational Service
S.T. A. New Delhi – 06
வெளியீடு 1981

3. சாந்தி சாதனா — முறைத்தமிழ் பேரகராதி
சாந்தி சாதனா பதிப்பகம்
125, செமியர்ஸ் சாலை
வெளியீடு 2001

4. வேத்திரக்ஞர் — கலை களஞ்சியம்
தமிழ் வளர்ச்சி கழகம்
சென்னை - 09
தொகுதி 09
வெளியீடு 1963

5. வாழ்வியற்களஞ்சியம் — தமிழ் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்
வெளியீடு 1991

**இணையங்கள்**

https://www.kirajanarayanan.com

https://www.youtube.com/watch?v=gJYw6LQvV5c

https://www.youtube.com/watch?v=80YCvrm0boI

https://www.youtube.com/watch?v=8JUq90p6TE



தமிழக அரசு சார்பில் ரூ. 1 கோடிய 50 லட்சம் மதிப்பில் தூத்துக்குடி மாவட்டம் கோவில்பட்டி யூனியன் அலுவலகத்தில் அமைக்கப்பட்டு முதலமைச்சரால் திறந்துவைக்கப்பட்ட கி.ராஜநாராயணனின் திருவுருவச்சிலையுடன் கூடிய மணிமண்டபம்.

# கி.ராஜநாராயணனின் புதினங்கள்












*கி ராஜநாராயணன் புதினங்கள் - ஓர் ஆய்வு*

https://shodhganga.inflibnet.ac.in/handle/10603/152550

COMPUTER SED

# கி. ராஜநாராயணன் புதினங்கள் – ஓர் ஆய்வு

*சென்னைப் பல்கலைக்கழக*
*முனைவர் (Ph.D.) பட்டத்திற்கான*
*ஆய்வேடு*


பகுதிநேர ஆய்வாளர்

**ந. அங்கயற்கண்ணி,** எம்.ஏ., எம்.பில்., பி.எட்.,
சென்னைக் கிறித்துவக் கல்லூரி
சென்னை - 600 059.

மேற்பார்வையாளர்

**முனைவர் தி. இராசகோபாலன்**
(முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர்
சென்னைக் கிறித்துவக் கல்லூரி)
இந்நாள் முதல்வர்
தாகூர் கலை & அறிவியல் கல்லூரி
சென்னை - 600 044.




**சென்னைக் கிறித்துவக் கல்லூரி**
**சென்னை - 600 059.**

**செப்டம்பர் 2001.**

*இந்த ஆய்வு மேற்கொள்ள மனம் உவந்து இசைவு தந்த கி ராஜநாராயணன் அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றி.* << ந அங்கயற்கண்ணி (நன்றியுரையில்)

கரிசல் களம்

பன்னாட்டு கருத்தரங்கு

கரிசல் இலக்கியத்தந்தை நினைவாக















கி இராவின்

# கரிசல் உலகம்

100

கோவில்பட்டியில் அமைக்கப்பெற்றுள்ள முழு திருவுருவச்சிலையுடன் கூடிய நினைவரங்கம்



## தமிழ்த்துறை






டாக்டர். எம்.ஜி.ஆர்
கல்வி மற்றும் ஆராய்ச்சி நிறுவனம்
நிகர்நிலை பல்கலைக்கழகம்
சிறப்பு தர அந்தஸ்து பெற்ற நிகர்நிலை பல்கலைக்கழகம்
An ISO 21001 : 2018 தர சான்றிதழ் பெற்ற நிறுவனம்
மதுரவாயல், சென்னை-600 095, தமிழ்நாடு, இந்தியா.

ISBN 978-81-984404-0-2

